# தமிழ்நூல் விவர அட்டவணை

# THE MADRAS STATE TAMIL BIBLIOGRAPHY

## 1916-1920



நான்காம் தொகுதி—முதல் பகுதி

VOLUME IV—PART-I



பொதுப் பதிப்பாசிரியர்:

கொண்டல் சு. மகாதேவன், பி.எஸ்ஸி., எம்.ஏ.



தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி இயக்கக வெளியீடு

1975

முதற் பதிப்பு: 1975



## பதிப்பாசிரியர் குழு

1. புலவர் திரு. க. கு. சம்பத்
2. புலவர் செல்வி அரங்க. சோதி
3. திரு. டி. சி. சந்திரபாபு,
எம்.ஏ., பி.எஸ்ஸி., பி.லிப்.எஸ்ஸி., டி.ஆந்த்.
நூலகர்.



தமிழ் நாட்டு அரசாங்கத்திற்காகத் தமிழ்நாட்டு எழுதுபொருள் அச்சுத் தொழில் கட்டுப்பாட்டு அதிகாரியால் பதிப்பிக்கப்பெற்றது.

## பதிப்புரை

இந் நூல் தமிழ்நூல் விவர அட்டவணையின் நான்காம் தொகுதியின் முதல் பகுதியாகும். இதன்கண் 1916 ஆம் ஆண்டு முதல் 1920 ஆம் ஆண்டு வரையுள்ள காலப் பகுதியில் தமிழ் நாட்டில் அச்சிடப்பெற்று, உரிமை பதிவு செய்யப் பெற்ற நூல்களுள், ஆவணக் காப்பகத்தில் கிடைக்கப்பெற்ற நூல்களுக்குரிய விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இப் பகுதியில் டியுவி பொருட்பாகுபாட்டின்படி 700 எண் பகுதிகள் வரையில் குறிக்கப்பட்டுள்ள பொருள்கள் அடங்கியுள்ளன. 1280 நூல்கள் விளக்கங்களுடன் பொருட்பாகுபாட்டின்படி பிரிக்கப்பட்டு ஆசிரியர் அகர வரிசைப்படி அமைக்கப்பட்டுள்ளன.

இதன் அமைப்பு முறை முதல் மூன்று தொகுதியின் அமைப்பு முறையினை அடியொற்றியே அமைந்துள்ளது. ஒரு நூலோடு இணைந்துள்ள பிற நூல்களுக்குரிய வடிவளவும், விலையும் அவை இணைந்துள்ள முதல் பகுதி நூல்களுக்கு உரியவாம். ஆதலின் 'பார்க்க' எனச் சுட்டப்பெற்ற சேர்க்கை நூல்களுக்கு இவ்விரண்டு விவரங்களும் கொடுக்கப் படவில்லை.

இரண்டாம் பகுதியில் இலக்கிய நூல்களும், இவ்விரு பகுதிகளிலும் அமைந்துள்ளனவற்றிற்குப் பொருளகராதி நூல்களுக்குரிய ஆசிரியர் அகர வரிசை, நூல் அகரவரிசை முதலியன வெளிவரும்.

பதிப்பாசிரியர் குழு.

# பொருள் அட்டவணை

## 000 பொது நூல்கள்



## 100 தத்துவம்



## 170 அற நூல்கள்

## 200 சமயம்



## 220 கிருத்துவம்

## 300 சமுதாய சாத்திரங்கள்

## 400 மொழியியல்



## 500 விஞ்ஞானம்



## 600 தொழில் நுட்பமும், பயனுறு கலைகளும்

## 700 நுண்கலைகள்



109-16- II

## கோலன் பகுப்பு முறையில் பொருள் அட்டவணை

| | | | |
|---|---|---|---|
| z | பொதுவியல் | L | மருத்துவம் |
| 1 | பொது அறிவியல் | M | பயனுறு கலைகள் |
| 2 | நூலக இயல் | Δ | சித்தியல் |
| 3 | புத்தக இயல் | N | அழகுக் கலைகள் |
| 4 | செய்தித் தாளியல் | O | இலக்கியம் |
| A | அறிவியல் | P | மொழி இயல் |
| B | கணிதம் | Q | சமயம் |
| C | பௌதிகம் | R | தத்துவம் |
| D | பொறி இயல் | S | உளநூல் |
| E | இரசாயனம் | T | கல்வி |
| F | தொழில் இயல் | U | நில நூல் |
| G | உயிர் நூல் | V | வரலாறு |
| H | புவி இயல் | W | அரசியல் |
| HZ | சுரங்க இயல் | X | பொருளியல் |
| I | தாவர இயல் | Y | சமூக இயல் |
| J | விவசாயம் | Z | சட்டம் |
| K | விலங்கு நூல் | | |

## குறியீடுகளும் அவற்றின் விளக்கமும்

| | | |
|---|---|---|
| உ. ப. | .. .. | உரைநடைநூல் பக்கங்கள் |
| உ. ப. + செ. மூ. எ. | .. | உரைநடை பக்கங்கள் + செய்யுள் மூலம் எண்ணிக்கை. |
| உ. ப. + செ. மூ. ப. | .. | உரைநடை பக்கங்கள் + செய்யுள் மூலம் பக்கங்கள் (அல்லது) உரை நடையும் செய்யுளும் சேர்ந்து பக்கங்கள். |
| செ. மீ. | .. .. | சென்டி—மீட்டர். |
| செ. மூ. எ. | .. .. | செய்யுள் மூலம் எண்ணிக்கை. |
| செ. மூ. உ. எ. | — .. | செய்யுள் மூலமும் உரையும் எண்ணிக்கை. |
| தொ. எ. | .. .. | தொடர் எண். |
| தொ. து. | .. .. | தொகுத்தது. |
| மொ. து. | .. .. | மொழிபெயர்த்தது. |
| i. | .. .. | நூலின் பெயர். |
| ii. | .. .. | பதிப்பாசிரியரின் பெயரும் பதிப் பகமும். |
| iii. | .. .. | நூல் பதிப்பித்த ஆண்டு. |
| iv. | .. .. | நூலின் அளவு (உள்ளடக்கம்). |
| v. | .. .. | நூலின் வடிவ அளவு. |
| vi. | .. .. | விலை. |
| vii. | .. .. | விளக்கம். |
| viii. | .. .. | நூலின் பதிவு எண் குறிப்பு. |
| [ ] | .. .. | இவ்விதம் பகர அடைப்புக்குள் உள்ளவை ஒரு நூலோடு இணைந் துள்ள வேறு நூல்களின் பெயர்கள். |
| ............ | .. | இவ்விதம் புள்ளி இட்ட இடங்கள் விவரம் தெரிய இயலாத பகுதி களும் விளக்கம் எழுதப் பெறாத பகுதிகளும் ஆகும். |
| | .. | ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர், பதிப்பாசிரியர், பதிப்பகங்களைக் காட்டும். |

# தமிழ்நூல் விவர அட்டவணை

## 000 பொது நூல்கள்

### 001 பொது அறிவு

**இருஷ்ணசாமி அய்யர், வி. எஸ்.**

1. i. பொது அறிவு : முதல பதிப்பு ; ii. வி. எஸ். கிருஷ்ணசாமி அய்யர், கோயில்பட்டி ; சைவ சமாஜ் பிரஸ், கோயில்பட்டி; iii. ஆகஸ்ட், 1919 ; iv. உ. ப. 22 ; v. 18×11 செ. மீ. ; vi. 0—1—6 ; vii. ஆரம்ப வகுப்புக்களில் படிக்கும் சிறுவர் களுக்கேற்ற பல பொது அறிவுச் செய்திகள் இதில இடம் பெற்றுளளன. தாவரங்கள், பிராணிகள், தாதுப் பொருள்கள் முதலியன குறித்து பற்பல செய்திகள் தரப் பட்டுள்ளன. நன்னடத்தை விதிகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 799/1919/III.

z

### 050 சஞ்சிகைகள்.

### 059·94811 வழிகாட்டி

**ரெங்கஸ்வாமி அய்யங்கார், ஏ. (தொ. து.)**

2. i. சுதேசமித்திரன் பொது விஷய விளக்கம்—நள வருஷம் 1916—17 ; ii. எ. ரெங்கஸ்வாமி அய்யங்கார் ; சுதேசமித்திரன் பவர் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1916 ; vi. உ. ப. 455 ; v. 25×17 செ.மீ.; vi. ........; vii. உலக நடவடிக்கை களிலும் நாட்டு நடப்புகளிலும் விருப்புடையார்க்குப் பலவகைச் செய்திகள் தொகுத்து அளிக்கும் நோக்கத்துடன் அமைக்கப் பெற்றது. தொகுப்பாசிரியர், ஏ. ரெங்கஸ்வாமி அய்யங்கார் தாமும் பலவற்றைத் தொகுத்து எழுதியதோடு, தம் நண் பர்களைக் கொண்டும் பலவற்றை எழுதுவித்துச் சேர்த்துள்ளார். உலகப் படங்கள், பல தேசப்படங்கள் இதில் இடம் பெற் றுள்ளன. இரண்டு பாகமாக உள்ளது. முதல் பாகத்தில் சிறப்புக் கட்டுரைகளும், சிறு குறிப்புகளும், அனுபந்தமாகப் பல செய்திகளும் உள்ளன. இரண்டாம் பாகத்தில் ஐரோப்பியச் சண்டை நிலைமை விவரிக்கப்பட்டுள்ளது. நள ஆண்டுக்கு (1916—1917) வெளியிடப்பட்டுள்ள இத்தொகுதி போல இனி வரும் ஆண்டுகளிலும் வெளியிடும் தமது விருப்பினை ஆசிரியர் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார். டாக்டர் எஸ். சுப்பிரமணிய ஐயர், இதற்கு முகவுரை எழுதியுள்ளார்.

மக்களுடைய அறிவுப் பெருக்கத்திற்கு உதவும் வகையில் அமைந்த ஒரு செய்தித் தொகுப்பு நூல் இதுவாகும். தமிழில் இது ஒரு புதிய முயற்சி. viii. 163/1916/III.

n441

# 100 தத்துவம்

## 113 சித்தியல்

## 133 [1] சித்தர் பாடல்கள்

அகப்பேய்ச் சித்தர்

i. அகப்பேய்ச்சித்தர் பாடல் : (தொ. எ. 1122 பார்க்க) ; ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சு இயந்திரசாலை, மதுரை ; iii. 1916 ; iv. செ. மூ. எ. 90 ; vii. பராபர விந்துநாத மகிமை, தராதல முற்பத்தி, பஞ்சபூதம், தசநாடி விவரங்களையும், தத்துவத்தின் விவரங்களையும், அட்சரம், சோதி சொரூப தெரிசனம் முத்தி மோட்ச விவரங்களையும் விவரிக்கும் நூல். ஸ்ரீவில்லி புத்தூரைச் சேர்ந்த மகமது சாயபுரம் அருளானந்தப் பாடகர் அவர்கள் குமாரர் சங்கரலிங்க பண்டிதர் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. viii. 60/1916/II.

△28x33

i. அகப்பேய்ச்சித்தர் பாடல் : (தொ. எ. 7 பார்க்க) ; ii. வா. சரவணமுத்துப் பிள்ளை & கே. பெ. சிங்காரவேலு முதலியார் ; ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை ; iii. 1917 ; iv. செ. மூ. ப. 90 ; vii. இதில் ஒவ்வொரு பாடலும் அகப்பேய் என விளித்துப் பாடப்பட்டுள்ளது. ஞானமார்க்க நெறியைப் புலப்படுத்துவது. viii. 445/1917/I.

△28x33

அழுகணிச் சித்தர்

3. i. அழுகணிச் சித்தர் பாடல் ; ii. ஸ்ரீமட்டுவார் குழலாம்பாள் பிரஸ், திருச்சி ; iii. 1916 ; iv. செ.மூ.எ. 32 ; v. 13×11 செ.மீ.; vi. 0-0-6 ; vii. மனித வாழ்க்கை நிலையாமை பற்றிய ஒரு நாடோடிப் பாடல், தத்துவ நெறிகளை ஆராய்ந்து இன்பப் பேற்றுக்கு வழி தருமாறு அறிவுறுத்துவது. பாடல் தோறும், 'என் கண்ணம்மா' என விளித்து, தத்துவப் பொருள்களை எடுத்துரைக்கிறார். viii. 426/1916/II.

△28

4. i. அழுகணிச் சித்தர் பாடல்: முதல் பதிப்பு; ii. பி. நாராயண சாமி - பிள்ளை & பிரதர், சென்னை ; நற்றமிழ் விலாச அச்சி யந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1918 ; v. 0-0-3 ; viii 111/1918/III.

△28

i. அழுகணிச் சித்தர் பாடல்-200 : (தொ. எ. 1123 பார்க்க) ii. வித்துவான், த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச் சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1914 ; iv. செ.மூ.எ. 200 ; vii. முதலில் நாற்பத்தொரு பாடல்கள் 'என் கண்ணம்மா' என விளித்துப் பாடப்பட்டுள்ளன. பின்னர், வாதகற்பம், ஆருதாரம், மெய்ஞ்ஞானம் என்னும் பொருள்களை விளக்குகிறது. திருநெல்வேலி சாலியத் தெருவிலிருக்கும் நல்லகண்ணுக் கோனாரவர்கள் குமாரர் அற்புதானந்தசாமி யவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி அச்சிடப்பட்டது. viii. 181/1916/IV.

△28

இடைக்காட்டுச் சித்தர்

i. இடைக்காட்டுச்சித்தர் பாடல் : (தொ. எ 7 பார்க்க); ii. வா. சரவணமுத்துப்பிள்ளை & கே. பெ. சிங்காரவேலு முதலியார், ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை ; iii. 1917 ; iv. செ. மூ. ப. 130 ; vii. தாண்டவராயக் கோன் கூறுதல், நாராயணக் கோன் கூறுதல், பலரொடு இளத்தல், நெஞ்சொடு இளத்தல், அறிவொடு இளத்தல், சித்தத்தோடு இளத்தல் முதலிய தலைப்புகளின்கீழ் பாடல்கள் உள்ளன. viii. 445/1917/I.

△28x1½

கடுவெளிச் சித்தர்

5. i. கடுவெளிச் சித்தர் பாடல்: முதல் பதிப்பு ; ii. தங்கவேலு முதலியார், பூவிருந்தவல்லி ; சங்கநிதி விளக்க அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1916 ; iv. செ. மூ. எ. 35+1 ; v. 13×11 செ.மீ.; vi. 0-0-3 ; vii. நீதி மொழிகளைப் பற்றிக் கூறப்பட்ட சித்தர் பாடல்களின் தொகுப்பு இந்நூலாகும். "பாவஞ் செய்யாதிரு மனமே—நாளைக், கோபஞ் செய்தே யமன் கொண்டோடிப்போவான்" எனத் தொடங்கி ஆனந்தக் களிப்பு மெட்டில் பாடியுள்ளார். முத்தியை அடைவதற்கு அருகனை ஆத்மாவின் பல துயரங்களை எடுத்து இயம்பு கிறது. viii. 1196/1916/III.

△28

i. கடுவெளிச்சித்தர் பாடல்: (தொ. எ. 7 பார்க்க); ii. வா. சரவணமுத்துப் பிள்ளை & கே. பெ. சிங்காரவேலு முதலியார், ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. 1917; iv. செ மூ. ப. 6; viii. 445/1917/I.

△28

**கல்லுளிச் சித்தர்**

i. கல்லுளிச் சித்தர் பாடல்—66: (தொ. எ. 1124 பார்க்க); ii. இ. ராம. குருசாமிக் கோண், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. ஜூன், 1917; iv. செ. மூ. எ. 66; vii. இக் கல்லுளிச்சித்தர் பாடல் 66-ல் முன் மூன்றும் பாகத்தில் 77வது சாஸ்திரமாக 16 பாட்டு மட்டும் அச்சிடப்பெற்றிருக்கிறது. இப்போது சாப்டூர் சுந்தர மகாலிங்கம் பிள்ளையவர்களிடமிருந்த ஓலையேட்டுப் பிரதிப்படி முன் அச்சிட்டிருந்த பாடல் 16ம் சேர்ந்து இந்த நூல் அச்சிடப்பட்டுள்ளது. "பிர்ம சொரூபத்தை நாடு—உன், கர்ம வினையோட வழிதனைத் தேடு" என்று தொடங்கி இறைநிலை அறியும் வழியைத் தெரிவிக்கிறது. viii. 46/1917/III.

△28

**குதம்பைச் சித்தர்**

i. குதம்பைச்சித்தர் பாடல்: (தொ. எ. 7 பார்க்க); ii. வா. சரவணமுத்துப் பிள்ளை & கே. பெ. சிங்காரவேலு முதலியார், ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. 1917; iv. செ. மூ. எ. 32; vii. 'குதம்பாய்' என விளித்துப் பரஞானத்தைப் புலப்படுத்தும் பாடல்களைக் கொண்ட நூல். குதம்பையாவது ஆபரணம். எனவே குதம்பாய் என்பது ஆபரணத்தை யுடையவளே என்பது பொருளாகும். இறைஞான நிலையினைக் குறிப்பு மொழிகளால் புலப்படுத்துகின்றது. viii. 445/1917/I.

△28x31

6. i. குதம்பைச்சித்தர் பாடல் முதற் பதிப்பு; ii. பி. நாராயண சாமி பிள்ளை & பிரதர், சென்னை; நற்றமிழ்விலாச அச்சி யந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1918; iv. செ. மூ. எ. 32; v. 13×11 செ.மீ.; vi. 0–0–3; viii. 1112/1918 III.

△28x31

**சிவவாக்கியர்**

i. சிவவாக்கியர் பாடல் (தொ. எ. 7 பார்க்க) திருந்திய பதிப்பு; ii. வா. சரவணமுத்துப் பிள்ளை & கே. பெ. சிங்காரவேலு முதலியார்; ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. 1917; iv. செ.மூ. ப. 518; vii. இந்நூலில் ஆசிரியர் பாரமார்த்திகத்தைப்பற்றிக் கூறியுள்ளார். கடவுள் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் இருக்கிறார் என்பது

போன்ற கருத்துக்களைக் கூறுகின்றார். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை நெறிகள் விவரிக்கப் பட்டுள்ளன. viii. 445/1917/I.

△28

நொண்டிச் சித்தர்.

i. நொண்டிச்சித்தர் பாடல்—33 (தொ. எ. 1123 பார்க்க); ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச் சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1914; iv. செ. மூ. எ. 33; vii. ஆசையை விட்டொழித்து ஐம்புலனை அடக்கி, வாசியை வசப்படுத்தும் வழிவகை கூறுவது. இவ் வாசிரியருக்கு மச்சேந்திரநாதர் என்றும் ஒரு பெயருண்டு. ஸ்ரீவில்லிபுத்தூர் மகமது சாயபுரம் போஸ்டு மாஸ்டர் எம். ஆர். இராக்கப் பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பட்டது. viii. 181/1916/IV.

△28

பதினெண் சித்தர்கள்.

7. i. பெரிய ஞானக்கோவை—முதற் பாகம். (சிவவாக்கியர் பாடல் முதலியன) ii. வா. சரவணமுத்துப் பிள்ளை & கே. பெ. சிங்காரவேலு முதலியார்; ஸன் ஆப் இந்தியா அச்சுக் கூடம், சென்னை; iii. 1917; iv. செ. மூ. ப. 352; v. 18×11 செ. மீ; vi. 0—8—0; vii. பதினெண் சித்தர் வேதாந்த விளக்கமாக அருளிய நூல்களின் தொகுப்பு. இதில் சிவவாக்கி யர் பாடல், பட்டணத்துப் பிள்ளையார் திருப்பாடற்றிரட்டு, பத்திரகிரியார் புலம்பல், பாம்பாட்டிச் சித்தர் பாடல், இடைக் காட்டுச் சித்தர் பாடல், அகப்பைச் சித்தர் பாடல், குதம்பைச் சித்தர் பாடல், கடுவெளிச் சித்தர் பாடல், அகஸ்தியர் ஞானம் என்னும் நூல்கள் அமைந்துள்ளன. வா. சரவணமுத்துப் பிள்ளையால் ஞானவான்களுக்கு உபயோகமாகும் பொருட்டுச் சில ஏட்டுப்பிரதிகளிலிருந்தும், அச்சுப் பிரதிகளிலிருந்தும் தொகுக்கப்பட்டது. viii. 445/1917/I.

△28

பாம்பாட்டிச் சித்தர்.

i. பாம்பாட்டிச் சித்தர் பாடல், (தொ. எ. 7 பார்க்க); ii. வா சரவணமுத்துப் பிள்ளை & கே. பெ. சிங்காரவேலு முதலி யார்; ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. 1917 iv. செ. மூ. ப. 129; vii. இதில் கடவுள் வணக்கம் குரு வணக்கம், பாம்பின் சிறப்பு, சித்தர் வல்லபங் கூறல் பொருளாசை விளக்கம். பெண்ணாசை விளக்கம், சரீரத்தின் குணம்; அகப்பற்று நீக்கல், முதலிய தலைப்புகளின் கீழ் பாடல்கள் உள்ளன. ஒவ்வொரு பாடலின் இறுதியடியும் ஆடு பாம்பே" என்று முடிகிறது. viii. 445/1917/I.

△28×26

**பிரம்மானந்த சித்தர்.**

i. பிரம்மானந்த சித்தர் பாடல்—34; (தொ, எ. 1124 பார்க்க) ii. இ. ராம. குருசாமிக் கோன்; ஸ்ரீராமச்சந்திரவிலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. ஜூன், 1917; iv. செ. மூ. எ. 34; vii. இது சாப்டூர் பச்சமலையப்பர் கோயில் பூசாரியும், சுந்தரமகாலிங்கசுவாமி கோயில் சாமியார், பெரியசாமிப் பூசாரி மகனுமான வைத்தியம் பெரியசாமி பூசாரியிடமிருந்து வாங்கிய எட்டுப்பிரதியின்படி அச்சிடப்பெற்றது. பலவகைச் சித்துக்களையும் பெறுவது பற்றி இது விவரிக்கிறது. viii. 46/1917/III.

△28

**விளையாட்டுச் சித்தர்.**

i. கடேந்திரநாதரென்ற விளையாட்டுச் சித்தர் பாடல்—32; (தொ. எ. 1123 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, வித்வான், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1916; iv. செ. மூ. எ. 32; vii. ஆதிசத்திசிவம், சோதி சொரூப விவரங்களும், பிரபஞ்சத்துடன் இடம், பொருள், ஏவல் முதலியவை பொய்பொருள் விளையாட்டென்றும், மெய்ஞ்ஞான மொன்றே மெய்ப் பொருள் என்றும், அதற்குரிய விவரங்களும் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. மதுரை வடக்கு லயன் தெரு, இரண வைத்தியம், பெரியசாமிப் பண்டிதரிடமிருந்து வாங்கிய எட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது; viii. 60/1916/II.

△28

## 133·4 [1] மாந்திரிகம் : ஜாலவித்தை

**இராமசாமி, கே. டி.**

8. i. ஹிப்னாட்டிச சக்கரப்படமும், அனுஷ்டான விதிகளும்: முதற் பதிப்பு; இந்தியா சாஸ்திர கல்விச்சாலை, கீழ்நத்தம், திருநெல்வேலி ஜில்லா; எக்ஸல்சியர் பிரஸ், கீழ்நத்தம்; iii. ஆகஸ்ட், 1919; iv. உ. ப. 4, v. 8×8 செ. மீ.; vi. 0—8—0; vii. இதில் ஹிப்னாட்டிச சக்கரப்படம் ஒன்றும், அதனைப் பயன்படுத்தும் விதிகளும் இடம் பெற்றுள்ளன. ஒவ்வொரு நாளும் காலை மாலை சொல்லவேண்டிய ஆத்மயோக மந்திரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 474/1919/III.

△,87

**சிதம்பரம் பிள்ளை, எம். ஏ., கோவில்பட்டி**

9. i. மாயாஜாலம்: முதற் பதிப்பு; ii. எம். ஏ. சிதம்பரம் பிள்ளை, கோயில்பட்டி; சைவசமாஜ் பிரஸ், கோயில்பட்டி; iii. செப்டம்பர், 1919; iv. உ. ப. 26; v. 15×10 செ. மீ; vi. 1—0—0, vii. இதில் சீட்டுக் கட்டினை வைத்துப் பல வேடிக்கைகளும், ஏமாற்று வித்தைகளும் செய்யும் முறை விளக்கப்பட்டுள்ளது. viii. 1097/1919/III.

△,8

சீநிவாசாச்சாரி, கே.

10. i. ஆரியன் லைகிக் இன்ஸ்டிடூட்டு விளம்பரம்; முதற் பதிப்பு; ii. சுப்ரமணியம் விலாசம் பிரஸ், சென்னை; iii டிசம்பர், 1917; iv. உ. ப. 15; v. 14×11 செ. மீ.; vi. இலவசம்; vii. ஆங்கில மொழியில் ஹிப்னுடிசம், மெஸ்மெரிசம் என வழங்கும் வியத்தகு துறையைக் குறித்து ஸ்ரீவத்சலர் என்பார் தமிழில் மனோவசிய இரகசிய சாஸ்திரம் என ஒரு நூல் எழுதியிருக்கிறார். விளம்பரமாக அமைந்த இந்தச் சிறு வெளியீட்டில் மனோவசிய ரகசிய சாஸ்திரப் புத்தகங்களில் அடங்கிய ஞான ரகசியங்களைச் சுருக்கமாகக் காணலாம். viii. 40 5/1917/ .

△,87

11. i. மனோவசியக் கருவி : முதற் பதிப்பு; ii. கே. சீனிவாசாச்சாரி, சென்னை; ஸ்ரீசுப்பிரமணிய விலாசம் பிரஸ், சென்னை; iii. 1917; iv. உ. ப. 8; v. 14×11, செ. மீ; vi. 0—12—0; vii. ஹிப்னுடிசம் என்னும் மனோவசியக் கருவியைப் பற்றி இதில் விளக்கப்பட்டுள்ளது. மனோவசியம் பழகுவோர்களுக்குத் தக்க அறிவுரைகளும் இறுதியில் தரப்பட்டுள்ளன. viii. 588/1919/III.

△,87

சுப்பராயாச்சார், எஸ். டி.

12. i. மனோவஸ்ய உண்மை: இரண்டாவது பதிப்பு; ii. மனோவசிய உண்மைச் சங்கம், திருநெல்வேலிப் பாலம்; வாணி விலாசம் பிரஸ், திருநெல்வேலி; iii 1914; iv. உ. ப. 64; v. 21×14 செ. மீ. vi. 5—0—0; vii. இந்நூல் ஹிப்னுடிசம் என்னும் மனோவசியத்தைப் பற்றிப் படங்களோடு விளக்குகிறது. மெஸ்மரிசம் பற்றியும் இதில் கூறப்பட்டுள்ளது. ஒரு சில படங்களும் சேர்க்கப்பட்டுள் ன. மானிட சக்தியை அதிகரிப்பதற்கான உபாயங்களையும் கூறுகிறது. viii. 1158/1917/III.

△,87

நாராயணசாமி, ஏ., மாயவரம்.

13. i. ஹிப்னுடிஸம் மெஸ்மெரிஸம்: முதற்பதிப்பு, ii. ஏ. நாராயணசாமி, மாயவரம்; சரஸ்வதி விலாஸ் பிரஸ், மாயவரம்; iii. செப்டம்பர், 1918; iv. உ. ப. 14 v. 14×11 செ. மீ.; vi. 0—3—0; vii. ஹிப்னுடிசம், பற்றியும், மெஸ்மெரிஸம் பற்றியும் இப்புத்தகத்தில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. மனோசக்தியை வளர்ப்பதற்குரிய வழிகள் இதில் கூறப்பட்டுள்ளன. viii. 132/1918/iv.

△,87

14. i. மனோவஸ்ய உண்மை.:—முதற் பாகம்: மூன்றாவது பதிப்பு, ii. மனோவசிய உண்மைச் சங்கம், திருநெல்வேலி பாலம், பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை; iii. 191

iv. உ. ப. 51. v. 21×14 செ. மீ. vi..........; vii. மனோவசியத்தைப் பற்றிய விளக்கம் படங்களுடன் தரப்பட்டுள்ளது. மனோவசிய முறைகள் பல இதன்கண் நன்கு விளக்கப்பட்டுள்ளன. விலங்குகளை வசியப்படுத்தும் முறைகளும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. viii. 363/1919/III.

△,87

15. i. மனோவஸ்ய உண்மை—இரண்டாம் பாகம்: இரண்டாம் பதிப்பு; ii. மனோவசிய உண்மைச் சங்கம், திருநெல்வேலிப் பாலம்; பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1918; iv. உ. ப. 42; v. 21×14 செ. மீ.; vi.......; vii. மனோவசியத்தைப் பற்றியும், அதை ஒருவன் கைக்கொள்வதற்கான வழி முறைகளைப் பற்றியும் ஆசிரியர் மிகவும் விளக்கமாக இப் புத்தகத்தில் கூறியுள்ளார். ஆனந்த வாழ்க்கை என்ற தலைப்பில் மனித வாழ்க்கையின் உயர்ந்த குறிக்கோளைச் சிறந்த முறையில் படிப்போர் உளங்கொள்ளும் பாங்கில் பக்குவமாக எடுத்தியம்பியுள்ளார். viii. 121/1918/IV.

△,87

ராமஸ்வாமி, கே. டி., கீழநத்தம்.

16. i. ஆத்மயோக மனோவசிய சாஸ்திரம்: திருந்திய மூன்றாம் பதிப்பு, ii. கே. டி. இராமஸ்வாமி, கீழநத்தம்; எக்ஸெல்சியர் பிரஸ், கீழநத்தம்; iii. எப்ரல், 1918; iv. உ. ப. 201; v. 18×12 செ. மீ.; vi 1—8—0; vii. ஆத்மா, மானஸ தந்தி, ஆத்மயோக உபாசனை, தூரதருஷ்டி, தூர சிரவணம், ஹிப்னாடிசம், மெஸ்மெரிசம் எனப் பாகுபாடு செய்து இந்நூல் விளக்கம் தருகிறது. தனது பஞ்சேந்திரியங்களையும் மனத்தையும் வசமாக்கி ஆள்வதற்கான சில நடைமுறை விதிகளைப் பற்றியும், மனநிலைக்கேற்ற முறையில் மனோவசியத்தைப் பற்றியும், விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. மனத்தை அடக்கி ஆளக்கூடிய தன்மையைப் பற்றியும் விளக்கம் தரப்பட்டு உள்ளது. viii. 196/1918/II.

△,87

வேலாயுதசுவாமி (மொ. நூ.).

17. i. மலையாள மாந்திரீக ரத்னாகரம்: திருந்திய நான்காம் பதிப்பு; ii. எஸ். பொன்னையாப் பிள்ளை, சென்னை, ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1915; iv. உ. ப. 126; v. 21×14 செ. மீ.; vi. 1—0—0; vii மலையாள மாந்திரீகம் செய்யும் விதங்கள், சூனியம் முதலியவைகளைப் பற்றிய முழு விவரங்களை இந்நூலில் காணலாம். வடமொழியில் தன்வந்திரி பகவான் என்ற தத்தாதிரேய மஹரிஷியால் அருளிச் செய்யப்பட்ட நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு, தேவதா சித்தி என்னும் மலையாள மாந்திரீக

ரத்னாகரம் என்பது இதன் முழுப்பெயர். இந்நூலின் எட்டுப் பாகமும் ஒரே புத்தகமாக அமைக்கப்பட்டுள்ளது மந்திரங்களுக்குரிய சக்கரங்களும் பல கொடுக்கப்பட்டுள்ளன. viii. 800/1916/III.

△,87

18. i மலையாள மாந்திரீக ரத்னாகரம்: திருந்திய பதிப்பு; ii. எஸ். பொன்னையா பிள்ளை, மதுரை; ஸன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1918. iv. உ. ப. 127; v. 22×14 செ. மீ.; vi. 1—0—0; vii.........................; viii. 764/1918/III.

△,87

ஸ்ரீவத்ஸர் ஸ்வாமி

19. i. மனோவசிய இரகசிய சாஸ்திரம், ii. சுவாமி ஸ்ரீவத்ஸர், சென்னை; எஸ்.எஸ்.வி. பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1917; iv. உ. ப. 70; v. 20×14 செ. மீ. vi. 1—4—0; இம்மனோவசிய இரகசிய சாஸ்திர நூலில் பெர்சனல் மேக்னடிசம், ஹிப்னாடிசம், மெஸ்மெரிசம் போன்ற முறைகளை ஆசிரியர் விளக்குகிறார். viii. 318/1917/I.

△,87

ஷர்மா, எம். ஜே.

20. i. பஞ்சரத்நம்: முதற் பாகம்; ii. அஷ்டலட்சுமி விலாச அச்சு இயந்திரசாலை, மதுரை; iii. 1917; iv. உ.ப. 40; v. 21×14. செ. மீ; vi. 0—8—0; vii. இந்நூலில் நாடி ஞானம், இந்திர ஜாலம், மகேந்திரஜாலம், தர்மோபதேசம், ஜீவசரித்திரம், மெஸ்மெரிசம், பத்துவித முக்கிய மருந்துகள் செய்யும் முறை ஆகியவை பற்றியும், ஒரு மகாத்மாவினுடைய உபதேசம், 30 வார்த்தைகள், ஒரு மகாத்மாவினுடைய 5 வார்த்தை, மெஸ் மெரிச மோதிரம் செய்யும் விதம், சந்தியாவந்தன மகிமை, சீட்டு ஜாலம் செய்யும் முறைகள் ஆகியவைகளும் அடங்கி இருக் கின்றன. viii. 654/1917/II.

△,87

21. i. பஞ்சரத்னம்: இரண்டாம் பாகம்; ii. எம். ஜே. ஷர்மா, மதுரை; அஷ்டலட்சுமி விலாச அச்சு இயந்திரசாலை, மதுரை; iii. செப்டம்பர், 1917; iv. உ.ப. 40; v. 22×15 செ. மீ. ; vi. 0—8—0; vii. இந்நூலில் தர்மோபதேசம், டேபிள் சயன்ஸ், பிசாசு ஓட்டும் விதம், பதிவிரதைகளின் குணம், ஈசுவரப் பிரார்த்தனை, நாடிஞானம், ஜீவசரித்திரம், ஜாலவேடிக்கைகள், 38 வியாதிகளுக்கு மருந்து, அத்தி மரத்தின் குணம், விஷக் கடி மந்திரம், மெஸ்மெரிசக் கண்ணாடி ஆகியவைபற்றி விளக் கப்பட்டுள்ளது; viii. 1148/1917/III.

△,87

22. i. யோகவித்யா மெஸ்மெரிஸம்: முதல் பதிப்பு; ii. எம். ஜே. ஷர்மா அண்டு கோ, மதுரை; அஷ்டலட்சுமி விலாசம் பிரஸ், மதுரை; iii. அக்டோபர், 1918; iv. உ.ப. 8; v. 23×14 செ. மீ.; vii 0—1—0; vii. இவர் வெளியிட்ட பஞ்சரத்தினம், நூலின் ஒரு பகுதியே இது. viii. 449/1918/IV.

△,87

## 133·5 சோதிடம்

### ஆறுமுக முதலியார், வி.

23. i. அனுபவசோதிட ரத்னம்; ii. வீ. ஆறுமுக முதலியார், திருநெல்வேலி; சாரதா அச்சு இயந்திரசாலை, பாளையங்கோட்டை; iii. செப்டம்பர், 1919; iv. உ.ப. 118; v. 18×11 செ. மீ.; vi. 1—0—0; vii. சோதிடம் கற்போர்க்கு இஃதோர் நல்லாசானாகப் பயன்படும். எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் உரைநடையில் தொகுத்து எழுதப்பட்டதாதலின் இதற்கு அனுபவ சோதிட இரத்தினம் எனப் பெயரிடப்பட்டதாகத் தெரிகிறது. பல சோதிடசாஸ்திரங்களையும் பார்வையிட்டு அனுபவத்துக்குச் சரியான வைகளைச் சுருக்கமாகவும், தெளிவாகவும் இந்நூலில் ஆசிரியர் தந்துள்ளார். viii. 895/1919/III.

△2:864

### ஏகாம்பர முதலியார், செஞ்சி (மொ. து.)

24. i. அனுபோக பிரசன ஆருடம்: திருந்திய ஐந்தாம் பதிப்பு; ii. எஸ். பி. இராஜாராம் அண்டு கம்பெனி, சென்னை; லன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. மார்ச், 1918; iv. செ. மூ. உ.ப. 180; v. 21×14. செ.மீ; vi. 0—8—0; vii; ஆருடத்தைப் பற்றிய முற்றிலும் தெளிவான தொரு செய்யுள் விளக்கமாகும் இந்நூல, உரையுடன் கூடியது. சில சோதிடர்களின் வேண்டுகோளின்படி செஞ்சி ஏகாம்பர முதலியார் வடமொழியில் சொல்லப்பட்ட பலசோதிட உண்மைகளைத் திரட்டி, மொழி பெயர்த்து இந்நூலை ஆக்கியுள்ளதாகத் தெரிகிறது. முகவுரையில் நூலின் பெருமையும், சொல்வோர் மகிமையும், கேட்போர் இயல்பும் செய்யுள் வடிவில் தரப்பட்டுள்ளன. ஆருடங் கேட்பவர்களின் மொழியும் பிரச்சனைகளின் அட்டவணையும் நூல் முதலில் தரப்பட்டிருக்கிறது; viii. 98/1918/II.

△2:864

25. i. சோதிட கோட்சார சிந்தாமணி—மூலமும் உரையும்: முதல் பதிப்பு; ii. எம். கன்னையா அண்டு கம்பெனியார், சென்னை, கலைக்கியான முத்திராக்ஷரசாலை, சென்னை; iii. செப்டம்பர், 1920; iv. உ.ப.+செ. மூ. ப. 120; v. 21×14 செ.மீ.; vi. 1–0–0; vii. சோதிடத்தைப் பற்றியச் செய்திகள் பாடல்கள் வாயிலாக விளக்கப்பட்டுள்ளது. சோதிடம் பயில்வோருக்குப் பெரிதும்

பயனுடைய புத்தகம். பற்பல கணித நூல்களைக் கொண்டு ஆராய்ந்து எழுதப்பட்டது இந்நூல். பாடல்களுக்குரிய உரை விளக்கத்தையும் ஆசிரியரே எழுதியுள்ளார்; viii. 345/1920/iv.

△ 2:864

**சத்யாச்சாரியார்**

26. i. ஜாதக பஞ்சசித்தாந்தம்—முதற் பாகம்: முதற் பதிப்பு; ii. ரா. தாமோதர நாயுடு, திருவையாறு; அழகர் விலாச அச்சுக் கூடம், திருவையாறு; iii. மார்ச், 1918; iv. உ.ப. 89; v. 21×14 செ. மீ.; vi. 0—12—0; vii. ஜாதக பஞ்சசித்தாந்தம் என்ற வடமொழி நூலின் மொழி பெயர்ப்பே இது. இதனை மொழி பெயர்த்தவர் திருநெய்த்தானம் ஆ. தி. சீநிவாஸாச் சாரியாராவர். சோதிடம் நீண்ட காலமாக எல்லா நாடுகளிலும், வானவியல், சோதிடம், ஆருடம் என்ற மூன்று பிரிவினை உடையதாக இருந்து வருகிறது. நட்சத்திர சித்தாந்தமும் ஒவ்வொரு கிரகமும் இருக்கும் நட்சத்திர திரிகோணங்களில் குரு சனி வருங்காலம் ஏற்படும் பலன்களும், தசாபலனும், புத்தி பலனும், ஓர் உதாரண சாதகங்கொடுத்து இராசியினுலும், நவாம்சத்தினுலும் அதற்கேற்படும் பலன்களைச் சொல்லும் வழியும், விரிவான துவாதசதசா பலன்களும், இராகு, கேதுக்களின் பலன்களும், கோட்சார பலன்களும் விரிவாக இந்நூலில் தரப் பட்டுள்ளன. இந்நூலின் இரண்டாம் பாகமும், இவ்விரண்டு பாகங்களின் வடமொழி மூலமும் அச்சாகி இருப்பதாகத் தெரிகிறது; viii. 1041/1918/I.

△ 2:864

**சுந்தரானந்தர்**

27 i. கெற்பசிந்தாமணி என்னும் சோதிட காவியம்; ii. த. குப்பு சாமி நாயுடு, மதுரை; சி. ராமசந்திர விலாசம் அச்சியந்திர சாலை; iii. 1919; iv. உ.ப.+செ. மு. ப. 404+16; v. 21×14 செ. மீ.; vi. 3—0—0; vii. குழந்தை கரு உற்பத்தியான நாட்கள், குழந்தை பிறந்த சமய பலன், துருவசமய பலன்கள், சாதக இலக்கின பலன், மகாதிசை பலன், பெண்கள் ருது வான பலன், அஷ்டவர்க்கப் பலன்கள், விவாகப் பொருத்தங்கள் திசா புத்தி, யந்திர சித்திர பலன், பூர்வபட்ச அமரபட்ச கோசார பலன் முதலியன இந்நூலின்கண் தெளிவாக விளக்கப் பட்டுள்ளன; viii. 96/1920/I.

△ 2:864

28. i. சோதிட முகூர்த்த விதானம் : முதற் பதிப்பு; ii. பச்சையண சாஸ்திரி; ஷாஹுல்ஹமீதய்யா அச்சு இயந்திரசாலை; iii. 1917; iv. உ.ப. 216; v. 21×14 செ. மீ.; vi. 0—8—0; vii இந்நூலில் சகல விதமான சகுணம், சோதிடம், பொருத்தம், குறிப்பு, பலாபலன் ஆகியவை விரிவாகக் கூறப்பட்டுள்ளன. பல சோதிட நூல்களை ஆராய்ந்து தொகுத்து எழுதப்பட்ட

உரைநடை நூல். பச்சைய சேகரம் என்றும் இதற்கு ஒரு பெயருண்டு. பொருள் அட்டவணை அகராதியடைவில் முதலில் தரப்பட்டிருக்கிறது. viii. 720/1917/IV.

△ 2:864

முனிசாமி ஆச்சாரி, எஸ்., மதுரை

29. i. தினகர சோதிஷம்; ii. த. குப்புசாமி நாயுடு; ஸ்ரீகிருஷ்ண விலாச அச்சியந்திரசாலை, திருமங்கலம்; iii. 1915; iv. உ.ப. 56 ; v. 21×14. செ. மீ.; vi. 0—8—0; vii. புவனத்தின்கண் ஜீவர்கள் பிராரத்துவ கன்மங்களால் ஜனன முதலேற்படுகின்ற சுகதுக்கங்களையும் திரி காலங்களில் யோக, அவயோக, அபமிருத்த வாதி சம்பவங்களைத் தெரிந்து கண்மகொண்ட விதிப் படி பிராயச்சித்த பூர்வமாக நிவர்த்தித்துக் கொள்ளும் நியமங்கள் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. பல நூல் களைக் கொண்டு ஆராய்ந்து தெளிவு பட எழுதிய புத்தகம். பலவற்றைச் சக்கர ரூபமாயும், பட்டிகை உருவத்தி லும் அமைத்து விளக்கம் தந்துள்ளார். "முன்னோர் சொன்ன முது மொழியாகிய சர்வதோ பத்திரம்" என்றும் இதற்குப் பெயர் உண்டு; viii. 555/1916/II.

△ 2:864

ராமசாமி, கே. டி., கீழநத்தம், திருநெல்வேலி

30. i. ஸ்பிரிட் ஆருட மந்திரக் கருவி ; ii. .................. iii. 1919 ; iv. உ.ப. 3 ; v. 17×11 செ. மீ. ; vi..... .. ; vii. ஸ்பிரிட் ஆருட மந்திரக் கருவியின் அப்பியாச முறை இதன்கண் தெளிவாக்கப்பட்டுள்ளது. ஏகாக்கிர சித்தத்துடன் இருந்து பிதுர்லோகவாசிகளுடன் பேசும் வகையினைக் கூறு கிறது; viii. 3/1920/I.

△ 2:864

31. i. ஜோதிட கணித மஞ்சரி : முதற் பதிப்பு ; ii. க. சந்தனம் சேர்வை, விருதுப்பட்டி ; ஸ்ரீராமானுஜம் பிரஸ், தென்காசி ; iii. பெப்ரவரி, 1920 ; iv. உ. ப. 34 ; v. 16×10 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. .......... ; viii. 764/1920/I.

△ 2:864

## 133·5 [1] சாமுத்திரிகா இலட்சணம்

ராமஸ்வாமி, கே. டி., டாக்டர், கீழநத்தம், திருநெல்வேலி ஜில்லா

32. i. முகக்குறி சாஸ்திரம் : முதற் பதிப்பு ; ii. கே. டி. ராமசாமி, கீழநத்தம் ; எக்ஸல்ஸியர் பிரஸ், கீழநத்தம் ; iii. மே, 1920 ; iv. உ. ப. 66 ; v. 16×11 செ. மீ. ; vi. 1–0–0 ; vii. ஒரு

வரின் முகத்தைக் கொண்டும், மற்ற உறுப்புகளைக் கொண்டும் அவரவரின் பண்புகளை அறியும் வகை இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது; viii. 492/1920/II.

△2 : 864

33. i. ஸ்திரி புருஷ சாமுத்திரிகா லக்ஷணம் : இரண்டாம் பதிப்பு ; ii. பூ. வி. அப்பாத்துரை முதலியார் ; அமெரிக்கன் டைமெண்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1920 ; iv. உ. ப. 96 ; v. 17×12 செ. மீ. ; vi. 0–10–0 ; vii. ஸ்ரீ சுப்பிர மணியக் கடவுள் அகத்திய மகாமுனிவருக்குத் திருவாய் மலர்ந் தருளியவற்றிற்கு ஸ்திரி புருஷ சாமுத்திரிகாலக்ஷணம் என்று பெயர் தரப்பட்டிருக்கிறது. அங்கக் குறியிலக்கணங்களைப் பற்றிய விளக்கத்தினைக் கொண்டது இந்நூல். கீர்வாண மொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட பிரதிக்கு இணங்க இந்நூல் செய்யப் பெற்றதாம்; viii. 545/1920/IV.

△2 : 864

## 133·5 [1] தொடுகுறி சாத்திரம்

சகாதேவர்

34. i. தொடுகுறி சாஸ்திரம் : முதற் பதிப்பு ; ii. ஜி. எம். மீனாட்சிசுந்தர முதலியார் ; சூரியோதயம் பிரஸ், மதுரை ; iii. செப்டம்பர், 1917 ; iv. உ.ப.+செ.மூ.ப. 24 ; v. 21+14 செ.மீ.; vi. 0–4–0 ; vii. இந்நூலில் பல எண்ணிக்கைகள் கொண்ட கட்டங்கள் உண்டு. இதை வைத்துக்கொண்டு தொடு குறி சாத்திரம் விளக்கப்பட்டுள்ளது. கட்டங்களில் குறிப்பிடப் பட்டுள்ள ஒவ்வோர் எண்ணுக்கும் உரிய பலன்கள் பாடல் வடிவில் கொடுத்து அதற்குரிய வசனமும் தரப்பட்டிருக்கிறது. இதனைப் பார்க்குமுன் செய்யவேண்டிய வந்தனை வழிபாடு களும், பார்க்கத்தக்க முறைமையும் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 350/1917/IV.

△2 : 864

## 133·5 [1] பல்லி சாஸ்திரம்

சகாதேவர்

35. i. கெவுளி சாஸ்திரம் : முதற் பதிப்பு ; ii. ஏகாம்பரம், செஞ்சி ; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஜூன், 1919 ; iv. செ.மூ.உ.ப. 16 ; v. 21×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இதில் கெவுளி உடம்பின்மேல் விழுகின்றதால் உண்டாகின்ற பலாபலன்களைப் பற்றிய முழு விவரமும் கூறப் பட்டுள்ளது. பல்லி –சொல்வதால் உண்டாகும் பலன்களுக் குரிய விளக்கங்களும் பாடல் வடிவில் இதன்கண் அமைந் துள்ளன. ஆந்தை சிறலால் நேரும் பலனும் இறுதியில் கூறப்பட்டிருக்கிறது; viii. 690/1919/IV.

△2 : 864

36. i. **கெவுளி சாஸ்திரம் :** முதற் பதிப்பு ; ii. சங்க நிதி விளக்க அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1919 ; iv. செ.மூ.உ.ப. 16 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. பாடலில் தரப்பட்டுள்ள கருத்து பொழிப்புரையாக எழுதப் பட்டிருக்கிறது; viii. 923/1919/IV.

Δ2 : 864

## 133·5 [1] ருதுநூல் சாஸ்திரம்

**முனுசாமி முதலியார், சிறுமணவூர்**

37. i. ருது நூல் சாஸ்திரம் : முதல் பதிப்பு ; ii. நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஆகஸ்ட், 1919 ; iv. உ.ப. 8 ; v. 20×13 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. பெண்கள் ருதுவாகின்ற கால பலன் குறிக்கும் முழு விவரங்களும், தீயவை நேர்ந்தால் அதற்குரிய பரிகாரங்களும் இந்நூலில் விரிவாக எழுதப்பட்டுள்ளன. பெண்கள் ஜாதகம் என்றும் இதற்கு ஒரு பெயர் உண்டு. viii. 721/1919/IV.

Δ2 : 864

## 133·53 அகராதி (சோதிடம்)

**அரங்கசாமி பிள்ளை, நா.**

38. i. சோதிட அகராதி ; ii. கே. பி. சிங்காரவேலு முதலியார் ; ஸ்ரீ சுப்பிரமணிய விலாசம் பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப.+செ.மூ.ப. 88 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. சோதிட சாஸ்திரத்தில் வரும் பற்பல சிறப்புச் சொற்களின் பொருளை விளக்குவது இந்த அகராதி. தமிழிலுள்ள சோதிட சாத்திரப் புத்தகங்களை நோக்கி, அவைகளிலுள்ள கடுஞ்சொற்களுக்குப் பொருள் தருவது. பேரகராதி, சதுரகராதி, யாழ்ப்பாணத்தகராதி, நிகண்டு முதலிய நூல்களிலுள்ள சோதிடச் சொற்களையும் இதனுள் தொகுத்துள்ளார். தவிரவும், சோதிட யோகப் பொருளகராதியும், சோதிடக் கடல் போதினியும் இதில் அடங்கியுள்ளன; viii. 715/1917/III.

Δ2 : 864

## 133·8 தொலைவிலுணர்தல்

**ஸ்ரீவத்ஸர், ஸ்வாமி**

39. i. ஞானதிருஷ்டி : முதற் பதிப்பு ; ii. ஸ்வாமி ஸ்ரீவத்ஸா, சென்னை, ஸ்ரீ சுப்பிரமணிய விலாசம் பிரஸ், சென்னை ; iii. மே, 1917 ; iv. உ.ப. 43 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–8–0; vii. 'ஞான திருஷ்டி' பற்றி 10 அத்தியாயங்களில் விளக்கப் பட்டிருக்கிறது. 'ஞான திருஷ்டி' என்னும் பதத்திற்கு ஞானக் கண்ணால் தெளிவாய்ப் பார்ப்பது என்பது பொருள். இரகசியம்,

தரிசனம், தீர்க்க தரிசனம், சுய அறிவு முதலியவற்றை வளர்ப்பதற்குரிய மார்க்கங்களைப் புலப்படுத்துவது. இந்நூலில் குறித்த முறையில் பயிற்சிகளைச் சரிவரச் செய்தால் மட்டுமே நற்பயன் கூடும் என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்; viii. 744/1917/II.

△2 : 864

## 170 [1] அறநூல்: கவிதை

ஆறுமுகநயினார் பிள்ளை, த., திருநெல்வேலிப்பேட்டை.

40. i. தெளிவு மதித் திறவுகோல்: முதல் பதிப்பு; ii. கே. மாயாண்டி பிள்ளை, மதுரை; மீனாக்ஷிமணி விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. அக்டோபர், 1920; iv. செ.மூ எ. 51; v. 21×14 செ.மீ.; vi. 0–1–0; vii. இந்நூல் பரமாத்மாவை அடைவதற்கான நல்வழிகளை விளக்கும் பாடல்களைக் கொண்டது; ஆனந்தக் களிப்பு மெட்டில் 'ஒன்றே பரம் பொருள்' என்று தொடங்கி உலக மாந்தரின் தீய போக்குகளைக் கடிந்து நன்னெறியொழுக அறிவுறுத்துகிறது; viii. 113/1920/IV.

R4

ஏறுபடிமஸ்தான்

41. i. மெஞ்ஞானக் கண்மணி: முதல் பதிப்பு; ii. கிருஷ்ண விலாச பிரஸ், இராமநாதபுரம்; iii. ஆகஸ்ட், 1919; iv. செ.மூ எ. 40; v. 21×14 செ.மீ.; vi. 0–0–9; vii. உண்மையான ஞானத்தை விளக்கும் பாடல்களைக் கொண்ட நூலாகும் இது. மனித வாழ்வின் நிலையாமையை எடுத்துக் காட்டி நல்லறம் நாடுமாறு அறிவுரை தருகிறது. viii. 962/1919/IV.

R4

கபிலர்

42. i. தத்துவஞானம் என்னும் கபிலரகவல்; முதல் பதிப்பு; ii. கே. என். சிவயோகம் பிள்ளை, மதுரை; சூரியோதயம் அச்சாபீஸ், மதுரை; iii. செப்டம்பர், 1918; iv. செ.மூ.ப. 16; v. 13×11 செ.மீ.; vi. 0–1–0; vii. இளமை, செல்வம், யாக்கை ஆகியவற்றின் நிலையாமை பற்றியும், சாதி சமயச் சடங்குகள் எல்லாம் பொய்யும், வழுவும் தோன்றற் குறுதுணையாக நிற்கின்றன என்பது பற்றியும், காலத்தின் அருமையை யுணர்ந்து மக்கள் இளமையிலேயே நல்லறம் புரிந்துய்வுறல் நலமென்பது பற்றியும் ஆசிரியர் இவ்வகவலில் தெளிவுபடுத்தியுள்ளார். இதற்குத் 'தத்துவ ஞானம்' என்றும் ஒரு பெயருண்டு. கபிலர் வரலாறு ஒன்று நூன்முகப்பில் காணப்படுகின்றது. அது நம்புதற்குரியதன்று; viii. 216/1918/IV.

R4

சாமி குப்புசாமி, தே. அ.

43. i. கற்பு விளக்கம் : முதல் பதிப்பு ; ii. கோ. வடிவேலு செட்டியார், சென்னை ; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1917 ; iv. செ.மூ.எ 10+100+2; v. 22×14 செ.மீ.; vi. 0–3–0 ; vii. ஒழுக்கமுள்ள மனைவி கடைப்பிடிக்க வேண்டிய நெறிகளையும், கற்பின் தன்மை களையும் இந்நூலில் காணலாம். மகளிரின் குணம் செயல்களை விவரிப்பது. நிச்சல இராமாநந்த சுவாமிகள், கலியாண சுந்தர யதீந்திரர் முதலிய பலர் இதற்குச் சாத்துக் கவிகள் பாடியுள்ளனர்; viii. 230/1917/II.

R4

சுப்பிரமணிய பாரதியார், சி.

44. i. பாப்பா பாட்டு ; ii. பரலி சு. நெல்லையப்ப பிள்ளை ; இந்தியா அச்சுக்கூடம், சென்னை ; iii. 1917 ; iv. செ.மூ.எ. 16 ; v. 14×11 செ.மீ.; vi ................; vii. பாப்பா வுக்கு அறிவுரை கூறும் முறையில் அமைந்த பாடல்களைக் கொண்டது. இன்னின்ன செயல்களைச் செய், இன்னின்ன செய்யாதே என்று ஆசிரியர் இப்பாடல்களில் வகுத்து உரைக் கிறார்; viii. 589/1917/IV.

R4

45. i. முரசு : முதற் பதிப்பு ; ii. பரலி சு. நெல்லையப்ப பிள்ளை, சென்னை ; இந்தியா அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1917 ; iv. செ.மூ.எ. 31 ; v. 14×11 செ.மீ ; vi. 0–1–0 ; vii. சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்கள் பொதிந்த பாடல்கள் அடங்கியுள்ளன. 'ஊருக்கு நல்லது சொல்வேன்' என்று தொடங்கி, ஒற்றுமையின் மேன்மையைக் கவிஞர் வற்புறுத்திக் கூறுகின்றார்; viii. 588/1917/IV.

R4

சௌரியப் பெருமாள் தாசர், ஸ்ரீவில்லிபுத்தூர்

46. i. பார்த்தசாரதி மாலை திருந்திய இரண்டாம் பதிப்பு ; ii. என். நாராயணசாமிபிள்ளை அண்டு பிரதர்ஸ், சென்னை ; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. செ.மூ.எ. 100 ; v. 17×12 செ.மீ.; vi. 0–2–0 ; vii. திரு வல்லிக்கேணியில் உள்ள பார்த்தசாரதிசுவாமியினைப் புகழ்ந்து பாடிய பாமாலையினைக் கொண்டதாகும் இந்நூல். 'பார்த்த சாரதியைப் பணிகுவாய்' எனப் பாடல்தோறும் கூறும் முறை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்நூற் பாடல்களில் ஆசிரியர் பற்பல உலகநீதிகளையும் பழக்க வழக்கங்களையும் சுட்டிக்காட்டி அறிவுரை தருகிறார்; viii. 336/1920/IV.

R4

**விஸ்வநாத பாரதி**

47. i. சன்மார்க்க கீதம்: முதல் பதிப்பு; ii. விஸ்வநாத பாரதி சாத்தூர்; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுப்பட்டி; iii. ஜூன், 1918; iv. செ.மூ.எ. 25; v. 17×11 செ.மீ.; vi.. ..............; vii. இதில் சன்மார்க்க நெறியினை விளக்கும் பாடல்கள் உள்ளன. மாணவர்களின் எதிர்கால வாழ்வு சீர்படும் வகையில் ஆசிரியர்கள் இச் சன்மார்க்க கீதத்தை மாணவர்களுக்குப் போதிக்க வேண்டும் என்னும் நோக்குடன் சாத்தனூர் உபாத்திமைச் சங்கத்திற்காக இந்நூலாசிரியரால் பதிப்பிக்கப்பட்டது இந்நூல். மாணவனை விளிக்க நீதி புகட்டுவது போல் பாடப்பெற்ற எளிய நூல்; viii.851/1918/II.

**R4**

**வேதநாயகம் பிள்ளை, ச., மாயூரம்**

48. i. மாதர்நீதி, அலங்காரக் கீர்த்தனை; ii. அ. குருசாமி நாயுடு, மதுரை; அஷ்டலக்ஷ்மி விலாசம் பிரஸ், மதுரை; iii. அக்டோபர், 1917; iv. செ.மூ.ப. 8; v. 20×13 செ.மீ.; vi.............. ; vii. மனையாள் கடைப்பிடிக்க வேண்டிய கடமைகள், அவளின் சிறப்பு, இலக்கணம் ஆகியவை பற்றி விளக்கப்பட்டுள்ளன. பாடல்கள் எளிமையும், சுவையும் உடையனவாய் அமைந்துள்ளன. மதுரை மாவட்டம், திருப்பத்தூர் ஆ.பி. அப்துல்காதறுப் புலவர் இயற்றிய சாத்துக் கவி வெண்பா முதலில் உள்ளது. இந்தப்பாடற் பகுதி நூலாசிரியர் எழுதிய 'பெண்மதி மாலை'யினின்றும் எடுக்கப்பட்டது; viii. 659/1917/IV.

**R4**

## 170 (1) அறநூல்: உரைநடை

49. i. நீதித்தொகுதி புண்டரீகம்: மூன்றும் இதழின் இரண்டாம் பதிப்பு; ii. அசலாம்பிகையம்மாள், திருப்பாதிரிப்புலியூர்; டிக்ஸன் பிரஸ், சென்னை; iii. 1919; iv. உ.ப.+செ.மூ.ப 43; v. 23×14 செ.மீ.; vi. 0–6–0; vii. நீதி மொழிகளை அறிவுறுத்தும் அறிவுக் கட்டுரைகள் அடங்கிய தொகுப்பாகும் இது. இதில் கல்வி, பெண் கல்வி, செருக்கு, நட்பு, உண்மை, ஒழுக்கம், நன்றியுணர்தல், சினம், ஈகை, அறிவு, ஊக்கம் ஆகிய பொருள்கள் இனிய எளிய நடையில் தக்க மேற்கோள்களுடன் நன்கு விளக்கி வரையப்பட்டுள்ளன, viii. 501/1919/IV.

**R4**

**அண்ணாமலைச்சாமி**

50. i. தருமநீதி வாக்யம்: முதல் பதிப்பு; ii. இ. ராம. குருசாமி கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. செப்டெம்பர், 1920; iv. உ. ப. 47;

v. 15×11 செ. மீ.; vi. 0–3–0; vii. இறைவனால் பணிக்கப்பட்டது இன்னது என்பதைப்பற்றி அண்ணாமலைச்சாமியவர்களால் இயற்றப்பட்ட தருமநீதி வாக்கியமாகும் இப்புத்தகம். நல் வாழ்க்கை வாழ்வதற்கான அறநெறி முறைகளை இந்நூல் வலியுறுத்துகின்றது. viii. 21/1920/IV.

R4

51. i. ஆரிய சரித்திரம்: திருந்திய மூன்றும் பதிப்பு; ii. கணேஷ் அண்டு கம்பெனி, சென்னை; கேம்பிரிட்ஜ் பிரஸ், சென்னை; iii. செப்டெம்பர், 1917; iv. உ. ப. 286; v. 19×13 செ. மீ.; vi. 1-0-0; vii. பல புராணங்களிலிருந்து எடுத்துத் தொகுக்கப்பெற்ற பல நீதிக் கதைகளைக் கொண்டது இந்நூல். 25 கதைகள் உள்ளன. இடையில் சில படங்களும் உண்டு. கலாசாலையிற் பயிலும் சிறுவர் சிறுமியர்க்கு நீதி போதனை அவசியமாவதை முன்னிட்டு எழுதப் பெற்றது. சிறந்த நீதிகளை அனைவரும் நன்கு அறியுமாறு கதைகள் மூலம் விளக்கம் தரப்பட்டுள்ளன; viii. 233/1917/IV.

R4

**இரத்தினவேல் செட்டியார், ம. தா.**

52. i, வைசியகுல சிந்தாமணி: முதற் பதிப்பு; ii, ம. தா. இரத்தினவேல் செட்டியார், சென்னை; டி. எம். பிரஸ், பல்லாவரம்; iii. பிப்ரவரி, 1917; iv. உ. ப.+செ. மூ. ப. 49; v. 18×13 செ. மீ.; vi. இலவசம்; vii. வைசிய குலத்தார்க்கு என இந்நூல் கூறினும் இதில் குறித்த செய்திகளும், சில ஒழுக்கங்களும் எல்லாரும் கற்பதற்குரியன; viii. 1014/1917/I.

R4

**இராமலிங்கம் பிள்ளை, பி. சி. பின்னலூர்.**

53. i. ஜீவகாருண்யம் மோக்ஷ சாதகம்: முதற் பதிப்பு; ii. வி. எஸ். வி. பிரஸ், சிதம்பரம்; iii. பிப்ரவரி, 1917; iv உ.ப.8; v 22×14 செ. மீ.; vi ......; vii. கொல்லாமையையும் புலால் உண்ணாமையையும் வற்புறுத்தி வெளியிடப்பெற்ற சிறு வெளியீடு; viii. 372/1917/II.

R4

**இராமஸ்வாமி ஐயங்கார், எஸ். வி. தஞ்சை.**

54. i. நீதி வாக்கியக் கதைகள்—உலகநீதி: ஆறும் பதிப்பு: ii. இ. மா. கோபாலகிருஷ்ணக்கோன், மதுரை; எக்ஸெல்ஸியர் பிரஸ், மதுரை; iii. அக்டோபர், 1918; iv. உ. ப. 28; v. 18×13 செ. மீ.; vi. 0-2-0; vii. உலகநீதியில் உள்ள இருபது நீதி மொழிகளுக்கும், இருபது நீதிக் கதைகளால்

விளக்கம் தரப்பட்டுள்ள ஓர் அறவுரைப் புத்தகம் இது. ஆசிரியர் எழுதியுள்ள 'நல்லொழுக்க போத விளக்கம்' வரிசையில் இது வும் ஒன்று; viii. 340/1919/I.

R4

55. i. நீதி வாக்கியக் கதைகள் : வெற்றிவேற்கை : திருந்திய பதிப்பு; ii. இ.மா.கோபாலகிருஷ்ணக்கோன், மதுரை; எக்ஸெல் ஸியர் பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. உ ப. 56 ; v. 18×12 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. இந்நூலில் கூறப் பட்டுள்ள நீதிமொழிகளில் 27 நீதிகளுக்கு ஏற்ற 27 கதைகள் அடங்கியுள்ளன; viii. 204/1918/IV.

R4

56. i. நீதி வாக்கியக் கதைகள் : வெற்றிவேற்கை : திருந்திய பதிப்பு ; ii. இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனார், மதுரை ; எக்ஸெல்சியர் பிரஸ், மதுரை ; iii. ஜூலை, 1919 ; iv. உ.ப. 56 ; v. 18×12 செ. மீ. ; vi. 0-3-0 ; viii. 585/1919/III.

R4

57. i. உரைநடை எழுதுவதற்கான சிறு கதைகள்—முதற் பாகம் ; ii. வி.குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட். 1920 ; iv. உ. ப. 96; v. 19×13 செ. மீ. i vi. 0-5-0 ; vii. இதில் பள்ளி மாணவர் கட்டுரை எழுதுவதற்கேற்ற 44 சிறு கதைகள் அடங்கியுள்ளன; viii. 708/1910/III.

R4

58. i. உரைநடை எழுதுவதற்கான சிறு கதைகள்—இரண்டாம் பாகம் ; ii. வி. குமாரசாமி நாயுடு சன்ஸ், சென்னை ; கமர்ஷி யல் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1920 ; iv. உ. ப. 96 ; v. 19×13 செ. மீ. ; vi. 0-6-0 ; viii. 677/1920/III.

R4

59. i. உரைநடை எழுதுவதற்கான சிறு கதைகள் : மூன்றும் பாகம் : முதல் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ் சென்னை ; iii. டிசம்பர், 1916 ; iv. உ. ப. 128; v. 18×13 செ. மீ.; vi. 0-6-0; vii. உரை நடை எழுதுவதற்கான சிறு கதைகள் என்னும் வாசக வரிசையில் இது மூன்றும் புத்தகம். இக்கதைகள் நீதிக்கதை களாகவும், உறுதியுரைகளாகவும், சிறந்த மனிதர்களுடைய ஜீவிய சரித்திரங்களாகவும் இயற்றப்பட்டுள்ளன. கட்டுரை எழுதப் பழகும் மாணாக்கர்களுக்கு வேண்டிய செய்திக ளெல்லாம் சுருக்கமான முறையில் இதில் அடங்கியிருக்கின்றன. கட்டுரை எழுதப் பழகும் மாணுக்கருக்கு வேண்டிய குறிப்புக் களும் செய்திகளும் சுருக்க முறையில் தரப்பட்டுள்ளன; viii. 985/1916/IV.

R4

60. i. உரைநடை எழுதுவதற்கான சிறு கதைகள்—மூன்றும் பாகம்; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii, நவம்பர், 1920; iv. உ. ப. 128; v. 18×13 செ. மீ.; vi 0–9–0; vii. . viii. 764/1920/IV.
R4

**கிருஷ்ணசாமிப் பாவலர், தெ., சதாவதானம்**

61. i. திருக்குறள் நீதிக் கதைகள்—முதற்பாகம்: முதற் பதிப்பு; ii. ஆர். வெங்கடாசலம் கம்பெனியார், திருவல்லிக்கேணி, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. மே, 1918; iv. உ. ப. 121; v. 18×13 செ. மீ.; vi. 0–8–0; vii. அறத்துப் பாலிலுள்ள நாற்பது குறட்பாக்களை எடுத்து, அவைகளின்பொருளை விளக்கி, அதற்கேற்பப் புராணங்களிலிருந்து கதைகளை எடுத்து எழுதி, அதன் மூலம் நீதிமொழிகள் விளக்கப்பட்டுள்ளன. அநுபந்தத்தில் நீதிக் கதைகளுக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நாற்பது குறட்பாக்களுக்கும் பரிமேலழகர் உரை தரப்பட்டுள்ளது. இதற்குத்திருக்குறள் முழுமையும்ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஜே. லாஸரஸ் என்பவர் ஆங்கிலத்தில் எழுதிய கருத்துரையும் முதலில் இடம்பெற்றுள்ளது; viii. 662/1918/II.
R4

62. i. திருக்குறள் நீதிக்கதைகள்: முதற் பாகம்: இரண்டாம் பதிப்பு; ii. ஆர். வெங்கடாசலம் அண்டு கோ., சென்னை; டையமெண்ட் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1920; iv. உ ப.+ செ. மூ. எ. 121; v. 19×13 செ. மீ.; vi. 0–8–0; vii. ........; viii. 692/1920/III.
R4

63. i. திருக்குறள்: நீதிக்கதைகள் முதற்பதிப்பு;—பொருட்பால்—இரண்டாம் பாகம்; ii ஆர். வெங்கடாசலம் கம்பெனியார், சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1918; iv. உ.ப. 191; v. 18×13 செ.மீ.; vi. 0–12–0; vii. முப்பாலில் ஒன்றான பொருட்பாலை விளக்கும் கதைகளைக் கொண்டது இப்புத்தகம். இக்கதைகளில் பெரும்பாலனவும் இதிகாச புராணக் கதைகளினின்றும் எடுக்கப்பெற்றனவாம். திருககுறள் நீதிக் கதைகளுக்காகத் தேர்ந்தெடுத்த திறக்குறட் பாக்களுக்குரிய பரிமேலழகர் உரையும் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது; viii. 920/1918/IV.
R4

**கிருஷ்ணச்சாரியர், டி..ஆர். (மொ. து.)**

64. i. விதுர நீதி: முதற்பதிப்பு; ii. டி. ஆர். கிருஷ்ணச்சாரியர், சென்னை; வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், சென்னை; கம்மர்ஷியல் பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1917; iv. உ.ப. 122; v. 19×13 செ.மீ.; vi. 0–8–0; vii. இந்நூல் மகாபாரத விதுரனின் நீதி வாக்கியங்களை

விளக்கிக் கூறுகிறது. விதுரனது வரலாற்றை முதலில் விளங்கக் கூறிப் பின்னர் அவர் மொழிந்த நீதிகள் உரைக்கப்பட்டுள்ளன. உலக மக்களுடைய தருமத்தைப் போற்றிக் கூறுவது. இதில் விவரிக்கப்பட்ட அறப்பொருள்களின் அட்டவணை ஒன்று முதற்கண் உளது; viii. 887/1917/II.

R4

**கோபாலாசாரியர், கா.ஸ்ரீ.**

65. i. பர்த்ருஹரி—முதலாவது நீதியியல் : திருந்திய மூன்றும் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப. 112 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. 'பர்த்ருஹரி' என்னும் பெயர் புனைந்த இத்தமிழ் நூல் வடமொழியில் பர்த்ருஹரி யென்ற ஒரு கவியினால் சுலோகங்களாகச் செய்யப்பட்ட சிறந்த நூலினை ஆதாரமாகக்கொண்டு மொழிபெயர்க்கப்பெற்றுள்ளது. நீதி சதகம், சிருங்கார சதகம், வைராக்கிய சதகம் என மூன்று பிரிவுகளாகவுள்ள மூல நூலிலிருந்து நீதி சதகம் மட்டும் அமைந்தது இந்நூல். எடுத்துக்காட்டுக்களுடன் நீதிப் பொருள்கள் நன்கு விளக்கப்பட்டுள்ளது. 1917 ஆம் ஆண்டு இண்டர்மீடியட் தேர்வுக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளது; viii. 831/1916/II.

R4

**சாமிநாத ஐயர், தி.அ.**

66. i. விவேக சந்திரிகை, முதற் புத்தகம், முதற் பதிப்பு ; ii. வி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ் ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1920 ; iv. உ.ப. 112 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. இது நீதியை மாணவர்களுக்குப் போதிக்கும் பல கதைகள் அடங்கிய நூல். பட விளக்கங்களுடன் கூடியது. இக்கதைகள் பல புராணங்களிலும், இதிகாசங்களிலுமிருந்து தொகுக்கப்பட்டனவாம்; viii. 303/1920/III.

R4

**சிதம்பர புன்னைவனநாத முதலியார், பு.**

67. i. நீதிசாரத் திரட்டு, முதற் பாகம், முதற்பதிப்பு ; ii. பி.என். சிதம்பர முதலியார் கம்பெனியார், சென்னை ; மெய்கண்டான் பிரஸ், மதுரை ; iii ஆகஸ்ட், 1919 ; iv. உ.ப. 61 ; v 14×11 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. பல நீதிகளை உணர்த்தும் செய்யுட்களைத் திரட்டி, அவற்றின் பொருளை விளக்கும் உரைநடையில் பல எடுத்துக்காட்டுக்களைக் காட்டிச் சிறு மாணவர்களுக்கேற்ற வகையில் வெளியிடப்பட்டுள்ளது. பாடசாலைகளில் மாணவர்களின் நீதி போதனைக்காக வெளியிடப்பெற்றது; viii. 965/1919/III.

R4

**சிவசூரிய சுவாமிகள்**

**68.** i. இல்லற தர்மம், முதற் பதிப்பு ; ii. சிவசூரிய சுவாமிகள், ஹோ & கோ ; பிரீமியர் பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப.+செ.மூ.ப. 63 ; v. 12×9 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. சைவ யாத்திரிகத் தலமாகிய நெல்லையம்பதியின் சிறப்பினை விளக்குவது. இல்லறத்தின் தருமங்களும் இதன்கண் விளக்கப் பட்டுள்ளன. நெல்லைக் கோயிலில் நடைபெற்ற திருப்பணிகளைப் பற்றிய விவரங்கள் இதில் உள. ஸ்ரீலஸ்ரீ சிவசூரிய சுவாமி களின் உருவப்படமும் முதலில் உளது. 'விநாயகர் அகவல்' பாடலும் தரப்பட்டிருக்கிறது. இரண்டாம் பாகமாகிய இல்லற தர்மம் நல்ல அறிவுரைகள் அடங்கியது. கடவுள் வழிபாடு, கடவுளை முன்னிட்டே நடத்தல், ஜீவகாருண்யம் முதலிய பல தலைப்புக்களில் அறவுரை அமைந்துள்ளது. இறுதியில் உள்ள, 'விவாஹமான புதிய தம்பதிகளுக்கு ஒரு கடிதம்' என்னும் பகுதி ஒரு சிறந்த வாழ்க்கை வழிகாட்டியாகும்; viii. 640/1916/II.

R4

**சிவஸுப்ரஹ்மண்ய அய்யர், ம. வே., குன்னூர்**

**69.** i. ஞானதீபிகை, முதற் பதிப்பு ; ii. ஆதர்ஸ் அண்டு பப்ளிஷர் ஏஜன்ஸி, சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1917 ; iv. உ.ப. 135 ; v. 18×13 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. மனித வாழ்க்கைக் கிரமத்தைச் சரியாக அமைத்துத் தெய்வீகத் தன்மையை அடையச் செய்யும் எண்ணத்துடன் எழு தப்பெற்ற நூல். பாடசாலை மாணவர்க்கு நல்லொழுக்க போதனை புரிவதற்கு உதவும் நோக்கத்துடன் எழுதப்பெற்றது. எல்லா சமயங்களுக்கும் பொது நீதிகளே இதில் விவரிக்கப்பட்டிருக் கின்றன. மனிதனது தனிக் கடமைகள், மனோ விகாரங்கள் முதலியனவாகப் பதினொரு காண்டங்களாகப் பகுத்து, ஒவ் வொரு பகுதியும் பல அத்தியாயங்களோடு அமைக்கப்பெற் றுள்ளது; viii. 1124/1917/I.

R4

**சுப்பிரமணிய சர்மா, வாழ்குடை**

**70.** i. வெற்றிவேற்கை : மூன்றும் பதிப்பு ; ii. ஆர். கண பதி அண்டு கம்பெனி, சென்னை ; பி. ஆர். இரா மய்யர் அண்டு கம்பெனி, சென்னை ; iii. அக்டோபர், 1919 ; iv. செ.மூ.உ.எ. 78 ; v. 18×13 செ.மீ.; vi. 0-5-0 ; vii. அதிவீரராம பாண்டியர் வெற்றிவேற்கையின் உரையையும் அதில் உள்ள ஒவ்வொரு பாடலும் விளக்கும் நீதிமொழி களுக்கேற்ற கதைக் குறிப்பையும் இப்புத்தகத்தில் காணலாம். முகவுரைப் பகுதியில் அதிவீரராம பாண்டியரையும், அவர் இயற்றிய நூல்களையும் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டுள்ளன; viii. 685/1919/IV.

R4

சுப்பிரமணிய முதலியார், ப., சென்னை

71. i. பூலோக நண்பன், முதற் பதிப்பு ; ii. ஏஸ். சுப்பிரமணிய முதலியார், சென்னை ; திருஞானசம்பந்தர் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. நவம்பர், 1916 ; iv. உ.ப. 96 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. உலகவின்பத்திற்கு வேண்டிய நூல்களைக் கற்றுங்கேட்டும் வாழ்வதால் வரும் பல குணக்கேடுகளை அகற்றி, இதயமொடுங்குவதற்கும், அகந்தை மாறுதற்கும், அபிமானம் யாதினும் உண்டாகாமலிருப்பதற்கும், ஈகையொடு இரக்கம் உண்டாவதற்கும், தவத்தை மேற்கொள்வதற்கும், பல இலக்கியங்களில் கூறப்பட்டுள்ள நீதிமொழிகளை ஒன்று சேர்த்துத் திரட்டி, "பூலோக நண்பன்" என்ற பெயரினில் வெளியிடப்பட்டுள்ளது. முதற்கண் தமிழ்மொழிப் பெருமையும், பின் சமய தத்துவங்களும் கூறப்பட்டுள்ளன. ஔவையார் சரித்திரங்கூறி, அவர்தம் நூலுள் ஒன்றாகிய, 'கொன்றை வேந்தன்' நீதி வாக்கியங்களுக்குரிய விளக்கமும், அதற்குப் பொருத்தமான கதை முதலியனவும் கொடுக்கப்பட்டுள்ளன; viii. 571/1916/IV. R4

சேஷகிரி அய்யர், கா.சு.

72. i. இஹபரஸாதகம், முதற் பதிப்பு; ii. கா. சு. சேஷகிரி அய்யர், சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1917 ; iv. உ.ப. 17 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இந் நூல் ஏறத்தாழ முப்பது அறிஞர்களின் கருத்துக்களைத் தொகுத்து எழுதப்பட்டது. இல்வாழ்க்கையில் மேற்கொண்டொழுக வேண்டிய பல நற்பண்புகள் விவரிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு வாக்கின் இறுதியிலும் அதனை அருளியவர் பெயர் முதற்குறிப்புத் தரப்பட்டிருக்கிறது. இந்தக் குறிப்பெழுத்துக்களுக்கு விளக்கம் முகப்பில் உள்ளது. இவ்வாசிரியர் ஆங்கில மொழியில், 'Sacred Thoughts' என்னும் ஒரு நூல் எழுதியிருப்பதாகவும் தெரியவருகிறது; viii. 483/1918/I.

R4

தாண்டவராய முதலியார் (மொ.து.)

73. i. பஞ்சதந்திரம், திருத்திய இரண்டாம் பதிப்பு, நீதிக் கதைகள் ; ii. கோ. செல்வரெங்கம்மாள், சென்னை ; மின்னல் மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1917 ; iv. உ.ப. 144 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. இதில் வடமொழியில் புகழ்பெற்ற கதையான பஞ்சதந்திரக் கதை தரப்பட்டுள்ளது. பாடலிபுர மன்னன் சுதரிசனன் என்பானின் குமாரர்களுக்குச் சோமசன்மா என்னும் ஆசிரியர் அறிவு வளரச் சொன்ன கதைகளின் தொகுதி. மித்திரபேதம், சுகிர்லாபம், சந்திவிக்கிரகம், அர்த்தநாசம் அல்லது லப்தஹானி, அசம்பிரேக்ஷியகாரித்துவம் என்னும் ஐந்து தந்திரங்களும் இதில் விவரிக்கப்பட்டுள்ளன; viii. 517/1917/IV. R4

**74.** i. **நற்பழக்கம்** : ii. **ஸி. குமாரசாமி நாயுடு அண்டு ஸன்ஸ்,** சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ.ப. 56; v; 19×13 செ.மீ.; vi. 0-2-0 ; vii. நற்பழக்கத்தினால் வாழ்க்கையில் ஏற்படும் நன்மைகளை விளக்குவது. இது ஆங்கில மொழியிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. பள்ளிச் சிறுர்களுக்குக் கட்டுரைப் பயிற்சிக்கு ஏற்றதான சிறு சிறு கட்டுரைகளின் தொகுப்பாகும் இது; viii. 615/1916/I.

R4

**நாராயணசாமி அய்யர், எம். எம்., முடிகொண்டான்**

**75.** i. பெற்ருேரும் பிள்ளைகளும் ; ii. பாலசுப்ரமணியம் அண்டு கோ ; எப்.எ.பி. ஒர்க்ஸ், திருவல்லிக்கேணி ; iii. 1916 ; iv. உ.ப. 15 ; v. 19×13 செ.மீ. ; vi. 0-1-0 ; vii. பெற்ருேருக்கும் குழந்தைகளுக்கும் உள்ள உறவை விளக்குவது இந்நூல். பற்பல மேற்கோள்களும் எடுத்துக்காட்டுக்களும் தந்து விளக்கப்பட்டுள்ளன; viii. 100/1916/I.

R4

**நீலாம்பிகை அம்மை, நாகை**

**76.** i. பெற்ருேர் கடமை, திருந்தியது ; ii. சுவாமி வேதாசலம், பல்லாவரம் ; டி. எம். அச்சுக்கூடம், பல்லாவரம் ; iii. ஜனவரி, 1918 ; iv. உ.ப. 12 ; v. 16×10 செ.மீ. ; vi. 0-3-0 ; vii உலகிலுள்ள மற்ற எல்லாக் கடமைகளைக் காட்டிலும், தாய் தன் மக்களுக்குச் செய்கின்ற கடமையே மிகவும் முக்கியமானது என்பதனை மிகவும் சுருக்கமாகவும், விளக்கமாகவும் ஆசிரியர் இந்நூலில் விளக்கியுள்ளார். பல்லாவரம் சமரச சன்மார்க்க நிலையகுரு சுவாமி வேதாசலம் பிள்ளை அவர்களால் பார்வையிட்டுத் திருத்தம் செய்யப்பெற்றது; viii. 316/1919/I.

R4

**நெஸ்பீல்ட், ஜே. ஸி.**

**77.** i. ஹிதோபதேசக் கதைகள், இரண்டாம் பாகம், முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் கம்பெனி, சென்னை ; எஸ்.பி.ஸி.கே. பிரஸ், சென்னை ; iii. மே, 1917 ; iv. உ.ப. 32 ; v. 19×13 செ.மீ.;, vi. 0-2-6 ; vii. பல நீதி வாக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற கதைகளைக்கொண்டது. சிறுவர்களுக்கேற்ற புத்தகம். படங்களும் உள. இவற்றுள் சில வாய்மொழியாக வழங்கிவரும் செவிவழிக் கதைகளாம்; viii. 743/1917/II.

R4

**பன்னிருகையன், விருதுப்பட்டி**

**78.** i. மாதர் கடமை, முதற் பதிப்பு ; ii. பன்னிருகையன், விருதுப்பட்டி ; இந்தியன் அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர் 1918 ; iv. உ.ட. 150 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-8-0 ; vii. மாதர்க்குரிய கடமையினை ஆசிரியர் மூன்று பாகங்களாகப் பிரித்து விளக்கியுள்ளார். முதல் பாகத்தில் பாலப் பருவத்தைப்

பற்றியும், இரண்டாம் பாகத்தில் கணவனோடு வாழ்க்கை நடத்துகின்ற இல்லற வாழ்க்கையினைப் பற்றியும், மூன்றும் பாகத்தில் மாமியாராக உள்ளவர்களுக்குத் தேவையான செய்திகளைப் பற்றியும், பொதுவாக மாதர்களுக்கு வேண்டிய அடக்கம், அன்பு, பணிவு, கற்பு, சுற்றந்தழுவல், மாமனார் மாமியாரைப் பேணல் போன்ற அற ஒழுக்கங்களைப் பற்றியும் ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார். ஒவ்வொரு குடும்பப் பெண்ணும் படித்தறிந்து ஒழுகவேண்டிய பல நன்னெறிகள் இந்நூலின்கண் அடங்கியுள்ளன. இதற்கு 'மாதர் நீதி' என்னும் பெயர் மிகவும் பொருத்தமாகும் என்கிறார் முன்னுரை எழுதிய பெரியார் பரலி, சு. நெல்லையப்ப பிள்ளை என்பார்; viii. 870/1918/III. R4

**பூர்ணலிங்கம் பிள்ளை, எம்.எஸ்**

79. i. கதையும் கற்பனையும் : முதற்பதிப்பு ; ii. எம். வி. பிரஸ், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 25 ; v. 18×12 செ. மீ.; vi. 0-2-0 ; vii. சிறுவர் சிறுமிகளுக்கு என எழுதப்பட்ட ஒழுக்க நூல். ஒவ்வொரு கதையின் முடிவிலும் அதனால் பெறப்படும் படிப்பினைகள் விவரிக்கப்பட்டுள்ளன. உலகியல் ஒழுக்கங்களை உணர்த்தும் முப்பது கதைகள் இதில் உள; viii. 452/1916/I. R4

**பொன்னம்பலம், ப.சி., கிழ்பீரால்**

80. i. ஞானபானு : முதற் பதிப்பு; ii. எஸ். பொன்னம்பல பர்னபாஸ் நாடார் ; வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி ; iii. ஜூன், 1919 ; iv. உ.ப. 62 ; v. 20×15 செ.மீ.; vi. 0-8-0 ; vii. இதில் நீதிகளை உணர்த்தும் ஐந்து கதைகள் அடங்கியுள்ளன. அவையாவன : கற்பாசனி, தலைவன் தலைவி, விரதையின் குணம், வறுமையும் வாய்க்காத மனைவியும், அறிந்து போனவன் துறவி என்பனவாம். பல அறிவுரைகளும், பழமொழிகளும் ஏற்ற இடங்களில் இணைக்கப்பட்டுள்ளன; viii. 928/1919/II.

R4

**பொன்னுவேற் பிள்ளை, பிரம்பை**

81. i. மனத்திற்குறுத்தும் மதி விளக்கம் : முதற் பதிப்பு ; ii. கோ. வடிவேலு செட்டியார், சென்னை ; சச்சிதானந்த அச்சுக் கூடம், சென்னை ; iii. 1919 ; iv. உ.ப. 78 ; v. 16×11 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. இந்நூல் உலக விவகாரங்களாகிய குடும்பம், வாணிகம், கைத்தொழில் இவைகளில் உலக நடைகளைக் கவனித்து நடப்பவர்களே பழிபாவங்களினின்று நீங்கிப் புண்ணியத்தையும், புகழையும் அடைவார்களென்பதை வலியுறுத்தி எழுதப்பட்டது. சுருதி, யுக்தி, அனுபவங்கட்கு இயைந்த நீதி விடயங்களை விளக்கும் நூல். வ. உ. சிதம்பரம் பிள்ளை, அட்டாவதானம் கலியாணசுந்தர முதலியார், ஞான

அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1916 ; iv செ.மூ.எ. 16 ; v ....; vi......; vii. தசதீட்சை செய்யும் விவரங்களும், பதினாறு கலையின் தோற்றங்களும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. மதுரைப் புதுமண்டபம் பாத்திரக்கடை வியாபாரம், ந.ரா.மா. கணபதியா பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இது அச்சிடப்பெற்றது. 60/1916/II.

R635

செங்கல்வராய சுவாமிகள்

165. i. ஆத்திசூடி ஞானம் ; ii. வீ. ஆறுமுகஞ் சேர்வை, செம்பூர்; தருமசீலன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. நவம்பர், 1919 ; iv. செ.மூ.எ. 108 ; v. 13×11 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. இந்நூலில் உள்ள ஒவ்வொரு ஆத்திசூடி வாக்கியம் கொண்டு அமைந்த பாடல், சித்தர் பாடலையநுசரித்து எழுதப்பட்டுள்ளது. இதில் பக்தி, யோகம், ஞானம் முதலிய உட்கருத்துக்கள் விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன. ஏட்டுச்சுவடியின் துணை கொண்டு இந்நூல் பதிப்பிக்கப்பெற்றது. viii. 776/1919/IV.

R635

தத்துவராயர்

i. ஞான சுகாதீதம்—19 (தொ. எ. 1124 பார்க்க) ; ii. இ.ராம குருசாமிக் கோன், மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை' மதுரை; iii. ஜூன், 1917 ; iv. செ.மூ.எ. 16; v........; vi. ....; vii. இது சாப்டூர் களஞ்சியம் கணபதிச் சாமியாரவர்கள் கொடுத்த ஏட்டுப்பிரதியின்படி அச்சிடப்பெற்றது. அத்துவித ஞானம் பெறும் வகை உரைப்பது. வெண்பாவினால் அமைந்தது. viii. 46/1917/III.

R635

[illegible]ருமூலர்

i. குளிகை—50 (தொ. எ. 1123 பார்க்க) ; ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1914 ; iv. செ. மூ. எ. 50 ; v......; vi......; vii. யோக முறையில் சலத்தம்பம் முதலியன செய்யும் வகையை விளக்குவது. viii. 181/1916/IV.

R635

நொண்டிச்சித்தர்

i. சிவயோகம்—16 (தொ.எ 1123 பார்க்க); ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1914 ; iv. செ.மூ.எ. 16; v......; vi......; vii. வாசி நிலைகளை வகைபடக் கூறுவது. மதுரை அ. இருளப்பசாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. viii. 181/1916/IV.

R635

**பிரமானந்த சித்தர்.**

i. சமாதி சூஸ்திரம்—12 (தொ. எ. 1124 பார்க்க); இ. ராம. குருசாமிக் கோன், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திர சாலை, மதுரை; iii. ஜூன, 1917; iv. செ. மூ. எ. 12; v.......; vi....... vii. சமாதி நிலை கூடுதற்குற்ற உபாயம் உரைப்பது. viii. 46/1917/III. R635

**பூரணநாசம்.**

i. சிவயோக சாரம் (தொ. எ. 7 பார்க்க); ii. வா. சரவண முத்துப் பிள்ளை கே. பெ. சிங்காரவேலு முதலியார், ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. 1917; iv. உ. ப. v......... vi.........(265—309), 45 ; vii. நாராயணதேசிகர்; என்னும் குருவினிடம் பெற்ற உபதேச அனுபவங்கொண்டு இயற்றப்பெற்றது. அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி பிராகாமியம், ஈசித்துவம், வசித்துவம் என்னும் எண்வகை சித்திகளை உணர்த்துவது. பராங்குச நாவலர் முதலிய பலர் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். viii. 445/1917/I. R635

**யோகீந்திரசரஸ்வதி சுவாமிகள் (மொ. து.)**

166. i. பக்தியோக ரகஸ்யம்: முதற் பதிப்பு; ii. தாம்ஸன் அண்டு கம்பெனி, சென்னை, மினெர்வா பிரஸ், சென்னை; iii. செப்டம்பர், 1917 ; iv. உ. ப.+செ.மூ.எ. 24; v. 21×14 செ.மீ. vi. 0-4-0 ; vii. இந்நூல் யோகம், பக்தி ஆகியவைகளை பகவத்கீதையில் வரும். கருத்துக்களைக்கொண்டு விளக்கிச்செல்கிறது. பிங்கள ஆண்டு வியசரஸ பூசைக்குத் திருவண்ணாமலையின் மேல் பிரம்மவித்யா சாதனாலயம் என்கிற தண்டாயுதபாணி மடத்தில் பாடிய பூரணமான அருட்பாட்டின் தொகுப்பும் இந்நூலின் கண் அமைந்துள்ளது. viii. 1129/1919/III.

R635

167. i. யோக ரகசியம் முதற்பாகம்: முதற்பதிப்பு; ii. எஸ். மூர்த்தி அன் கோ, மதராஸ், கபாலி அச்சியந்திரசாலை, மதராஸ்; iii. மார்ச், 1917 ; iv. உ. ப.+செ. மூ. எ. 26 v. 22×14 செ. மீ.; vi. 0-4-0; vii பகவத்கீதையில் சில தத்துவங்களை பற்றிய பாடல்களும், பக்திப் பாடல்களும் இதில் உள்ளன. viii, 10/1917/II. R635

167எ. . யோக ரஹஸ்யம்; i. கபாலி அச்சியந்திரசாலை; iii. 1917; iv. உ. ப. (27—54) 28 ; v. 22×14 ; செ.மீ. vi. 0-4-0 ; vii. இப்பகுதி சிரவணயோகம் பற்றிக் கூறுகிறது.

வீடுபேறு அடைவதற்குரிய நெறியான யோகநிலை பற்றி விவரிப்பது: இவ்வாசிரியரின் உருவப்படமும் சேர்க்கப்பட்டிருக்கிறது; viii. 744/1917/III.

R635

ராமஸ்வாமி, கே. டி., கீழநத்தம்.

168. i. குண்டலீயோக தந்த்ரம் : முதற்பதிப்பு ; i.. கே. டி. ராமஸ்வாமி, கீழநத்தம், திருநெல்வேலி ; ஜெனரல் பிரிண்டர்ஸ், சென்னை ; iii. மார்ச் 1918 ; iv. உ. ப. 45 ; v. 19×13 செ. மீ. ; vi. 1-8-0 ; vii. யோக சாஸ்திரத்தைப் பற்றி விரிவாக விளக்கப்பட்டுள்ளது ; இயமம் நியமம், ஆசனம், பிராயணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, என்ற எட்டு வகை யோக நெறிகளையும், குண்டலி என்ற ஆத்ம சக்தியையும் அபிவிருத்தி செய்யும் யோகமுறைகளையும் அப்பியாசங்களையும், அனுபவ சித்தி பெற்ற அரிய, பெரிய ஞான ரகசியங்களையும் இதன்கண் தெளிவாகக் கூறியுள்ளார் ஆசிரியர். ; viii. 632/1918/II.

R635

விவேகானந்த சுவாமிகள்

169. i. கர்மயோகத்தின் ரகஸ்யம் : முதற் பதிப்பு ; ii. எ. கோதண்டராம், சிவகெங்கை ; ஸ்ரீகலா அச்சுக்கூடம், சிவகெங்கை ; iii. நவம்பர், 1917 ; iv. உ. ப. 10 ; v. 22×14 செ. மீ.; vi. 0-1-0 ; vii. விவேகானந்த சுவாமிகள், அமெரிக்காவில் கி. பி. 1900-ம் ஆண்டில் கர்மயோகத்தைப் பற்றி ஆற்றிய சொற்பொழிவின் தமிழ் மொழிபெயர்ப்பாகும். இது சிவகெங்கை ஸ்ரீராமகிருஷ்ண விவேகானந்த வேதாந்த சங்கத்தாரால் தமிழில் வெளியிடப்பட்டது. viii. 352/1914/II.

R635

170. i. கர்மயோகம் : முதற் பதிப்பு ; ii. சாதுரத்தின சற்குருபுக் டிப்போ, சென்னை ; பி.ஐ. பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. உ. ப. 176 ; v. 17×13 செ. மீ.; vi. 1-0-0 ; vii. சுவாமி விவேகானந்தர் கர்மயோகம் பற்றி ஆற்றியிருக்கும் சொற்பொழிவுகளின் தமிழாக்கமே இந்நூல். இதனை மொழி பெயர்த்தவர் ஆர். நாராயணசாமி ஐயர் ஆவர் ; viii. 836/1920/III.

R635

171. i. பக்தியோகம் ; ii. ஸ்ரீராமகிருஷ்ண மடத்தினர், சென்னை ; iii. 1915; iv. உ. ப. 203 ; v. 19×13 செ. மீ.; vi. 0-8-0; vii. பக்தியோகத்தைப்பற்றிச் சுவாமி விவேகானந்தர் ஆற்றிய சொற்பொழிவுகள் அடங்கியது. வேதாந்த மதத்தின் உயர்வைப் புலப்படுத்துவது ; பக்தியோகம், பராபக்தி என இருபெரும் பகு

பாட்டினைக் கொண்டது. ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழி பெயர்த்தவர் மே. கி. தாதாசாரியர் ஆவர்; viii. 583/1916/I.

R635

172. i. பக்தியோகம்; திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. இராம கிருஷ்ணமடம், சென்னை; டாடா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1920: iv. உ.ப. 103; v. 18×13 செ.மீ.; vi. 0–10–0; vii.... .; viii. 306/1920/IV.

R635

173. i. பஹிரங்க ரகஸ்யம்: முதற் பதிப்பு; ii. ஸ்ரீராமகிருஷ்ண விவேகானந்த வேதாந்த சங்கம், சிவகங்கை; ஸ்ரீகலர அச்சுக் கூடம், சிவகங்கை; iii 1915; iv, உ.ப. 14; v. 21×14 செ.மீ.; vi. 0–1–0: vii. அமெரிக்காவில் சுவாமி விவேகானந்தர் ஆற்றிய சொற்பொழிவுகளில் ஒன்று. இது ஞானயோகத்தின் தத்துவங்களை விவரிப்பது. சுவாமிகளால் 1900 ஆம் ஆண்டில் செய்யப்பட்ட இந்தச் சொற்பொழிவைத் தமிழில் வெளியிட்டவர் சிவகெங்கை ஸ்ரீராமகிருஷ்ண விவேகானந்த வேதாந்த சங்கத்தார் ஆவர். இவர்கள் வெளியிட்டு வரும் வேதாந்த வெளியீடுகளில் இது மூன்றாவ தாகும்; viii. 333/1916/I.

R635

174. i. ராஜயோகம்: முதற்பதிப்பு; ii. ஷண்முக முதலியார், மங்கலம் சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1916; iv. உ ப. 142; v. 18×13 செ.மீ.; vi. 0–12–0; vii. சுவாமி விவேகானந்தர் ராஜயோகம் என்னும் பொருள் பற்றி ஆற்றிய சொற்பொழிவின் தமிழ் மொழிபெயர்ப்பு; இவை அமெரிக்க நாட்டில் பேசியவையாம். இதனைத் தமிழில் மொழிபெயர்த்தவர் கோவிலூர் மடாலயம் இராமகிருஷ்ணசாமி என்பவராவர். இவர் ஆங்கில மூலத்தோடு குமாரன் ஆசான் என்பவர் செய்த மலையாள மொழிபெயர்ப்பையும் பயன்படுத்தியுள்ளார். ராஜயோகமாவது 'மனோநிக்ரஹவித்தை'யாகும். சுவாமிகள் அருளிய எட்டுச் சொற்பொழிவுகள் இதில் உள. அவைவருமாறு: அவதாரிகை, முதற் சோபானங்கள், பிராணன், அத்யாத்மப் பிராணன்; அத்யாத்மப் பிராண நியமனம், பிரத்தியாகாரமும் தாரணையும், தியானமும் சமாதியும், ராஜயோகசம்க்ஷேபம்; என்பன; viii. 42/1916/III.

R635

**விளையாட்டுச் சித்தர்**

1. கடேந்திர நாதரென்ற விளையாட்டுச் சித்தர் ஞானசூஸ்திரம் 18 (தொ.எ. 1122 பாக்க); ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 18; v......; vi......:

vii. அண்டபிண்டம், சத்தி சிவம், பரமாத்மா, பூர்ணமுத்தி மோட்சநிலை, ஏகபராபரவஸ்து, வாசி சுழிமுனையில் செல்லும் நெறி ஆகிய விவரங்களையும், மெய்ஞ்ஞானயோகம், மூதண்ட கிஷாயம், லேகியம், குண்டலிசித்தி, பூரண மதியமுதமார்க்கம் முதலியனவும் விளக்கப்பட்டிருக்கின்றன. மதுரை பாத்திரக்கடை வியாபாரம் ந. ரா. ம. கணபதியா பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பெற்றது; viii. 60/1916/II.
R635

ஜனகர்

i. ஞானசூஸ்திரம்—24 (தொ.எ. 1123 பார்க்க); ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை. iii. 1914; iv. செ.மூ.எ. 24; v......; vi......; vii. நாதம், விந்து, பதினாறு கலைகள் முதலியவற்றின் தன்மையை விளக்குவது. பழனிமலையில் வசிக்கும் ஸ்ரீகைலாச தெண்டாயுதபாணி ரிஷிஸ்வர சுவாமியவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பட்ட நூல்; viii. 181/1916/IV.
R635

ஷண்முகாநந்த சுவாமிகள், வேளாங்கண்ணி

175. i. யோகக்கும்மி: முதற் பதிப்பு; ii. ந. பிச்சுவாசாரி, திருச்சி; டி. சில்வா பிரஸ், திருச்சி கண்டோன்மெண்டு; iii. ஜூன், 1918; iv. செ.மூ.எ. 101; v. 20×14 செ.மீ.; vi. இலவசம்; vii. தவப்பெருந்திரு ஷண்முகாநந்த சுவாமிகள் யோக தத்துவத்தைக் கும்மிப் பாடல்கள் மூலம் அருளிச் செய்துள்ளார். இதில் மொத்தம் (101) நூற்றொரு பாடல்கள் உள்ளன. யோகசித்தி முறைகளைத் தெளிவுற விளக்கிச் செல்கிறார். 'யோகப் பெண்ணே' எனப் பாடல்தோறும் விளித்து ஆசிரியர் செய்திகளை அறிவிக்கிறார்; viii. 982/1918/III.
R635

## 181·48 வேதாந்த தத்துவம்

அகஸ்தியர்

i. அகஸ்தியர் ஞானம்—29 (தொ.எ. 7 பார்க்க); ii. வா. சரவண முத்துப் பிள்ளை அண்டு கே. ப. சிங்காரவேலு முதலியார், ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. 1917; iv. செ.மூ.எ. 9; v......; vi......; vii. தெய்வநிலை காணும் நெறியினை அருளிச் செல்வது; viii. 445/1917/I.
R65

அச்சுதானந்த ஸ்வாமிகள்

176. i. அத்வைத கீர்த்தனாநந்த லஹரி; இரண்டாம் பாகம்: இரண்டாம் பதிப்பு; ii. கா. ந. குப்புசாமிச் செட்டியார் திருவண்ணாமலை; அமெரிக்கன் டைமெண்ட் பிரஸ், சென்னை;

iii. ஏப்ரல், 1918 ; iv. செ. மூ. எ. 129 ; v. 18×11 செ. மீ. vi. 0-8-0; vii. அத்வைத சமயத்தைப் பலபடப் பாராட்டும் கீர்த்தனைகளைக் கொண்டது இந்நூல். அத்வைதாவதானம் மணி மங்கலம் திருவேங்கட முதலியார், சதணபுரி இராமச்சந்திர குருசாமி தாஸர் முதலியோர் தந்துள்ள கருத்துக்களை உடையது. 149 கீர்த்தனைகளடங்கியது. ; பாடல்களுக்குரிய இராகதாளக் குறிப்பு பாடல்களின் தொடக்கத்தில் உள்ளது. இவ்வாசிரியர் ஸ்ரீ கைலாச கிரிபீடம் நிஜாநந்தயோகீந்திராது மரபிற்குரியவர். viii. 387/1918/III. R65

**அப்துல் மஜீத், பி. ஜீ.**

177. i. ஆத்மத்திறவுகோல் : முதற் பதிப்பு ; பி. லக்ஷ்மண ரெட்டியார், கொளக்குடி, திருச்சி ; டாட்ஸன் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஏப்ரல், 1919; iv. உ. ப. 509; v. 19×13 செ. மீ.; vi. 2-4-0; vii. ஜீவகாருண்யம், அகிம்சை, பரோபகாரம், மெய்க்குருவையும் பொய்க்குருவையும் கண்டறியும் வழி ஆகியவை இந்நூலில் அடங்கியுள்ளன. வழக்கு மன்றங்களில் நடக்கும் நீதி விசாரணையைப்போல் இதில் ஆத்ம விசாரணை செய்யப்பட்டுள்ளது. தத்துவ உண்மைகளைச் சாதாரண மக்களும் புரிந்துகொள்ளும் வண்ணம் செய்வதற்கு இந்த விசாரணை முறை வழிகாட்டியுயாள்ளது. viii. 257/1919/II. R65

**அப்பய்ய தீக்ஷித சுவாமிகள்**

178. i. சித்தாந்த லேச சங்கிரகம் ; முதற் பதிப்பு ; ii. சி. சாமிநாத சுவாமிகள், திருவாரூர்; ஆட்சிட் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1917 ; iv. உ. ப. 223; v. 18×13 செ.மீ. ; vi. 1-0-0 ; vii. அப்பய்ய தீட்சித சுவாமிகள் சர்வ வேதாந்த சாஸ்திரங்களையுந் திரட்டித்தந்த சர்வ வேதாந்த சாஸ்திர சித்தாந்த லேச சங்கிரமென்னும் நூலின் தமிழாக்கம் இந்நூல். இதன்கண் சிறப்பாக, அதிகாரிகளுக்குத் தெரியவேண்டிய நாற்பத்தைந்து செய்திகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. சுப்பைய சுவாமிகளால் இந்நூல் மொழி பெயர்க்கப்பெற்றது. viii. 9/1918/I. R65

**அருணாசல சுவாமிகள், உம்பலச்சேரி.**

179. i. மோனானந்த மதியோக பூரண தீபம் : முதற் பதிப்பு ; ii. அருணாசல சுவாமிகள், உம்பலச்சேரி ; பிரம்ம வித்யா அச்சுக்கூடம், திருமீயச்சூர் ; iii. ஆகஸ்ட், 1918; iv. செ. மூ. ப. 234; v. 21×14 செ. மீ.; vi. 2-0-0; vii. யோக சத்தியின் முழுத்தன்மையினையும் மோனானந்த நிலையில் ஆத்மா அடைகின்ற நித்திய சுகத்தினையும்

தகத்தில் விளக்கியுள்ளார். இந்நூலை அச்சிடுவதற்குப் பொருளுதவி செய்த மாணுக்கர்களின் பெயர்ப்பட்டியலை ஒன்று உள்ளது. இந்நூல் தாழிசை, கும்மி, கண்ணிகள், திருப்புகழ், ஏலப்பாட்டு, வெண்பா, கீர்த்தனைகள், திருவிருத்தம் போன்ற பலவகைப்பட்ட பாடல்களால் ஆகியது. viii. 968/1918/III.

R65

**அன்னிபெஸண்டு அம்மையார்**

180. i. ஆத்மார்த்த ஒழுக்கப் பயிற்சி, கிரஹஸ்தாச்ரமம் ; முதற் பதிப்பு ; ii. ரத்ன சபாபதி முதலி, தஞ்சாவூர்; வால்மீகி அச்சுக்கூடம், மாயவரம் ; iii. 1916 ; iv. உ. ப. 34; v. 22×14 செ. மீ. ; vi. 0-2-0; vii. ஆத்மார்த்த ஒழுக்கப் பயிற்சியினைப் பற்றியும் கிரஹஸ்தாச்ரமம் என்னும் பொருளினைப் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன. இஃது அன்னிபெஸண்ட் அம்மையார் ஆங்கில மொழியில் ஆற்றிய சொற்பொழிவுகளின் மொழிபெயர்ப்பு. இதனை மொழி பெயர்த்தவர் ஆர். சுவாமிநாதையர் அவர்கள் ஆவார். ‘சாந்தி வசனம்’ வரிசையில் இது இரண்டாவது வெளியீடு. viii. 977/1916/II.

R65

181. i. கர்ம பாலபோதம் ; ii. ரத்னசபாபதி முதலி, தஞ்சாவூர் வால்மீகி அச்சுக்கூடம், மாயவரம் ; iii. ஜனவரி, 1916; iv. உ. ப. 22 ; v. 21×14 செ. மீ. ; vi. 0-2-0 ; vii. ‘கர்மா’ வைப்பற்றி திருமதி அன்னிபெஸண்ட் அம்மையார் எழுதிய ஆங்கில நூலின் மொழி பெயர்ப்பு இந்நூல். கர்மம் என்றால் என்ன? அது எப்பொழுது உற்பத்தியாயிற்று? அது எவ்வளவு தூரம் நம்மைக்கட்டுப்படுத்தும்? அதற்கு நாம் ஊழியர்களா? அல்லது எஜமானர்களா? என்றுற்போன்ற பல வினாக்களை எழுப்பி, தக்கவண்ணம் விளக்கம் தரப்படுகிறது. அம்மையாரின் ஆங்கில நூலைத் தமிழில் மொழி பெயர்த்துத் தந்தவர் திருமீயச்சூர் பிரம்மக்ஞான சங்கம் காரியதரிசி ஆர். ஸ்வாமிநாதய்யர் ஆவர். viii. 1961/1916/I.

R65

**அனுகூலமா முனிவர்**

182. i. பழானந்த தீபம் : இரண்டாம் பதிப்பு ; ii. கொ. செல்வரங்கம், சென்னை ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. செப்டம்பர், 1918 ; iv. செ. மூ. எ. 72 ; v. 14×11. செ. மீ. ;vi. 0-1-0; vii. தீர்த்தபுரி நந்திகேசன் திருக்கோயிலுக்கருகில் ஓடும் நதிக்குக் கிழக்குப் பக்கத்தில் இருந்து பெரிய தவத்தைச் செய்தவர் இந்நூலாசிரியராகிய அனுகூல முனிவர் என்று தெரியவருகிறது. குருவினருளால்

ஞானம் சித்தியாகும் என்ற உண்மையினை இதில் ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார். இது ஞானமுற்றுப் பரமானந்தம் பெறுதற்குரிய பல படிகளையும் விளக்கி உரைக்கின்றது. viii. 1063/1918/III.

R65

**ஆத்மாநந்த ஸ்வாமிகள், உடையாப்பட்டி**

183. i. அனுபவஞானம்; முதற் பதிப்பு; ii. வி.ஆர். அருணசல அய்யர், சேலம்; ஷண்முகவிலாஸ அச்சுக்கூடம், சேலம்; iii. ஜுன், 1918; iv. செ.மூ.எ. 1+55+1; v. 15×10 செ.மீ.; vi. இலவசம்; vii. வாழ்க்கையில் கைக்கொள்ளத்தக்க பல நல்ல பழக்கங்களையும் உணவு வகைகளையும் இதன்கண் காணலாம். ஞான மார்க்கத்தினை நாடிச் செல்லும் நெறியை விளக்கி உரைக்கிறது. viii. 297/1918/III.

R65

**இராமச்சந்திர நாயுடு, வி (மொ.து.)**

184. i. கர்மநாசம்: முதற் பதிப்பு; ii. எ. இரத்தின சபாபதி முதலி, திருமீயச்சூர்; பிர்ம்மா வித்யா அச்சுக்கூடம், திருமீயச்சூர்; iii. 1918; iv. உ.ப. 26; v. 22×14 செ.மீ.; vi. 0–3–0; vii. ஜீவன் கர்ம நாசத்தைச் செய்து கொள்ளும் விதங்களைப் பற்றியும், ரிஷி சிஷ்யனுவதற்கும், முச்சரீராதீதனுவதற்கும் உள்ள வழியினைப் பற்றியும் மகாத்மாக்களின் தொழிலினைப் பற்றியும் இப்புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். கடப்பையில் உள்ள பிரம்மஞான சபை வெளியிட்டதைத் தெலுங்கிலிருந்து தமிழில் மொழி பெயர்த்து வெளியிடப்பட்டுள்ளது. தெலுங்கில் எழுதியவர் எ. நஞ்சுண்டப்பா என்பாராவர். 'இது சாந்தி வசனம்' தொடர் வெளியீட்டில் பத்தாவது வெளியீடு ஆகும். viii. 971/1918/III.

R65

**உலகநாத சுவாமிகள், திருவிடைமருதூர் (மொ.து.)**

185. i. ஜீவன் முக்திப் பிரகரணம்: திருந்திய இரண்டாம் பதிப்பு; ii எ. ராமலிங்கசாமி, சென்னை; கபாலி அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1916; iv. உ.ப. 165; v. 16×13 செ.மீ.; vi. 1–0–0; vii. இந்நூலில் கடைத்தேறும் வழிபற்றி விளக்கி எழுதப்பட்டுள்ளது. வடமொழியில் வித்யாரண்யர் எழுதிய நூலின் தமிழாக்கமே இந்நூல். சுவாமிகளின் மொழி பெயர்ப்பைத் திருத்தியும் விளக்கியும் கூட்டியும் புதுக்கி அமைத்தவர் அ. இராமசுவாமிச் சுவாமியாராவர். இதில் எடுத்தாளப் பெற்ற உதாரண நூல்களின் பெயராகாதி,

ஆசிரியர்களின் பெயரகராதி ஆகியவையும் சேர்க்கப்பட்டுள்ளன. இதை மொழி பெயர்த்தவருக்கு பிக்ஷு சாஸ்திரிகள் என்ற மற்றொரு பெயரும் உண்டு. viii. 943/1917/II

R65

**கிருணையானந்தர், பெருநாழி, கிழ்வேளூர்**

186. i. வேதாந்த பாஸ்கரன் : முதற் பாகம், முதற் பதிப்பு ; ii. கருணையானந்தர், கீழ்வேளூர் ; பிர்ம்ம வித்தியா அச்சுக் கூடம், பேரளம், திருமீயச்சூர் ; iii. ஏப்ரல், 1918 ; iv. உ.ப.+செ.மூ.ப. 168 ; v. 21×14 செ.மீ ; vi. 1-0-0 ; vii. கடவுளிலக்கணம், ஆசிரியரிலக்கணம், சரியை, கிரியை முதலியன முப்பத்தைந்து பிரிவுகளாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளன. இந் நூலிற் கூறப்பட்ட கருத்துக்கள் எல்லாச் சமயங்கட்கும், எல்லா ஞானாகமங்களின் கருத்துக்கட்கும் முற்றிலும் பொருத்தமாகவே உள்ளன. இரங்கோன் தப்பிக்கான் வாசியும் இந் நூலாசிரியரின் மாணவருமாகிய க.கு. குழந்தைசாமிப் பிள்ளை அவர்கள் தந்த அணிந்துரை சாற்றுக் கவியுடன் கூடியது. இந்நூல் அச்சேறுவதற்குக் கீழ்வேளூர் அ. அருணாசல முதலியார் மற்றும் பலர் பொருளுதவி செய்ததாகத் தெரிய வருகின்றது. வேதாந்த பாஸ்கரன் இரண்டாம் பாகம், சமரச ஞானம், முகமதுநபி சரித்திரம், இஸ்லாம் மார்க்கம், அபத் சகாயம், மனம், பிராணாயாமயோகம், அன்பு முதலியன இவ்வாசிரியரால் இயற்றப்பட்ட பிற நூல்களாகும். viii. 482/1918/II.

R65

**கலியாணசுந்தர முதலியார், பூவை (தொ.து.)**

187. i. கட்டளைத் திரட்டு : முதற் பதிப்பு; ii. செல்லப்ப முதலியார், கேரளப்பன் சேரி ; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம் ; iii. 1916 ; iv. உ.ப. 351 ; v. 16×13 செ.மீ. ; vi. 1-0-0 ; vii. இந்துமத வேதாந்தத் துறையில் அமைந்த கட்டளை முப்பது இதில் இடம்பெற்றுள்ளன. இவை வைதிக ஞான சாத்திரங்களில் பழகுவோர்கட்குப் பயன்படுமாறு சாத்திர விற்பனமுடையோர் பற்பலரால் பல காலங்களில் அருளிச் செய்யப்பட்டனவாம். இவை சாத்திரங்களுக்குச் சோபானமாக அமைந்தவை. பசு, பாச இலக்கணங்களைத் தெளிவாக எடுத்துக்காட்டுபவை. இதில் அமைந்துள்ள முப்பது கட்டளைகளாவன: சிவப்பிரகாசக் கட்டளை, திருவாலவாய்க் கட்டளை, சித்தாந்தச் சாதனக் கட்டளை, சித்தாந்த காரியக் கட்டளை, சித்தாந்தப்பிரகாசிகை, சித்தாந்த தத்துவ லக்ஷணம், நாநாசீவவாதக் கட்டளை, வேதாந்த தத்துவக் கட்டளை, ஞானக் கட்டளை, தத்துவாமிர்தக் கட்டளை, உபதேசவுண்மைக் கட்டளை, வேதாந்த தசாவத்தைக் கட்டளைச் சுருக்கம், வேதாந்த தசகாரியக் கட்டளை, பிரமோபதேசக் கட்டளை, உபதேச சித்தாந்தக் கட்டளை, வேதாந்த

சாராமிருதம், பஞ்சீகாண வேதாந்த சித்தாந்தம், தத்துவ தீபிகை ஜீவோற்பத்தி சிந்தாமணி, தத்துவஞான தீபிகை, தத்துவோம் தீபிகை பக்கம், தத்துவ சங்கிரக தீபிகை, தத்துவாமிர்த சொரூப நிர்ணயம், தத்துவாத்மா நாதம் விசாரம், தத்துவ பிரமஞானம், தத்துவ பிரமஞான சதுஷ்டயம் தத்துவப் பிரமஞானுதி துவந்துவம், தத்துவமஹாவாக்கியார்த்தம், தத்துவ விசேஷார்த்த சங்கிரகம் என்பனவாம்.
216/1916/II. R65

**காசிகாநந்த வசுவாமிகள் மொ(.து.)**

188. i. வேதாந்த சஞ்ஞா ; ii. ஷண்முக முதலியார், மங்கமம் சச்சிதானந்தம் பிரஸ், சென்னை ; iii. 1916; iv. உ. ப. 54; v. 19×11 செ. மீ. ; vi. 0-2-0; vii. அத்வைத தத்துவத்தின் மூலக்கொள்கைகள் இந்நூலின் கண் விளக்கப்பட்டுள்ளன. வேதாந்த சம்ஞா, என்னும் வடமொழி நூலின் மொழி பெயர்ப்பு; இம்மூலநூல் ஆசிரியர் பெயர் புலப்படவில்லை. viii. 41/1916/III.
R65

**காதிஅநந்தாசார் ஸ்வாமிகள், ஜகத்குரு**

189. i. ஸர்வ சமய சமரஸ ஸித்தாந்தம் : முதற் பதிப்பு ; ii. எம். வி. இராமசாமி அய்யங்கார், சீரங்கம், வெட்னஸ்டே ரெப்யூ பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. மார்ச், 1920; iv. உ. ப. 14; v. 14×11 செ. மீ. ; vi. 0-0-6; vii. இது விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை விளக்கும் நூல். எல்லாச் சமய நெறிகளையும் தொகுத்துக் கூறுவது. viii. 44/1920/II.
R65

**கோபால தேசிகர்.**

i. சின்மயானந்தக் களிப்பு (தொ. எ. 164 பார்க்க); ii. கோபால தேசிகர், கோயம்புத்தூர் ; ஸதர்ன் ஸ்டார் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. மே, 1918; iv. செ. மூ. எ. 31 ; v.....; vi.....; vii.....; யோக சாதனத்தைப் பற்றி இந்த ஆனந்த களிப்பில் கூறப்பட்டுள்ளது. viii. 1052/1918 III. R65

**சட்டை முனிவர்**

i. சட்டை முனிவர் ஞான விளக்கம்—51 (தொ. எ. 1122 பார்க்க); ii. மதுரை வித்வான். த. குப்புசாமி நாயுடு, மதுரை ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரச் சாலை, மதுரை; iii. 1916 ; iv. செ. மூ. எ. 1×52 ; v......; vi...........

vii. வேதாந்தம், சித்தாந்தம், பராசக்தி தெரிசனம், மவுனரசக் குளிகை, மவுன தீட்சை, நிராமய விவரங்களும், வாசி வசப்படும் விவரங்களும், நடுவணை நாட்டம், அடிநடுமுடி விவரங்களும் சக்திபூசை, காமப்பால், கானற்பால், நாற்பத்து முக்கோணச் சக்கரம், பூஜா விதி சித்தி விவரங்களும் அடங்கியுள்ளன. மதுரைப் பாத்திரக்கடை வியாபாரம் ந. ராம. கணபதியா பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பெற்றது. viii. 60/1916/II.

**R65**

i. சட்டை முனிவர் தீட்சை கற்பம்,—9 (தொ. எ. 1122 பார்க்க) ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை,; iii. 1916; iv. செ.மூ. எ. 9; v.....; vi.....; சட்டைமுனி, தீட்சை கற்பம் ஒன்பதில் கற்பமுறை, குருமுறை, தசதீட்சை, நாசிநுனி நாட்டம் முதலியன விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மகமதுசாயபுபுரம் சங்கரலிங்கப்படகர் குமாரன் அழகுமுத்துப் பண்டிதரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. viii. 60/1916/II.

**R65**

i. சட்டை முனிவர் மதியமுத சூத்திரம்,—6 (தொ. எ. 1122 பார்க்க) ; ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திரவிலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1916; iv..... v....... vi. செ. மூ. எ. 6; vii. சட்டைமுனி சூத்திரம் ஆறில் அஷ்டாக்ஷரம், சரியை, கிரியை, யோகம், ஞானசித்தி விவரங்களும், ரவிமதி விவரங்களும், சிவயோக சித்தி விவரங்களும் அடங்கியுள்ளன. ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மகமதுசாயபுபுரம் சங்கரலிங்கப் பிடகர் குமாரன் அழகுமுத்து பண்டிதரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பட்டது. viii. 60/1916/II.

**R65**

i. சட்டை முனிவர் வேதாந்த சூத்திரம்.—8 (தொ. எ.1122 பார்க்க); ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1916; iv. செ. மூ. எ. 8; vii. வேதாந்த சூத்திரம் எட்டில் வேதாந்த முடிவும், சோதி தரிசன நாட்டம், அஷ்டபதி பிராணாயாம விவரம், அஷ்டமாசித்து விவரங்களும், மூல மந்திரம், செந்தூரமுறை, பாகத்திற்குரிய மார்க்கம் முதலியனவும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த மகமது சாயபுபுரம் திருவேங்கடத் தேவரவர்கள் குமாரர் போத்திலிங்கத் தேவரவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இது அச்சிடப்பெற்றது. viii. 60/1616/II.

**R65**

**சற்குரு ஸ்வாமிகள், திருவண்ணாமலை**

190. i. அறிவு விளக்கம் : முதற் பதிப்பு ; ii. மாரிமுத்துப் பிள்ளை, பாவக்கடை ; ஸ்ரீகிருஷ்ணவிலாச அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. அக்டோபர், 1917 ; iv. உ.ப. 69 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. இதில் வேதாந்த தத்துவத்தை விளக்கும் கட்டுரைகள் அடங்கியுள்ளன. பூததத்துவம், இறை தத்துவம், மாயையின் செயல் முதலியவற்றை எடுத்துக் காட்டுக்களுடன் விளக்கும் நூல். viii. 470/1917/IV.

R65

**சாமிஐயா தேசிகர், சு., பூவாளூர்**

191. i. மாயாவாத மத நிரசனம் : முதற் பதிப்பு ; ii. சு. சுவாமி ஐயா தேசிகர், பூவாளூர் ; எஸ்டேட் பிரஸ், தேவகோட்டை ; iii. நவம்பர், 1918 ; iv. உ.ப. 13 ; v. 17×11 செ.மீ. ; vi. ...... ; vii. மாயாவாத மதக்கொள்கையினை மறுத்து எழுதப்பட்ட ஓர் அரிய சிறிய வெளியீடு. உமாபதி சிவாச்சாரியாரின் சங்கற்ப நிராகரணத்தை அடியொற்றி எழுதப்பெற்றது இந்நூல். viii. 608/1918/IV.

R65

**சிதம்பரம் பிள்ளை, வ. உ.**

192. i. மனம்போல் வாழ்வு : இரண்டாம் பதிப்பு ; ii. வ. உ. சிதம்பரம் பிள்ளை ; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப. 80 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. ஜேம்ஸ் ஆலன் அவர்களது அரிய நூல்களில் ஒன்றின் மொழி பெயர்ப்பு. இஃது ஒவ்வொருவர் வாழ்வும் தாழ்வும் அவரவர் மனநிலைகளை யொத்தே அமைகின்றன என்னும் அரிய உண்மையை ஐயமற விளக்கி, மனிதரை நல்வழிப்படுத்தி நல்வாழ்விற் சேர்க்கும் நல்லாசிரியரைப் போன்று விளங்குகின்றது இந்நூல். த. வேதியப் பிள்ளை என்பார் இதற்குச் சிறப்புப்பாயிரம் எழுதியுள்ளார். viii. 1033/1916/I.

R65

193 i. வலிமைக்கு மார்க்கம் : ii. எஸ். வி. என். பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப.+செ.மூ.எ. 110 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. ஜேம்ஸ் ஆலன் என்பார் ஆங்கிலத்தில் எழுதிய "எளிமையிலிருந்து வலிமைக்கு" எனப் பொருள்படும் நூலினது முதற் பாகத்தின் மொழிபெயர்ப்பு இந்நூல். முதனூலிற் கண்ட செய்யுட்களையும் தமிழ்ப்படுத்திச் சேர்த்துள்ளார். இந்நூற் கருத்துக்கள் யாவர்க்கும் ஒத்த பொதுமைக் கருத்துக்களாம். viii. 197/1916/IV.

R65

சிவப்பிரகாச சுவாமிகள், கரபாத்திர

194. i ஞான ஸாதக ஸஹாயம்: இரண்டாம் பதிப்பு ; ii. எ. சமர புரி முதலியார், சென்னை ; சிவகாமிவிலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915 ; iv. உ.ப.+செ.மூ.ப. 384 ; v. 13×9 செ.மீ. ; vi.. vii. சாது சங்க சேவை, பிரபல சுருதி விசாரம், தண்டாத பரிசயம் ஆகிய மூன்றும் செவ்வனே தமிழ்ல் ஒத்த சித்தவிருத்தி சாந்தமடையும் மார்க்கத்தினை யுணர்த்துவது. ஸ்ரீசங்கராச்சாரியர் முதலியோர் விளக்கமாக உரைத்த சொரூப லக்ஷணவிமுத்தி முதலியவற்றை முகப்பில் அடைத்து, ஆசிரியர் மாணவர் உரையாடல் முறையில் அப்பியாசத்தின் சாதக பாதகவுரைகளை உணர்த்தியுள்ளது. அதிகாரிகளுக்கு அச்சாதகம் தூணுநிகந நியாயம்போல் நிலைபெற்று சாத்தியத் தன்மையை அடைவிக்க இன்றியமையாததாய் நிகழ்தலின் இது, 'ஞான ஸாதக ஸஹாயம்' எனப் பெயர் பெற்றுள்ளது. 'மடமும் வேதமும்' என்னும் பகுதியில் சங்கரரின் வேதாந்த மடங்களைப் பற்றிய விவரங்கள் உள. ஈற்றில் ஸ்ரீசங்கரபகவத் பாதர் ஸ்ரீவித் யாரணியர் ஆகியோரைக் குறித்த, "அஷ்டோத்ர சத நாமாவளி" கள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 405/1916/II.

R65

சிவப்பிரகாச சுவாமிகள், துறைமங்கலம்

195. i. வேதாந்த சூளாமணி, மூன்றாவது பதிப்பு; ii. பா. சு. வடிவேலுச் செட்டியார், சென்னை ; சச்சிதாநந்த அச்சுக்கூடம, சென்னை ; iii. 1918 ; iv. செ.மூ.உ.எ. 184 ; v. 21×14 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. இந்நூலாசிரியர் தமது சுவானு பூதி பிரத்தியட்சம் எவர்க்கும் எளிதில் விளங்குமாறு கருதி, இந்நூலிய்யறிஞரேனும், ஒருத்தி தன் சிறுவனது பிணி தீர்ப்பான் வேண்டி அவனுக்குத் தீம்பண்டங்களைக் காட்டி அவுடதந்தந்து அந்நோயைத் தணிக்குமாறு போன்று, ஞான காண்டிகளன்றி ஏனையோரும் இதனையேற்க இயற்றமிழ்த் திறத்தைக் காட்டிச் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தார். ஈசூர் சச்சிதாநந்த சுவாமிகள் எழுதிய விருத்தியுரையுடன் அமைந்துள்ளது. viii. 300/1920/I.

R65

சுப்பிரமணிய அய்யர், வி.ஆர். (மொ,து.)

196. i. பிரத்திய பிஞ்ஞா இருதயம்: முதற் பதிப்பு ; ii. வி.ஆர். சுப்பிரமணிய அய்யர் ; பி. ஆர். ராம அய்யர் அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1918 ; iv. உ.ப. 63 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–6–6 ; vii. சிவத்துடன் ஒன்றுபட்டுச் சிவோஹு மென்று பூர்ண ஸமாவேச வடிவமாக உண்டாகும் சாக்ஷாத் கார அனுபவ ஞானத்தைப் பற்றி, இருபது சூத்திரங்களால் வடமொழியில் (சமஸ்கிருதம்) எழுதப்பட்டவைகளின் மொழி பெயர்ப்பு ஆகும். இது சைவ மதச் சார்புள்ள நூல். அத்வைத

சைவ நூலாகிய, 'ஸ்ரீதிரிபுரா ரகஸியம்' என்பதனையும் இவ் வாசிரியர் மொழி பெயர்த்துள்ளார். வடமொழி நூலாசிரியர் க்ஷேமராஜாசாரியர் ஆவர். நூன்முகப்பில் பிரத்திய பிஞ்ஞா இருதய சூத்திரங்களுடைய பாட அனுக்கிரமணிகையும் இந் நூலின்கண்ணுள்ள சூத்திரங்களில் அடங்கியுள்ள பொருள் சுருக்கமும், நூலின் இறுதியில் இந்நூலிற் பிரமாணமாகக் கொண்ட நூல்களின் விவரமும் உள்ளன. viii. 115/1918/II.

R65

**சுப்பிரமணிய சிவா**

197. i. சச்சிதானந்தசிவம்: திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. எம். சண்முக முதலி, சென்னை: சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1917; iv. உ ப. 124+12=136; v. 22×14 செ.மீ; vi. 0-14-0; vii. அத்வைத சித்தாந்தத்தை விளக்குவது இந்நூல். ஆசிரியர் தாம் சிறையிலிருக்கும் பொழுது இதனை எழுதினார். ஆசிரியர், மாணவர் உரையாடும் முறையில் இந்நூல் அமைக்கப்பட்டுள்ளது. viii. 469/1918/I.

R65

198. i. பிரணவ கோஷம்: முதற் பதிப்பு; ii. ஹிந்து மதாபிமான சங்கம், காரைக்குடி; வைசியமித்திரன் பிராஞ்சு பிரஸ், காரைக்குடி; iii. மே, 1918; iv. உ.ப. 10; v. 11×7 செ.மீ.; vi. இலவசம்; vii. இந்து மதத்தின் மேன்மையினைப் பற்றியும், 'ஓம்' என்று சொல்லக்கூடிய புனிதமான அந்தச் சொல்லின் சிறப்பினைப் பற்றியும் இதில் கூறப்பட்டுள்ளது. ஹிந்து மதாபிமான சங்கத்தார் தந்த முகவுரையுடன் கூடியது. சுப்பிரமணிய சிவாவினால் ஞானபானுப் பத்திரிகையில் எழுதப் பட்டிருந்ததின் தனி வெளியீடு இச்சிறு நூல். viii. 737/1918/II.

R65

**சுப்பையா தேசிகன், ரு.ம.**

199. i. கலைமணி யோகாநந்தம்: முதற் பதிப்பு; ii. ரு. ம. சுப் பைய தேசிகர்; தாரா அச்சுக்கூடம், தஞ்சை; iii. ஜூன், 1919; iv. உ.ப.+செ.மு.ப. 57; v. 21×14 செ.மீ.; vi. இல வசம்; vii. இதில் வேதம், சாத்திரம், பதினெண் புராணம், ஆகமம், மனுவிக்யானம், கலைக்யானம் முதலியவைகள் சுருங்கக் கூறப்பட்டுள்ளன. பல எடுத்துக் காட்டுக்கள் தரப்பட் டுள்ளன. சில குறட்பாடல்களும் இசைக் கீர்த்தனங்களும் இதில் இடம் பெற்றுள்ளன. viii. 125/1919/III.

R65

**சேஷகிரி ஐயர், கா.சு.**

200. i. எல்லாம் நானே: முதற் பதிப்பு; ii. கா. சு. சேஷகிரி ஐயர், சென்னை; பி. ஆர். ராமய்யர் அண்டு கோ, சென்னை; iii. ஜூலை, 1918; iv. உ.ப. 40; v. 12×10 செ.மீ.;

vi. 0–2–0 ; vii. அத்வைத மார்க்கத்தின் உட்கருத்தான, 'கடவுள் ஒருவரே, அனைத்தும் அவன் மயமே' என்பதனை விளக்கும் ஒரு சிறு புத்தகம் இது. எல்லாம் நானே என்பது எவ்வாறு பொருந்தும் என்பதனை ஆசிரியர் பல தடை விடைகளான் தெளிவாகப் படிப்போர் உளங்கொள, உள்ளங்கை நெல்லிக்கனியென விளக்கியுள்ளார். ஒவ்வொருவரும் படித் தறிய வேண்டிய அரிய பெரிய செய்திகள் இச்சிறு நூலின்கண் அடங்கியுள்ளன. viii. 409/1918/III.

R65

சொக்கலிங்கம் செட்டியார், ராம. சொ., காரைக்குடி

201. i. வேதாந்தம் : முதற் பதிப்பு ; ii. ராம. சொ. சொக்க லிங்கம் செட்டியார், காரைக்குடி ; ஞானம்பிகா பிரிண்டிங் வொர்க்ஸ், காரைக்குடி ; iii. டிசம்பர், 1917 ; iv. உ.ப. 20 ; v. 13×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. இது இந்துமத வேதாந்த நூல். இதில் பசு, பதி, பாசம் என்ற முப்பொரு ளுண்மையும் சைவ மதத்தின் பெருமையும் கூறப்பட்டுள்ளன. viii. 891/1918/II.

R65

202. i. சொக்கலிங்கம் செட்டியாருக்குச் சூட்டுக்கோற்புச்சம் : முதற் பதிப்பு ; ii. சச்சிதானந்தம் பிரஸ், சென்னை, கோமளேஸ்வரன் பேட்டை; iii. மார்ச், 1919 ; iv. உ.ப. 52 ; v. 22×14 செ.மீ. ; vii. காரைக்குடி அறுபத்துமூவர் மடச் சொக்கலிங்கம் செட்டி யார் வெளியிட்ட வாதங்களுக்கு எதிர்வாதங்கள் இதில் அடங்கி யுள்ளன. பல வேதாந்திகள் எழுதிய இருபத்தொரு குறிப்புக் களும் அடங்கியுள்ளன. viii. 160/1919/II.

R65

திருவேங்கட நாதேந்திர சுவாமிகள், திருவாமாத்தூர்

203. i. ஞான சோபனம் : முதற் பதிப்பு ; ii. அருணாசலசுவாமி, திருமழபாடி ; ஸதர்ன் ஸ்டார் அச்சுக்கூடம், திருச்சிராப்பள்ளி; iii. 1917 ; iv. செ.மூ.எ. 94 ; v. 21×14. செ. மீ. ; vi. இலவசம் ; vii. வேதாந்த தத்துவங்களை விளக்கும் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. viii. 350/1918/I

R65

தெத்தாத்ரைய சுவாமிகள்

204. i. சமாதி சகசம் முதலிய பதினொரு திருப்பதிகங்கள் ; முதற் பதிப்பு ; ii. கொ. செல்வரங்கம் அண்டு கோ, சென்னை ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1919 ; iv. செ.மூ.எ. 121 ; v. 14×11 ; செ.மீ. ; vi. 0–2–0 ; vii. வேதாந்த தத்துவத்தை விளக்கும் பதினொரு பதிகங்கள் இதில் அடங்கியுள்ளன. அவையாவன ; சமாதி

சகசம், பிரம சகசம், ஆனந்த சகசம், அறிவமல சகசம், சாட்சி சகசம், நாட்ட சகசம், அண்ட சகசம், பரம சகசம், சிவ சகசம், சொரூப சகசம், விவேக சகசம் என்பன. viii. 943/1919/II.

R65

**பதஞ்சலியார்**

i. பதஞ்சாலியார் சூத்திரம்—16 (தொ.எ. 1122 பார்க்க); ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீ ராமச்சந்திரவிலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 16; v..; vi..; vii. வாதத்தின் வழியும், அதன் குருவும் முடிக்கும் முறையும் விளக்கப்பட்டுள்ளன. மதுரைப் பாத்திரக்கடை வியாபாரம் ந. ராம. கணபதியா பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப்பிரதியின்படி இது அச்சிடப்பெற்றது; viii. 60/1916/II.

R65

**பரசுராம பிரமானந்த ஞானி, சென்னை**

205. i. சுரூப அமிர்தானந்த யுக்திரத்னாகரம்: முதலாம் பதிப்பு; ii. பரசுராம பிரமானந்த ஞானியவர்கள், மதுரை; எக்ஸெல் ஸியர் அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1919; iv. உ.ப.+ செ.மூ.ப. 296; v. 22×15 செ.மீ.; vi 2–8–0; vii. இதில் பல வேதாந்த தத்துவங்கள் விளக்கப்பட்டுள்ளன. பல நூல்களினின்று மேற்கோள்கள், கவிதைகள் முதலியன எடுத்தாளப்பட்டுள்ளன. பல இடங்களில் உரையாடல்கள் மூலம் விளக்கம் தரப்பட்டுள்ளது. இந்நூலாசிரியரின் மாணவர்கள் இயற்றுவித்த சற்குரு வணக்கத் தோத்திரப் பதிகத்துடன் கூடியது. viii. 400/1920/II.

R65

206. i. பரமரெஹஸியம் என்னும் அதிச ரெஹஸியம்: முதற் பதிப்பு; ii. காஸிம் பிரஸ், மதுரை; iii. செப்டம்பர், 1919; iv. செ.மூ.ப. 11; v. 21×14 செ.மீ.; vi. 0–1–6; vii. அத்வைத வேத இரகசியத்தினைப் பற்றிய முழு விவரத்தை யும் இந்நூலிற் காணலாம். இவ்வாசிரியர் கருவூரிலிருந்து மதுரை வந்து ஸ்ரீ மீனாட்சியம்மன் சன்னதியில் வேதாந்த சிர வணம் செய்து வந்தவராவர். பரமார்த்த ரகஸியம் குறித்து உரைநடையில் விளக்கம் செய்துள்ளார். பிற்பகுதியில் சில இசைப் பாடல்களும் தரப்பட்டுள்ளன. viii. 829/1919/IV.

R65

**பாலசுந்தர முதலியார், பி.சி. எஸ். (தொ.து.)**

207. i. திரு ஞானப் பழம்: முதற் பதிப்பு; ii. பி.சி.எஸ். பால சுந்தர முதலியார், காஞ்சிபுரம்; விக்டோரியா ராயல் அச்சுக் கூடம், காஞ்சிபுரம்; iii. மார்ச், 1920; iv. செ.மூ.எ. 8;

v. 22×14 செ.மீ.; vi. 0–2–0; vii. வேதாந்தக் கருத்துக்களை விளக்கும் ஒரு நூல். கீர்த்தனைப் பாடல்களால் அமைந்தது. viii. 825/1920/I.

R65

**பெரியசாமி முதலியார், அ., சென்னை**

208. i. நாநா சீவ வாதக்கட்டளைச் சங்கை நிராகரணம்: முதற் பதிப்பு; ii. கோ. வடிவேலு செட்டி, சென்னை; சச்சிதானந்தம் பிரஸ், கோமளேசுவரன்பேட்டை, சென்னை; iii. மார்ச், 1919; iv. உ.ப. 160; v. 14×11 செ.மீ.; vi. 0–4–0; vii. இந்நூல் பூவானூர் சைவ சித்தாந்த சபைத் தலைவர் சாமியையாத் தேசிகரின் மாயாவாதமத நிராசநமென்னும் புத்தகத்தின் மறுப்பு; பல நூல்கள் மேற்கோள்களாகக் காட்டப்பட்டிருக்கின்றன. நாநாசீவ வாதக்கட்டளை ஆங்கிலத்திலும் மொழிபெயர்க்கப்பெற்ற பெருமையுடைய நூலாகும். வேதாந்த தத்துவ உண்மைகளை அறிவதற்கு ஆதாரமான நூல் இதைக் குறித்து மாறுபட்ட கருத்துக்களை வெளிப்படுத்திய தேசிகரின் கொள்கைகளைத் தக்க ஆதாரங்கள் கொண்டு இவ்வாசிரியர் மறுத்துரைக்கின்றார் viii. 158/1919/II.

R65

**மீனாக்ஷிசுந்தர சுவாமிகள்**

209. i. தத்துவ ஞானுநுபவ விளக்கம் (சிவாநந்த சாரம், பரசிவ தோத்திரம், பூரணமணிமாலைக் கண்ணி): முதற் பதிப்பு; ii. கோ. வடிவேலு செட்டியார், சென்னை; சச்சிதாநந்த அச்சுக்கூடம், சென்னை, கோமளேசுவரன்பேட்டை; iii. 1916; iv. உ.ப. 128; v. 21×14 செ.மீ.; vi. 0–12–0; vii. மோன நிலையை அடையும் நெறியை விளக்குவது. பற்பல நூல்களையும் ஆய்ந்து வேதாந்த சித்தாந்த சாத்திரங்களின் பிரமாணங்களைக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. எளிய நடையில் எழுதப்பட்டுள்ள இந்நூல் வேதாந்த சித்த விருத்தியையுடையவர்களுக்கு இன்றியமையாதது. இதனோடு சிவானந்த சாரம், பரசிவதோத்திரம், பூரணமாலைக் கண்ணி என்னும் பகுதிகளைச் செய்யுளாக இயற்றியுள்ளார்; viii. 8/1916/II.

R65

**முத்துராமலிங்க சுவாமிகள், சிதம்பரம்**

210. i. சத்திய சன்மார்க்கப் பிரகாசிகை: முதற்பாகம்: முதற் பதிப்பு; ii. ரிக்கார்ட் அச்சியந்திரசாலை, இராயவேலூர்; iii. 1916; iv. உ.ப.+செ.மூ.ப. 30; v. 14×11 செ.மீ.; vii. சமய சகிப்புத் தன்மையும் சமூக சேவையும் இந்நூலின்கண் விளக்கப்பட்டுள்ளன. அருட்பாக்களும், பெரியோர்களின் அறிவுரைகளும் கொண்டு மிளிருவது இந்நூல். இவ்வாசிரியர் இம்

முறையில் அச்சிட்டிருக்கும் பிற நூல்களாவன: சீவகாருண்ய விளக்கம், பஞ்சரச மஞ்சரி, சதுர்வித புருடார்த்த சங்கிரகம், சரியையாதி ஜோதிட விளக்கம், பதினெண்புராண சாரசங்கிரம், சத்திய சன்மார்க்கப் பிரகாசிகை, தோத்திரத் திரட்டு முதற் பாகம் முதல் எழாம் பாகம் வரை. viii. 665/1916/III.

R65

**211.** i. சத்தியசன்மார்க்கப் பிரகாசிகை: இரண்டாம் பாகம், முதற் பதிப்பு; ii. முத்துராமலிங்க சுவாமிகள், சிதம்பரம்; iii. பச்சையப்ப அச்சியந்திரசாலே, வேலூர்; iii. ஜனவரி, 1917; iv. உ.ப. 64; v. 14×11 செ.மீ.; vi. இலவசம்; vii. சைவ வேதாந்தத் தத்துவத்தை ஒட்டிய கருத்துக்களே விளக்குவது குறிப்பாகக் கடைத்தேறுதல் பற்றி இந்நூலிற் கூறப்பட்டுள்ளது. இன்ப நிலே எய்துவதற்குப் படிநிலேயாகவுள்ள பலவற்றையும் எடுத்துரைக்கிறது. தேவாரம், தாயுமான சுவாமிகள் பாடல், பட்டினத்தார் பாடல் முதலிய பல முன்னேயோர் பாடல்களும் எடுத்துக்காட்டப் பெற்று விளக்கம் தரப்பட்டுள்ளன; viii. 679/1917/I.

R65

முருகேச முதலியார், புதுவை

**212.** i. கைவல்ய நவநீத வசனம்: முதற் பதிப்பு; ii. கொ. லோகநாத முதலியார்; மநோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னே; iii. 1916; iv. செ.மூ.உ.எ. 291; v. 14×11 செ.மீ.; vi. 0–8–0; vii. தாண்டவராயமூர்த்தி சுவாமிகள் இயற்றிய கைவல்ய நவநீதம் என்னும் வேதாந்த தத்துவ நூற்பாடல்களுக்கு ஏற்றபடி வசனநடையில் எழுதப்பட்டுள்ளது இந்நூல். இவ்வசனம் இலக்கணம் கற்ருேர், கற்றிலார் யாவருக்கும் பொதுப்படப் பயன்படுமாறு பெரும்பாலும் புணர்ச்சி விகாரங்களே நீக்கி எழுதப்பட்டுள்ளது. இதற்கு ஆதாரமாக ஆசிரியருக்கு அமைந்த நூற்கள்: பிறையாறு அருணசல சுவாமிகள் உரை (கி.பி. 1844) புரசைச் சச்சிதாநந்த ஸ்வாமிகள் விருத்தியுரை, கோயிலூர் பொன்னம்பல ஸ்வாமிகள் உரை, ஈக்காடு இரத்தினவேலு முதலியாரின் குறிப்புரை, கோ. வடிவேலு செட்டியார் எழுதிய கைவல்ய நவநீத வினவிடை வசனம் ஆகியவையாம். viii. 157/1916/III.

R65

**213.** வேதாந்த போதினி: முதற் பதிப்பு; ii. கொ. செல்வரங்கம் அண்டு கோ; மநோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னே; iii. ஜுன், 1918; iv. உ.ப. 144; v. 21×14 செ.மீ.; vi. 0–8–0; vii. இதற்குச் சமரசஞான போதினி என்னும் ஒரு பெயர் உண்டு. இதில் இந்தியாவில் உள்ள பல்வேறு சமயக் கொள்கைகளும் தத்துவங்களும் மிகவும் சுருக்கமான முறையில் உரைநடையாக எழுதப்பெற்றுள்ளன. எட்டுவித

யோகங்களைப் பற்றிய விளக்கமும் தரப்பட்டுள்ளது. கர்ம யோகம், ஞானயோகம், பக்தியோகம் முதலியன பற்றிய விளக்கங்களும் எழுதப்பட்டுள்ளன. த்வைதம், அத்வைதம், விசிட்டாத்வைதம் ஆகியவைபற்றியும், அவற்றின் வேறுபாடுபற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூலாசிரியர் தத்துவ விசாரணி என்னும் பத்திராதிபராக இருந்தவர் viii. 813/1918/II.

R65

214. i. மோக்ஷசோபாநம்: முதற் பதிப்பு; காசிகாநந்த சுவாமிகள், கோவிலூர்; கணேச அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜனவரி, 1918; iv. உ.ப. 188; v. 16×13 செ.மீ.; vi. 0–12–0; vii. இது மோட்சத்தை அடையும் வழிகளை விளக்கும் அத்வைத சித்தாந்தத்தை ஒட்டிய நூல். இந்நூல் முமுக்ஷுகட்கு மாத்திரம் முத்தி மார்க்கம் இஃதேயாம்; வேறு உபாயத்தாலன்றுமெனத் தெளிந்தனுட்டிக்குந் தகுதியைத் தருவதாகலின், இதற்கு "மோக்ஷசோபாநம்" எனப் பெயரிடப் பெற்றது. திருப்போரூர்ச் சந்நிதி முறையில் ஒரு பகுதியும் இதன்கண் அடங்கியுள்ளது. viii. 706/1918/I.

R65

மௌனகுரு சுவாமிகள்

215. i. மாமௌன மணிக்கோர்வை என்ற மெய்ஞ்ஞான அநுபூதி ரஸம்: முதற் பதிப்பு; ii. வி. ராமபத்திர நாயுடு, தொட்டப்ப நாயக்கனூர்; ஸ்ரீ மீனம்பிகை அச்சியந்திரசாலை, பெரியகுளம்; iii. மார்ச், 1920; iv. செ.மூ.எ. 368; v. 17×13 செ.மீ.; vi. . . . vii. இது வேதாந்தக் கருத்துக்களை விளக்கும் நூல். தத்துவராயர் 'பாடுதுறை'யைப் போன்று பல்வேறுவகைப் பிரபந்தங்கள் அடங்கிய மாமணிக் கோவையாகும் இந்நூல். தாலாட்டு, கோலாட்டம், பல்லி, மயிலு, சிந்து, பள்ளியெழுச்சி முதலியனவாகப் பற்பல சிற்றிலக்கியப் பாடல் வகைகளும் இடம் பெற்றுள்ளன. viii. 892/1920/I.

R65

ராமகிருஷ்ண சுவாமிகள், வாசுதேவநல்லூர்

216. i. சத்துவகுண போதினி—முதற் பாகம்: முதற் பதிப்பு; ii. டி. எஸ். மகாராஜ பிள்ளை, ஸ்ரீவில்லிபுத்தூர்; சரஸ்வதி அச்சுக்கூடம், ஸ்ரீவில்லிபுத்தூர்; iii. ஆகஸ்ட், 1918; iv. உ. ப. 15; v. 23×14 செ.மீ.; vi. 0–2–0; vii. இந்நூல் வாசுதேவநல்லூர் இராமகிருஷ்ண சுவாமிகளால் இயற்றப்பட்டிருக்கும் பன்னிரண்டு பாகங்களுள் முதற்பாகம் ஆகும். இதில், சத்துவகுணமான நல்லொழுக்கம் பற்றி நன்கு விளக்கப்பட்டுள்ளது. viii. 653/1918/IV.

R6

ராமச்சந்திர நாயுடு, ஏனங்குடி (மொ. து.)

217. i. சாந்தி வசனம்: முதற் பதிப்பு; ii. இரத்தின சபாபதி முதலியார், தஞ்சாவூர்; பிரம்ம வித்யா அச்சுக்கூடம், திருமீயச்சூர்; iii. ஆகஸ்ட், 1918; iv. உ. ப. 21; v. 22×14 செ.மீ.; vi. 0–3–0; vii. நமது பெரிய துரவஸ்தைபற்றியும், அது நீங்கும் வழியினைப் பற்றியும், ஜீவனுடைய கதியினைப் பற்றியும் இப்புத்தகம் விளக்கமாகக் கூறுகிறது. இஃது ஒரு பிரம்ம ஞான சபை வெளியீடாகும். 'சாந்தி வசனம்' வெளியீட்டில் இது இரண்டாவது தொகுதியின் ஒன்பதாவது வெளியீடாகும். நஞ்சுண்டப்பா என்பவர் தெலுங்கில் எழுதிய நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு இந்நூல். viii. 970/1918/III.

R65

ரெங்காச்சாரியார், ஆர். (மொ. து.)

218. i. சாந்தி வசனம்: முதற் பதிப்பு; ஏ. டி. இரத்தினசபாபதி முதலியார், திருமீயச்சூர்; பிரம்மா வித்யா அச்சுக்கூடம்; திருமீயச்சூர்; iii. ஏப்ரல், 1919; iv. உ.ப. (49—72) 44; v. 23×14 செ.மீ.; vi. 0–3–0; vii. இது சாந்தி வசனமெனப் படும், பிரம்ம வித்யா தீபிகையின் மூன்றும் பாகம். சி. இராமய்யா அவர்களால் தெலுங்கில் இயற்றப்பட்டதைத் தமிழாக்கம் செய்தவர் ஆர். ரெங்கராச்சாரியார். சீர நிலைமைகளையும், மனத்தையும் விவரிக்கும் நூல். viii. 567/1919/II.

R65

219. i. பிரம்ம வித்யா தீபிகை: முதற் பதிப்பு; ii. ஏ. இரத்தினசபாபதி முதலியார், திருமீயச்சூர்; பிரமய வித்யா அச்சுக்கூடம், திருமீயச்சூர்; iii. பிப்ரவரி, 1919; iv. உ. ப. 24; v. 22×14 செ.மீ.; vi. 0-3-0; vii. பரம்பொருளைப் பற்றிய முழு விவரமும் இந்நூலில் அடங்கியுள்ளது. இது ஒரு பிரம்ம ஞான சபை வெளியீடாகும். ஸி. ராமய்யா என்பவரால் தெலுங்கு மொழியில் எழுதப்பட்ட நூலிலிருந்து மொழி பெயர்த்தமைக்கப்பெற்றது இந்நூல். 'சாந்தி வசனம்' என்னும் தொடர் வெளியீட்டில் இது ஐந்தாவது பகுதியாகும். viii. 998/1919/I.

R65

220 i. பிரம்ம வித்யா தீபிகை—ஆறும் பாகம்: முதற் பதிப்பு; ii. ஏ. இரத்தின சபாபதி முதலியார், திருமீயச்சூர்; பிரம்மா வித்யா அச்சுக்கூடம், திருமீயச்சூர்; iii. அக்டோபர், 1920; iv. (121—192) 72; v. 21×14 செ. மீ.; vi. 0–9–0; vii. 'சாந்தி வசனம்' என்னும் தொடர் வெளியீட்டில் இது மூன்றும் தொகுதி, 10, 11, 12-ஆம் இதழ்களாகும். viii. 221/1920/IV.

R65

**லக்ஷுமிநாராயணய்யர், டி. எஸ்.(மொ. து.)**

221. i. ஸத்குரு பாதங்களில்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. சாவித்திரி அம்மாள், எனங்குடி; பிரம்ய வித்யா பிரஸ் திருமீயச்சூர், பேரளம்; iii. ஏப்ரல், 1919; iv. உ.ப. 59; v. 13×10 செ.மீ.; vi. 0–6–0; vii. இதில் பல அற நெறிக் கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன. அன்னிபெசண்டு அம்மையாரால் அளிக்கப்பட்ட முன்னுரையுடன் கூடியது. மேன்மார்க்கத்திற்குரிய சாதனங்களாகிய பகுத்தறிவு, ஆசையின்மை, நல்லொழுக்கம், அன்பு ஆகிய நாற் பண்புகளும் இன்றியமையாதன என்று எடுத்தியம்பப்பட்டுள்ளன. 'ஆல்சியோனி' என்பவர் குருநாதன்பால் தெரிந்து வெளிப்படுத்திய கருத்துக்கள் தமிழில் மொழிபெயர்த்து அமைக்கப்பட்டுள்ளன. viii. 566/1919/II.

R65

**லோகநாத சுவாமிகள், மூவலூர்**

222. i. ஆத்மரக்ஷாமிர்த கைவல்யம்: முதற் பதிப்பு; ii. ந். இராமலிங்கம் பிள்ளை; ஸ்ரீகுஞ்சிதசரண அச்சியந்திரசாலை, சிதம்பரம்; iii. நவம்பர், 1920; iv. செ. மூ. ப. 43; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii. பரமாத்மாவின் அன்பைப்பற்றியும், அருள் புரிவதைப் பற்றியும், அவ்வன்புடன் ஐக்கியமாவது பற்றியும் இந்நூலிற் பாடல்கள் மூலமாக விளக்கப்பட்டுள்ளன. இந்நூலாசிரியரின் அடிமையும், பிறைசை நாடார் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியரும் ஆகிய சிதம்பரம் த. இராமலிங்கம் பிள்ளை, நூலாசிரியர் மாணவரும் திருக்கடவூர்ப் பள்ளி ஆசிரியருமாகிய சாமி ஓதுவார் முதலியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் தந்துள்ளனர். viii. 807/1920/IV.

R65

**லோகநாதம் பிள்ளை, ஏ. பி.**

223. i. மனிதனும் ஜீவன் முக்தியும்: முதற் பதிப்பு; ii. கே. சி. வரதராஜுலுச் செட்டி, உதகமண்டலம்; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. நவம்பர், 1916; iv. உ. ப. 82; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii. மனிதனுடைய ஜீவன் நிலைகளைப் பற்றியும், அது முக்தியடைந்து இறைவனுடைய அனுக்கிரகம் பெறுவதைப் பற்றியும் ஆசிரியரது சொந்த அனுபவங்களோடு இந்நூலில் விளக்கியுள்ளார். ஆசிரியர், குரு வாயிலாகத் தெளிந்து அனுபவத்திற்பட்ட செய்திகளையே இதில் வெளியிட்டுள்ளார். viii. 951/1916/IV.

R65

**வரதராஜுலு நாயுடு, பி., திருப்பூர்**

224. i. முக்திபெறும் இரகசியம்: முதற் பதிப்பு; ii. வரதராஜுலு நாயுடு; இம்மானுவல் அச்சுக்கூடம், கோயம்புத்தூர்;

iii. 1916 ; iv. உ. ப. 53 ; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0 ; vii. நடைமுறை வேதாந்தத்தைக் கடைப்பிடித்து முக்திபெறும் வழியினைக் கூறுவது. 1910-ம் ஆண்டில் இவ்வாசிரியரால் வெளியிடப்பட்டுள்ள 'அனுகூல மர்மம்' (Secret of success) என்னும் நூலிலிருந்து இப்புத்தகத்திற்கண்ட செய்திகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. viii. 526/1916/II.

R65

**வாலையானந்த சுவாமி, பஞ்சாட்சரபுரம்**

225. i. தத்துவ விளக்கச் சுருக்கம் : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீவாலையானந்த சுவாமி, சென்னை ; கோல்டன் அண்டு கம்பெனி ; iii. ஜூன், 1918 ; iv. உ. ப. 48 ; v. 13×12 செ. மீ.; vi. 0–2–0 ; vii. உண்மை நிலையைப் பற்றிய சில கருத்துக்களும், சைவ மதத்தினது தத்துவ விளக்கமும் இப்புத்தகத்திற் கூறப்பட்டிருக்கின்றன. தேர்வு வினாக்கள் ஒவ்வொரு பிரிவின் இறுதியிலும் கொடுக்கப்பட்டுள்ளன. சிவபேதம், சத்திபேதம் இரண்டும் தனித்தனியே விளக்கப்பட்டுள்ளன. ஆன்ம விளக்கமும், தத்துவ விளக்கமும் பின் அட்டவணையில் தெளிவாக்கப்பட்டுள்ளன. சைவ சித்தாந்த உண்மைகளைத் தெளிவுற விளக்கும் சிறுநூல். viii. 939/1918/III.

R65

**விலக்ஷிஞானந்த ஸ்வாமி**

226. i. அக்ஷர நுட்பம் : திருந்திய இரண்டாம் பதிப்பு ; ii. வை. சண்முகம் பிள்ளை, திரிசிரபுரம் ; டாட்ஸன் பிரஸ், திரிசிரபுரம் ; iii. ஜனவரி, 1918 ; iv; செ. மு. எ. 150 ; v. 10×8 செ.மீ.; vi. இலவசம் ; vii. தமிழ் எழுத்துக்கள் அகர வரிசையில் இருப்பதை ஒட்டி எழுதப்பட்ட உபதேச, வாக்கியங்கள் இதில் உள்ளன. எழுத்து வரிசை முறையில் தொடர்கள் அமைந்துள்ளன. 'ஆத்திசூடி'த் தொடர்கள் போன்ற அமைப்பினை உடையவை. viii. 248/1918/I.

R65

227. i. அக்ஷர நுட்பம் : முதற் பதிப்பு ; ii. பி. கே. சிதம்பரம் பிள்ளை, பாலக்காடு ; வித்தியா சந்தனம் பிரஸ், பாலக்காடு ; iii. மே, 1919 ; iv. உ. ப. 82 ; v. 14×11 செ. மீ.; vi. . . . ; vii. இதில் அகர முதல் னகரம் வரையிலுமுள்ள எல்லா எழுத்துக்களையும், மற்றும் சில எழுத்துக்களையும், அதனதன் அதிநுட்ப சிறப்புக்களையும், வைதிக உலக சம்பந்த மார்க்கமாய்க் கூறியிருக்கிறார் ஆசிரியர். ஒவ்வொரு வாக்கியத்திற்கும் பாகியார்த்தம் அந்தரார்த்தம் என்னும் இரண்டும் விவரிக்கப்பட்டுள்ளன. இவற்றால் பல வாழ்க்கை உண்மைகள் புலப்படுகின்றன. viii. 415/1919/II.

R65

228. i. இதோபதேசம் ; முதற் பதிப்பு ; ii. டி. சி. தங்கவேலுப் பிள்ளை, திருச்சி ; வெட்னேஸ்டே ரிவ்யூ பிரஸ், திருச்சி ; iii. 1918 ; iv. உ. ப. 8 ; v. 14×11 செ.மீ.; vi. இலவசம்; vii. இதில் கருமம், பக்தி, ஞானம் ஆகிய தலைப்புகளின்கீழ் 100 (நூறு) கருத்துரைகள் தரப்பட்டுள்ளன. இவை மேற்கொண்டொழுகுதற்குத் தகுதி வாய்ந்தன. viii. 947/1918/I.

R65

229. i. காந்தி : முதற் பதிப்பு ; ii. சா. நடேசச் செட்டி, கும்ப கோணம் ; ஸ்ரீகிருஷ்ண விலாஸ பிரஸ், கும்பகோணம் ; iii. ஜூன், 1920 ; iv. உ. ப. 13 ; v. 16×11 செ. மீ.; vi. . . . ; vii. தேவார நகரம் சுத்த அத்வைத அருட்கவி விலக்ஷிணானந்த சுவாமிகள் கும்பகோணத்தில் நிகழ்த்திய உரை இதில் அடங்கி யுள்ளது. viii. 180/1920/III.

R65

230. i. சதானந்தம் : முதற் பதிப்பு ; ii. டி. எஸ். சக்ரபாணிச் செட்டியார் & வாசுதேவச் செட்டியார், பாலக்காடு ; வித்யா சந்தானம் அச்சுக்கூடம், பாலக்காடு ; iii. அக்டோபர், 1917 ; iv. செ. மூ. எ. 100 ; v. 14×11 செ.மீ.; vii. இது அத்வைத வேதாந்தக் கொள்கைகளை விளக்கும் சிறு வெளியீடு. விருத்தப் பாக்களினால் அமைந்தது. viii. 515/1917/IV.

R65

231. i. சமயோசித சிந்தாமணி ; ii. வித்தியா சந்தானம் அச்சி யந்திரசாலை, பாலக்காடு ; iii. 1917 ; iv. செ. மூ. எ. 49 ; vi. . . . ; v. 13×11 செ.மீ.; vii. மன ஒருமைப்பாட்டுக்குரிய யோக நிலை முதலியவற்றை விளக்குவது. இவை இவ்வாசிரியர் தமது அநுபூதியிற் கண்டவையாகும். viii. 829/1917/III.

R65

232. i. பிரமநிஷ்டை : முதற் பதிப்பு ; ii. சிதம்பரம் பிள்ளை, பாலக்காடு ; வித்தியா சந்தானம் பிரஸ், பாலக்காடு ; iii. பிப்ரவரி, 1918; iv. செ.மூ.எ. 65 ; v. 13×11 செ. மீ.; vi. . . ; vii. இது நிஷ்டையைப் பற்றி விளக்கும் வேதாந்த தத்துவ வெளியீடு. அத்வைதமும் அதனால் அடையும் பிரம நிஷ்டையும் இதன்கண் பேசப்படுகின்றன. சிவகங்கை ஸ்ரீகலாபிரஸில் பதிப்பிக்கப்பட்ட பிரதிக்கு இணங்க இது அச்சிடப்பட்டுள்ளது. viii. 637/1918/I.

R65

233. i. பிரஹ்மோ உபந்நியாஸம் : முதற் பதிப்பு ; ii. டி. எஸ். முத்துசாமிப் பிள்ளை, திரிசிரபுரம் ; ஸ்ரீகிருஷ்ண விலாச அச்சாபீஸ், திருச்சி ; iii. டிசம்பர், 1917 ; iv. உ. ப. 19 ; v. 17×11 செ. மீ.; vii. இந்நூலில் விலக்ஷணானந்த

சுவாமிகள் 1917-ம் ஆண்டு மே மாதம் 8-ம் தேதி மாலை ஈரோடு இரயில் நிலையத்தில் செய்த சொற்பொழிவின் சுருக்கம் தரப்பட்டுள்ளது. ஆத்ம சம்பந்தமான விளக்கங்கள் அடங்கி யுள்ளன. கொல்லங்கோடு பாரதபந்து அச்சகத்தில் பதிப்பித்த பிரதிக்கு இணங்க இந்நூல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. iii. 31/1918/I.

R65

234. i. பூணுநூல்: முதற் பதிப்பு; ii. பழனிப் பூசாரி, பாலக்காடு; வித்தியா சந்தானம் அச்சுக்கூடம், பாலக்காடு; iii. டிசம்பர், 1917; iv. செ.மூ.எ. 101; v. 11×8. செ.மீ.; vii. பூணு நூலைப் பற்றி இதில் பாடப்பெற்றுள்ளது; "எங்கள் நூலே" என்று பூணுநூலின் ஏற்றங்கூறும் 101 கண்ணி பாடல்களைக்கொண்டது. viii. 907/1917/IV.

R65

235. i. பூணு நூல்: திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. எஸ். ஷண் முகம் பிள்ளை, திரிசிரபுரம்; டாட்ஸன் பிரஸ், திருச்சிராப் பள்ளி; iii. ஜனவரி, 1918; iv. செ. மூ. எ. 101; v. 10×81 செ.மீ.; vi. இலவசம்; vii. விலக்ஷணனந்த சுவாமி கள் தாம் அணிந்திருந்த பூணுநூலினைப் பற்றிக் கூறியவை இந்நூலில் அடங்கியுள்ளன. ஒரு சமயம் கூடியிருந்த மாணவர்கள் சுவாமிகளுக்குப் பூணுநூல் இல்லையே என்ற பொழுது, தாம் மேற்கொண்டுள்ள நூல் இன்னது என அறி வுறுத்திக் கூறினாராம். இதில் பல தத்துவ உண்மைகள் உணர்த்தப்பட்டுள்ளன. viii. 249/1918/I.

R65

236. i. பூணுநூல்: முதற் பதிப்பு; ii. சுப்பிரமணிய பிள்ளை, கரூர்; கமர்ஷியல் பிரஸ், கரூர்; iii. ஜூன், 1918; iv. செ.மூ.எ. 101; v. 10×9 செ. மீ.; vi. இலவசம்; vii....viii. 822/1918/II.

R65

237. i. மோக்ஷத்துவார பாலக சதுர்வித விளக்கம்: முதற் பதிப்பு; ii. வித்தியா சந்தானம் பிரஸ், பாலக்காடு; iii. செப்டம்பர், 1917; iv. உ. ப. 8; v. 14×11 செ.மீ.; vii. இதில் 'ஆத்ம ஞானம்' அடைய நான்கு விதமான அரிய குணங்கள் விளக் கப்பட்டுள்ளன. மனக் கட்டுப்பாடுபற்றிக் குறிப்பாகச் சொல்லப் பட்டுள்ளது. உபசாந்தம், விசாரணை, சந்தோஷம், சாதுசங்கம் என்னும் நான்கு வாயில்கள் வழியாகச் சென்று ஆத்மச் சக்கரவர்த்தியைக் காணும் வகையினை விளக்குவது. viii. 71/1917/IV.

R65

238. i. மோக்ஷத்துவசாக பாலக சதுர்வித விளக்கம்: திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. விலக்ஷணனந்த சுவாமிகள், திருச்சி; நடராஜா அச்சுக்கூடம், திருச்சி; iii. டிசம்பர், 1917; iv....; v....; vi. . ; vii....; viii..... 341/1918/I.

R65

239. i. விலக்ஷணானந்த போதம்; ii. வித்தியா சந்தானம் பிரஸ், பாலக்காடு; iii. 1917; iv. உ.ப. 115; v. 13×11. செ.மீ. vi. 0—3—0; vi. சர்வதிரிசியங்களுக்கு மேலாயுள்ள பிரஹ்ம சொரூபத்தை நிருவிகற்ப அத்வைத சாக்ஷாத்கார வாயிலாக அறிவிக்கும் நூல் ஆதலின் விலக்ஷணானந்த போதம் என னும் பெயர் பெறுவதாயிற்று. ஆசிரியர் மாணவர் வினு விடை உருவமாக இது அமைக்கப்பட்டிருக்கிறது. ஜீவகாருண்யம், கருமயோகம், இராஜயோகம், அஞ்ஞானம், மகாவாக்கியம், ஆசிரியர் இலக்கணம், மாணவர் இலக்கணம், ஹடயோகம், மனம், பிரமசரியம், பெண்களுக்கு ஞானம் என்னும் பொருள்கள் விளக்கப்பட்டுள்ளன. இறுதியில் முக்கிய வினுவிடைகள் என்னும் ஒரு பகுதியும் உள்ளது. viii. 814/1917/III.

R65

240. i. வேதசாரம்: முதற் பதிப்பு; ii. விலக்ஷணானந்த சுவாமிகள் பாலக்காடு; வித்தியா சந்தானம் அச்சியந்திரசாலை, பாலக்காடு; iii. மே, 1917; iv. செ-மூ.ப. 43; v. 13×11 செ.மீ.; vi. இலவசம்; vii. இது வேதவிளக்கத்தையும், துறவறத் தையும் பற்றி அகரவரிசையில் எதுகை மோனையோடு எழுதப் பட்டுள்ள ஒரு நூல். 598 ஞானமொழிகள் இதில் உள. 'அத் திமா முகனை முத்தியினுறுவாம்', 'அகவறிவறிவா ரான்ற வராகும்' என்றுற்போல இம்மொழிகள் அமைந்துள. viii. 703/1918/II.

R65

241. i. ஜிஞ்ஞாசுரத்னம்: முதற் பதிப்பு; ii. டா. சி. கந்தசாமி பிள்ளை பாலக்காடு; வித்தியா சந்தானம் அச்சுக்கூடம், பாலக்காடு; iii. டிசம்பர், 1917; iv. உ. ப. 16; v. 16×10. செ.மீ.; vi. இலவசம்; vii. தேவார நகரம் சுத்தாத்வைத அருட்கவி விலக்ஷணானந்த சுவாமிகள் இயற்றிய ஜிஞ்ஞாசுரத்னம் என்னும் நூலின் தமிழாக்கமே இந்நூல். பல வேதாந்த நூல்களின் கருத்துக்கள் இதில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இந்நூல் முதலில் மலையாளத்தில் சுவாமிகளால் எழுதப்பட்டது. இதனைத் தமிழில் மொழிபெயர்த்தவர் பா. சி. கந்தசாமி பிள்ளை ஆவார். viii. 27/1918/I.

R65

242. i. ஜிஞ்ஞாசுரத்னம்: முதற் பதிப்பு; ii. சொ.மு.சு. ஆறு முகம்பிள்ளை, திரிசிரபுரம்; வெட்னஸ்டே ரிவ்யூ பிரஸ், திருச்சி; iii. பெப்ரவரி, 1918; iv....; v....; vi ... vii....; viii. 949/1918/I.

R65

வீராசாமி ராஜு, ராம, தஞ்சை (மொ. து.)

243. I. ஞானவாசிட்டமென்னும் பிருஹத்யோக வாசிட்ட மகாராமா யண வசனம்: முதற் பதிப்பு; ii. ஆ. சேதுராம பாரதியார், தஞ்சை; ஸ்ரீவித்யாவிநோதினி அச்சுக்கூடம், தஞ்சை; iii.

ஜூன், 1918; iv. உ.ப. 199; v. 18×13. செ.மீ.; vi. 2—0—0; vii. வால்மீகி வடமொழியில் எழுதியிருக்கும் யோகவாசிஷ்ட ராமாயணம் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அதன் முதற்பாகமாகிய 'வைராக்கியப் பிரகரணத்தின்' மொழிபெயர்ப்பு இது. இந்நூலின் தொடக்க முதல் அந்தம் வரையில் வேதங்களின் முடிவான உபநிடதப் பொருள் அர்த்தம் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றது. viii. 178/1918/III.

R65

**வேதாசலம்சுவாமி பண்டிதர், நாகை (மறைமலைஅடிகள், பல்லாவரம்)**

244. i. மரணத்தினபின் மனிதர் நிலை: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. சுவாமி வேதாசலம், பல்லாவரம் (சென்னை); டி. எம். அச்சுக்கூடம், பல்லாவரம்; iii. ஜூன், 1918; iv. உ.ப. 199; v. 19×13. செ.மீ.; vi. 2—4—0; vii. மரணத்திற்குப்பின், மனிதனுடைய ஆத்மாவின் செயலைப் பற்றி இந்நூல் விளக்குகின்றது. மரணத்திற்குப்பின் மனிதனுடைய நிலை என்ன என்பதைத் தெரிந்துகொள்வதற்கு இப்புத்தகம் நல்ல ஒரு விளக்கத்தை அளிக்கிறது. ஆசிரியரின் திருவுருவப் படம் நூன்முகப்பில் தரப்பட்டுள்ளது. இந்நூல் 'ஞானசாகரம்' என்ற பத்திரிகையில் தொடர்ந்து வெளிவந்த கட்டுரைகளின் தொகுப்பெனத் தெரிகிறது. viii. 155/1918/III.

R65

**ஜயராம சுவாமிகள்**

245. i. புராணேதிகாச தத்துவார்த்த தீபிகை; ii. ஜயராம் சுவாமி; பூலோகவியாஸன் பிரஸ்; iii. 1915; iv. உ.ப. 130; v. 22×14. செ.மீ.; vi 0—12—0; vii. புராண இதிகாசக் கதையின் குறிக்கோளும், விளக்கங்களும் அடங்கியுள்ளன. கற்பிதக் கதைகளைச் சொல்லிப் புராணங்கள் தத்துவம் உணர்த்துவதையும், அவற்றை யார் பொருட்டு அவ்வாறு உணர்த்துகின்றன என்பதையும் தெளிவாக விளக்குகிறது. நிச்சல இராமாநந்த சுவாமிகள், கோ. வடிவேலு செட்டியார் முதலிய பலர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 712/1916/I.

R65

**ஜினராஜதாசர்**

246. i. எனது பிரதிக்ஞை: முதற் பதிப்பு; ii. எ. ரத்னசபாபதி முதலியார், தஞ்சை; பிரம்ம வித்யா அச்சுக்கூடம், திருமீயச்சூர்; iii. செப்டம்பர், 1917; iv. உ.ப. 32; v. 21×14. செ.மீ.; vi. 0—4—0; vii. இந்நூலில் ஜினராஜதாசர் அவர்களால் ஆங்கிலத்தில் இயற்றப்பெற்ற 'ஐபிராமிஸ்' என்ற நூலின் தமிழாக்கம் தரப்பட்டுள்ளது. மனிதர்களுக்கு அவசியமான சில தன்மைகளைக் குறித்துக் கூறப்பட்டுள்ளது. குருநாதனின்

பெருமையும் சற்குரு உபதேசத்தால் விளையும் பயன்களும் விவரிக்கப்பட்டுள்ளன. அருள் நூல் மேற்கோள்கள் அங்கங்கே எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. நூலாசிரியரின் உருவப்படமும் உள்ளது. சாந்திவசனம் என்னும் பெயரில் வரும் மாத வெளியீடுகளில், இது முதல் தொகுதியின் 11, 12 ஆம் பகுதிகள் ஆகும். viii. 887/1917/IV.

R65

247. i. எனது பிரதிக்ஞை; மூன்றும் பாகம்; ii. எ. ரத்தின சபாபதி முதலியார், திருமீயச்சூர்; பிர்ம்ம வித்தியா அச்சுக்கூடம், திருமீயச்சூர்; iii. செப்டம்பர், 1917; iv. உ.ப. 69; முதல் 97 முடிய+1; v. 23×14 செ.மீ.; vi. 0–6–0; vii. இது ஜினராஜதாசருடைய ஆங்கிலப் பகுதியின் தமிழாக்கம் ஆகும். இயேசுக் கிறித்துவைப் பற்றியும், கிறித்துவ சமயத்தைப் பற்றியும் இதில் பேசப்படுகிறது. அருட் பாடல்கள் அங்கங்கே மேற்கோளாகக் கொடுக்கப்பட்டுள்ளன. 'சாந்திவசனம்' என்னும் தொடர் வெளியீட்டில் இது இரண்டாம் தொகுதியின் மூன்றாவது, நான்காவது வெளியீடு ஆகும். viii. 39/1918/II.

R65

248. i. ஜீவநாடகம் முதலிய சில அத்வைதப் பாட்டுக்களும் பஞ்சீகரண மகாவாக்கியமும்: மூன்றும் பதிப்பு; ii. வி. எஸ். வாலாம்பாள் அம்மாள், சென்னை; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1920; iv. செ.மூ.உ.ப. 64; v. 22×14 செ.மீ; vi. 0—4—6; vii. இந்நூலில் லலிதாம்பாள் திருவனந்தல், மீனாட்சி சுந்தரேசர் திருப்பள்ளியெழுச்சி, ஜீவ நாடகம், அத்வைதக் கொட்டை முத்துக்கும்மி, வேதாந்தக் கப்பல், பஞ்சீகரண மகாவாக்கியம் ஆகிய ஐந்து பொருள் பற்றிக் கூறப்பட்டுள்ளன. பஞ்சீகரண மகாவாக்கியத்தில் பஞ்ச பூத உற்பத்தி முதலியன மிகத்தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. viii. 638/1920/I.

R65

249. i. ஜீவரத்தினம்; ii. நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1919; iv. செ.மூ.ப. 16; v. 14×10 செ.மீ. vi. 0—0—6; vii. காயத்தின் நிலையாமை பற்றி எழுந்த பல பாடல்களின் தொகுப்பே இந்நூல். இதனோடு பட்டினத்தார் பாடிய உடற் கூற்று வண்ணம் பாடலும் தரப்பட்டுள்ளது. viii. 337/1920/I.

R65

250. i. ஸ்வாராஜ்யசித்தி; முதற் பதிப்பு ii. சண்முக முதலியார், மங்கலம், சென்னை; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஏப்ரல், 1919; iv. உ.ப. 60; v. 19×13 செ,மீ.; vi. 0—8—0; vii. இது அனந்த போதேந்திர சரசுவதி சுவாமிகளால் மூன்று பிரகரண உருவமாக நூற்றறுபத்தி மூன்று சுலோகங்களில்

மைக்கும், தனித்தனி உள்து. இறுதியில், உத்தரிக்கிற ஆத்துமாக்களைக் குறித்துப்பூசை காணும் வகையும் விவரிக்கப் பட்டிருக்கிறது. viiii. 712/1918/IV.

Q6 : 222

**இராஜலிங்கம் பொன்னுஸ்வாமி, டி.ஏ.**

341. i. தேவத் தோத்திரக் கவிச்சோலை : முதற் பதிப்பு ; ii. டி.எ. இராஜலிங்கம் பொன்னுஸ்வாமி, பம்பாய் ; கணேசா பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1918 ; iv. செ.மூ.ப. 20 ; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0 ; vii. உரோமன் கத்தோலிக்க சமயக் கருத்துக்களை விளக்கும் பாடல்கள் கொண்ட துதி நூல். "முத்து வீர மோகதிமரி களஞ்சிய மோகன மாலை" என்னும் பெயரும் இதற்கு உண்டு. மதுரை, புது மண்டபம், சோதிட நிபுணர் எஸ். கூடலிங்கம் பிள்ளை, திருவெண்ணெய்நல்லூர், வித்வான், டி. வடிவேலு முதலியார் ஆகியோர் இதற்குச் சாற்றுக்கவிகள் பாடியுள்ளனர். உயிரெழுத்து, வருக்கை வெண்பாமாலை, பரமன் புகழ் பெரிதும் உள்ள பஞ்சரத்ந மாலை, தேவமரி புகழ் பெரிதுமுள்ள பஞ்சரத்தின மாலை, ஆரோக்கியமரி வேண்டுதலாகிய கெஞ்சுங்கவி புஞ்சம், கும்மிகள், மும்மணி மாலை, பாவசங்கீர்த்தனம், மரியான எழிலங்கமாலை என்பன இடம் பெற்றுள்ளன. viii. 991/1919/III.

Q6 : 222

342. i. இலத்தின் பாட்டுப்புத்தகம் : முதற் பதிப்பு ; ii. எஸ்.பி. பிரஸ், தூத்துக்குடி ; iii. பிப்ரவரி, 1919 ; iv. செ.மூ.ப. 38 ; v. 14×11 செ.மீ.; vi. . . . ; vii. ரோமன் கத்தோலிக்க மதத்தைச் சார்ந்த இலத்தின் பாட்டுப் புத்தகமாகும் இது. இதில் 34 பாடல்கள் தமிழ் எழுத்தில் அமைத்துத் தரப்பட்டுள்ளன. மொழி, இலத்தீன் ஆதலால், அந்த மொழி அறிவார்க்கே இதன் பொருள் விளங்குதல்கூடும். viii. 1116/1919/I. Q6 222

**கந்தசாமிப் பிள்ளை, வி., சென்னை**

343. i. பஞ்சரத்தினத் தோத்திரப்பாமாலை : முதற் பதிப்பு ; ii. வி. கந்தசாமிப் பிள்ளை, சென்னை ; அமெரிக்கன் டைமண்ட் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. செப்டம்பர், 1919 ; iv. செ.மூ.ப. 23 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. அர்ச். மேமாத வணக்க மாதாவின் ஆராதனைக்காகக் கூறிய பஞ்சரத்தினம் தோத்திரப் பாமாலை இந்நூலில் அடங்கியுள்ளது. அர்ச். அமலோற்பவ லூர்துமாதா, அர்ச். மகிமை மாதா, அர்ச். ஜெபமாலை மாதா, அர்ச். பெரியநாயகி மாதா, அர்ச். சூசையப்பர், அர்ச் அந்தோணியார் ஆகியோரைக் குறித்தும் பஞ்சரத்தினங்கள் இதில் தரப்பட்டுள்ளன. viii. 211/1919/IV

Q6 : 222

344. i. கிறிஸ்துமஸ்கீதம் : முதற் பதிப்பு ; ii. டி. ஆர். கிறிஸ்டியன், கூனூர் ; நியூ ஆல்பியன் பிரஸ், கூனூர் ; iii. 1917 ; iv. செ.மூ.எ. 12 ; v. 17×11 செ.மீ.; vi. இலவசம் ; vii. கிறித்துவ சமயத்தவர், கிறிஸ்துமஸ் அன்று பாடும் பாடல்கள், இவை 1917 ஆம் ஆண்டுக் கிறிஸ்துமஸ் தினத்தில் வெளியிடப்பெற்றது. viii. 269/1918/I.

Q6 : 222

சட்டாம்பிள்ளை ஐயா, ரபி, அ.ந.

345. i. தெகில்லீம் என்ற சங்கீதங்கள் : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. அ.ந.ரபி, சட்டாம்பிள்ளை ஐயர், பிரகாசபுரம், நாசரேத், திருநெல்வேலி ஜில்லா ; டார்லிங் பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. ஆகஸ்ட், 1917 ; iv. செ.மூ.ப. 342 ; v. 18×12 செ.மீ.; vi. 2–0–0 ; vii. கிறித்துவ உபதேசங்கள், சரித்திரக் குறிப்புக்கள், பிரார்த்தனைகள் ஆகியவற்றை உள்ளடக்கிய பாடல்கள் இதில் உள்ளன. தெகில்லீம் என்னும் ஆகமத்தின் தமிழ்ப்பா நூல் இது. இப் பாடல்கள், உத்தம தெய்வபக்தி நீதியைப் படிப்பிக்கிற உபதேசங்கள், பூர்வ திருச்சபைப் பரீட்சையான சரித்திரக் குறிப்புகள், யுத்த—பஞ்ச—நோய் அவதி சந்தர்ப்பங்களில் செய்யவேண்டிய பிரார்த்தனைத் தோத்திரங்கள், மேசியாவின் முன், பின் வருகை சம்பந்தமான தீர்க்க தரிசனம் ஆகியவை பற்றி அமைந்துள. 150 சங்கீதப் பாடல்கள் இதில் உள. இவற்றுள், கலிப்பா, விருத்தம், கழிநெடில், கலித்துறை, கும்மி, அகவல், உலாவாக அமைந்த பாடல்களும் சில உள. viii. 1051/1917/III.

Q6 : 222

சந்தியாகு சுவாமி, சேசு சபை

346. i. தேவ ஸ்தோத்திரக் கீர்த்தனைகள் : பத்தாம் பதிப்பு ; ii, சங்கை ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செய்ண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஜூலை, 1919, iv, செ.மூ.ப. 122 ; v. 22×15 செ.மீ.; vi. 0–8–0 ; vii. இதில் கிறித்துவ சமயத்தார்களுக்கு ஏற்ற தோத்திரப் பாடல்கள் அடங்கியுள்ளன. தேவாலயங்களில் பாடித் துதிக்கத்தக்க பாடல்களின் கோவை தமிழில் பக்தி உருக்கத்திற்கு ஏதுவான நடையில் அமைக்கப் பட்டுள்ளன. நாகப்பட்டினத்தில் உள்ள சூசையப்பர் பள்ளி மாணுக்கர், கோயிலில் கூடிப் பாடும்படியாக முதன் முதல், பல இசைப் பாடல்கள் இயற்றப்பெற்றன. பின், பல காலத்தும், ஆசிரியர் பாடியவையும் புதிய பதிப்புக்களில் சேர்க்கப்பட்டன. இந்தப் பத்தாம் பதிப்பு, ஆசிரியர் சேசுசபையிலே சேர்ந்த ஐம்பதாவது ஆண்டு நினைவாக வெளியிடப்பெற்றது. viii. 447/1919/III.

Q6 : 222

**செல்லையாப்பிள்ளை, டபிள்யூ. ஏ.**

**347.** i. யேசு நாமப்பதிகம்: முதற் பதிப்பு; ii. டபிள்யூ.ஏ. செல்லையாப்பிள்ளை, பாளையங்கோட்டை; பாளையங்கோட்டை பிரிண்டிங்பிரஸ், பாளையங்கோட்டை; iii. பிப்ரவரி, 1919; iv. செ.மூ.எ. 1+17+2; v. 18×11 செ.மீ.; vi. இலவசம்; vii. இயேசுநாதரைப் புகழ்ந்து பாடப்பெற்ற பதினெட்டுப் பக்திப் பாடல்களைக் கொண்டது, இப்புத்தகம். viii. 738/1919/I.

Q6:222

**348.** i. **சேசுவின் திரு இருதயப் பொக்கிஷம்**: முதற் பதிப்பு; ii. ஜோசப் ஐயர்; செய்ண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. 1916; iv. உ.ப. 50; v. 13×10 செ.மீ.; vi. 0–1–0; vii. ரோமன் கத்தோலிக்க மதத்தாரின் பிரார்த்தனைகள் அடங்கிய தொகுப்பு; சேசுவின் திரு இருதயத்திற்குத் தம்மை ஒப்புக்கொடுத்தலைப் பற்றிய தியானமுறைகள், மன்ருட்டு, பிரார்த்தனை முதலியனவும் அமைந்துள்ளன. viii. 93/1916/II.

Q6:222

**349.** i. **ஞானக் கீர்த்தனைகள்**: முதற் பதிப்பு; ii. கே.டி. முத்தையா, பாளையங்கோட்டை; பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை; iii. பிப்ரவரி, 1918; iv. செ.மூ.ப. 11; v. 17×10 செ.மீ.; vi. இலவசம்; vii. இதில் கிறித்துவ சமயத் துதிப்பாடல்கள் அடங்கியுள்ளன. கீர்த்தனைக் கவிதைகளால் ஆகியது. சேசுநாதர், தேவதாய், அர்ச் சூசையப்பர், அர்ச். சவேரியார், அர்ச். இஞ்ஞாசியார் என்பவர்கள்பேரில் பாடப்பட்ட பாடல்கள் உள. viii. 721/1918/I.

Q6:222

**350.** i. **ஞான சங்கீதங்களின் புஸ்தகம்**: திருத்திய மூன்ரும் பதிப்பு; ii. சங்கை, ஈஹெறன்மேன் ஐயர், தரங்கம்பாடி; சர்ச் ஆப் ஸ்வீடன் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி; iii. மே, 1920; iv. உ.ப. 153; v. 19×13 செ.மீ.; vi. 0–4–0; vii. இந்நூல் கிறித்துவ சமயக் கோட்பாடுகளின் தொகுப்பு. விவிலிய நூலில் உள்ள இறைவனைக் குறித்துப் பாடிய தோத்திரமும், செபமும் கொண்ட பகுதி இதில் தரப்பட்டிருக்கிறது. viii. 652/1920/II.

Q6:232

**351.** i. **ஞானப் பாட்டுகள்**: முதற் பதிப்பு; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி, சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1917; iv. செ.மூ.எ. 322; v. 25×16 செ.மீ.; vi. 5–0–0; vii. கிறித்துவ சமயப்பாட்டுகள், இசையுடன் இதில் தரப்பட்டுள்ளன. தேவ ஆராதனை, திரியேகர், பிதா, குமாரன், பரிசுத்த ஆவி, தேவ வசனம், கிறித்துவ ஜீவியம்;

திருச்சபை முதலிய பல பெருந் தலைப்புக்களில் பாடல்கள் உள. கீர்த்தனைப் பாடல்களின் அகராதியும், அவற்றிற்குரிய இசைக் குறிப்பும் நூலிறுதியில் உள. viii. 642/1917/III.

Q6:222

ஞானப்பிரகாச சுவாமிகள்.

352. i. மனவல்லயக்காதலும், மனஸ்தாபப் புலம்பலும்: முதற் பதிப்பு; ii. நா.சி. இராயக்கண்ணு முதலியார், சென்னை; முரஹரி அச்சியந்திரசாலை; iii. செப்டம்பர், 1916; iv. செ.மூ.ப. 16; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0; vii. ரோமன் கத்தோலிக்கக் கிறித்தவர்களின் உபயோகத்திற்காக எழுதப் பட்டது இப்புத்தகம். இதில், இருதய ஈட்டி என்னும் மன வல்லயக் காதலும், மரண நேரத்தில் மனத்தோடு சம்பாஷிக் கும் மனஸ்தாபப் புலம்பலும் செய்யுள் வடிவில் அடங்கியுள்ளன. வேளாங்கண்ணி ஆரோக்கிய மாதாவின்மேற் பாடப்பெற்ற பிரார்த்தனைப் பாடல்களும் இதில் உள. viii. 1126/1916/III.

Q6:222

353. i. தாவீது ராஜாவின் ஏழு தவச் சங்கீதங்கள்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. சங்கை ஜோசப் ஐயர், திருச்சிராப் பள்ளி; செய்ண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. ஜனவரி, 1918; iv. உ.ப. 25; v. 13×9 செ.மீ.; v. 0–0–9; vii. தாவீது மன்னனின் ஏழு தவச் சங்கீதங்கள் இதில் இடம்பெற்றுள்ளன. கிறித்துவ சமய நூலான இது தமிழாக்கம் செய்யப்பெற்றது. இவை கர்த்தரை நோக்கிக் கூறப்பட்ட பிரார்த்தனைகளாகும்; viii. 651/1918/I.

Q6:222

திமோத்தே, ஜான், ஒத்தகமந்து வெஸ்லியன் மிஷன்.

354. i. உலக ரக்ஷகரேசு உயிர்த்தெழுந்த உற்சவகீதம்: முதற் பதிப்பு; ii. சி.ப. ஜாகப், உதகமண்டலம்; அர்ச். அந்தோணி யார் அச்சுக்கூடம், உதகமண்டலம்; iii. மார்ச், 1918; iv. செ.மூ. 1 தாள்; v. 28×20 செ.மீ.; vi. இலவசம்; vii. இது, இயேசுநாதர் சிலுவையிலறையப்பட்ட மூன்றும் நாள் உயிர்த்தெழுந்ததைப் பற்றிய பக்திப் பாடலாகும். 'முக்திநெறி அறியாத' என்னும் சந்தத்தில், இப்பாடல்கள் அமைந்துள; viii. 295/1918/IV.

Q6:222

துரைசாமி நாவலர், சா.செ., கோலார்.

355. i. அற்புதவலங்காரத் தசரத்நச் சிந்தாமணி: முதற் பதிப்பு; ii. சா. செ. துரைசாமிப் பிள்ளை, கோலார்; மெர்க்குரி பிரஸ், சென்னை; iii. செப்டெம்பர், 1917; iv செ.மூ.ப. 22; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii இதில், வேளாளர் காணி

என்னும் வேளாங்கண்ணியில் விளங்கும் அர்ச். ஆரோக்கிய மாதாபேரில் பாடப்பெற்ற வாழ்த்துப் பாடல்களைக் காணலாம். வண்ணச் சிந்துகள் அடங்கியுள்ளன. சென்னை, 'மகாவிகட தூதன்' பத்திராதிபர், பா.அ.அ. இராசேந்திரம் பிள்ளை என்பார் இதற்குச் சாற்றுக்கவி பாடியுள்ளார். viii. 2/1917/IV.

Q6:222

356. i. **தேவாராதனைக் கீர்த்தனைகள்:** திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. எவாஞ்சலிக்கல் லூத்தரன் மிஷன் சர்ச் கௌன் சில்; சர்ச் ஆப் ஸ்வீடன் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி; iii. 1916; iv. செ.மூ.எ. 133; v. 18×13 செ.மீ.; vi. 0-4-0; vii. தமிழ்நாட்டு சுவிசேஷ லூத்தரன் திருச்சபையார், தேவா ராதனையில் பாடும்படியான ஒரு தமிழ்க் கீர்த்தனை. 133 கீர்த்த னைப் பாடல்கள் உள. கீர்த்தனங்களுக்கு இராக தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 921/1916/II.

Q6:222

357. i. **தேவாராதனை முறைமை:** திருத்திய ஆறும் பதிப்பு; ii. சர்ச் ஆப் ஸ்வீடன் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி; கனரீஸ் மிஷன் பிரஸ், மங்களூர்; iii. ஆகஸ்ட், 1919; iv. உ.ப. 310; v. 18×12 செ.மீ. ; vi. 2–0–0 ; vii. இதில், கிறித்துவ சமய இறைவணக்க முறை பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஞாயிற்றுக் கிழமைகளிலும், பண்டிகை நாட்களிலும் நடைபெறும் சிறப் பான தேவாராதனை முறைகளும் விவரிக்கப்பட்டுள்ளன. கிறித்துவ மதத்தின் மேன்மை பற்றியும் இதில் கூறப்பட்டுள் ளது. அனுபந்தப் பகுதியில் சுவிசேஷ வாக்கியங்கள், செபங்கள் முதலியன குறிக்கப்பட்டுள்ளன. viii. 1120/1919/III.

Q6:222

**தோமாசுப் புலவர், ச.கி., சென்னை.**

358. i. **திரித்துவஞான தியான உத்தான வினியபுஞ்சம்:** முதற் பதிப்பு ; ii. வீ. கந்தசாமி பிள்ளை, திரிசிரபுரம் ; அமெரிக்கன் டயமண்ட் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. செப்டம்பர், 1919 ; iv. செ.மூ.ப. 52 ; v. 21×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. பிதா, குமாரன், பரிசுத்த ஆவி இவர்களின் மகிமை பற்றியும், உயிர்த்தெழுதலைப் பற்றியும், பாடல்கள் மூலமாக விளக்கப்பட்டுள்ளன. இது ஒரு கிறித்துவமதப் புத்தகமாகும். நாற்பதந்தாதி, தசாங்கம், மரிமணய வல்லப அமிர்தம், சிலுவைத் தியானப் பாறை, திருக்கபால மலை விண்ணப்பம், என்னிறகனிவு கீர்த்தனை, திருஉத்தானப்பா மஞ்சரி, பஞ்சரத் தினப்பாமாலை, பதிகம், நவமணிமாலை முதலிய தோத்திரப்பா வகைகள் இதில் இடம்பெற்றுள்ளன. viii. 210/1919/IV.

Q6:222

**பர்னுந்து, எக்ஸ்.சி.**

359. i. திவ்விய நற்கருணையின் பேரில் பதம்: முதற் பதிப்பு; ii. எக்ஸ். சி. பர்ணண்ட்ஸ், தூத்துக்குடி; அருணோதயம் பிரஸ், தூத்துக்குடி; iii. டிசம்பர், 1916; iv. செ.மூ.எ. 13; v. 21×17 செ.மீ.; vi. இலவசம்; vii. எசுவைக் குறித்துப் புகழ்ந்து எழுதப்பெற்ற சிறு வெளியீடு. 13 பாடல்கள் உண்டு. சேசு என்னும் மருந்து, எல்லாவகையான இடர்களையும் நீக்கி நலம் செய்வது என்பது குறித்து அமைந்தது; viii. 115/1917/I.

Q6:222

**பெஞ்சுமீன், ஜே. ஆர்.**

360. i. தோத்திரப் பாமாலை: முதற் பதிப்பு; இஞ்ஞாசிப் பர்னு நந்தர், வைகைநகர்; செயிண்ட் ஜோசப் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. மார்ச், 1919; iv. செ.மூ.ப. 11; v. 17×11 செ.மீ.; vi. இலவசம்; vii. எட்ட மாநகரத்தில் வழிபட்டு வருகின்ற அர்ச். சாந்தானர் பேரில் பாடப்பெற்ற தோத்திரப் பாடல்களைக் கொண்டது. இந்நூல் வைகைமாநகர் பாலகவியெனப் பெயர் வாய்ந்த எம். இஞ்ஞாசிப் பர்னுநந்தரவர்களால் தரப்பட்ட சாற்றுக் கவியுடன் கூடியது; viii. I173/1919/I.

Q6:222

**பொன்னுசாமி பிள்ளை, டி. ஏ., தஞ்சாவூர்**

361. i. சவிஸ்தார சன்மார்க்க மாலை: இரண்டாம் பதிப்பு; ii. டி.எம். துரைசாமிப் பிள்ளை, தஞ்சாவூர், தாரா அச்சுக்கூடம், தஞ்சாவூர்; iii. ஜூலை, 1918; iv. உ. ப. 14; v. 21×14 செ. மீ.; vi. 0–1–0; vii. உலகெங்கும் புகழ்பெற்று இலங்கும் வேளாங்கண்ணி, அர்ச். ஆரோக்கிய அம்மன் திருக்கோயில் பெருவிழாவில் நடைபெறும் "யதார்த்த வர்த்தமானங்களென்னும் சவிஸ்தா சன்மார்க்க மாலை" யாகும் இப்புத்தகம்; viii. 183/1918/IV.

Q6 : 222

**வேதக்கண்ணு, ஜி., திண்டுக்கல்.**

362. i. அருட்பாமாலை: முதற் பதிப்பு; ii. ஜி. வேதக்கண்ணு, திண்டுக்கல்; லாலி எலக்டிரிக் பிரிண்டிங் பிரஸ், தஞ்சாவூர்; iii. ஜூன், 1915; iv. செ.மூ.எ. 58; v. 22×14 செ. மீ.; vi. 0–8–0; vii. கிறித்துமதத்தில் உள்ள பக்தி, அன்பு, ஆகியவைகளைப்பற்றியும், இயேசு பிறந்து வளர்ந்தது, அவருடைய தீர்க்க தரிசனங்கள் பற்றியும், மக்களிடையேயுள்ள திருமணம், நோன்பு, மற்றும் எல்லாவிதமான பழக்க வழக்கங்களைப் பற்றியும் விளக்கும் பாடல்களைக் கொண்டது இந்நூலாகும். அருஞ்சொல்லகராதி நூலிறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது; viii. 1197/1916/III.

Q6: 222

**வேதமுத்து ஐயர், எஸ்., பெல்லாரி.**

363. i. கிறித்துவத் தோத்திரப் பாடல்கள் : முதற் பதிப்பு ; ii. எஸ். வேதமுத்து, பெல்லாரி ; ஆரியன் பிரஸ், பெல்லாரி ; iii. ஏப்ரல், 1919 ; iv. செ.மூ.ப. 34 ; v. 20×15 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. இதில் புனித வாரத்தின் பேரிலும், ஈஸ்டரின் பேரிலும், கிறித்துவர்கள் பாடத்தக்க சமயக் கீதங்கள் அடங்கியுள்ளன. பல்வகை இசையமைதி கொண்ட தோத்திரங்கள் இதில் உள்ளன. கீர்த்தனைக் கவிதைகளும் ஒரு சில உள. viii. 185/1919/II.

Q6 : 222

## 225.4 புதிய ஏற்பாடு

364. i. புதிய ஏற்பாடு : முதற் பதிப்பு ; ii. சங்கை ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செய்ன்ட் ஜோசப்ஸ் இன்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1920 ; iv. உ. ப. 664 ; v. 14×11. செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இது ஒரு கிறித்துவ சமய நூல். அர்ச். மத்தேயு, அர்ச். மார்க், அர்ச். லூக்காஸ், அர்ச். அருளப்பர் ஆகியோரின் நான்கு சுவிசேஷங்களும், அப்போஸ்தலரின் நடவடிக்கைகளும் இதில் அடங்கியுள்ளன. viii. 1023/1920/III.

Q6 : 23

**ஸ்மித், ஏ.**

365. i. புதிய ஏற்பாடும், அதன் ஆசிரியர்களும் ; முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி, சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1917 ; iv. உ.ப. 114 ; v. 19×13 செ. மீ.; vi. 0–5–0 ; vii. புதிய ஏற்பாடு நூலுக்கு ஒரு முன்னுரை போன்று இந்நூல் எழுதப்பெற்றது. புதிய ஏற்பாட்டில் காணும் செய்திகளும், அவற்றை ஆக்கியோரின் சிறப்புக்களும், பிறவும் இந்நூலில் விவரிக்கப்பட்டிருக்கின்றன; viii. 359/1917/III.

Q6 : 23

## 225.95 [1] புதிய ஏற்பாட்டுக் கதைகள்

**எல்வின் ஐயர், எம்.**

366. i. புதிய ஏற்பாட்டின் திருச்சரித்திரங்கள் : மூன்றும் பதிப்பு ; ii. சர்ச் ஆப் ஸ்வீடன் மிஷன் சொசைட்டி, தரங்கம்பாடி ; ஸ்வீடன் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி ; iii. பிப்ரவரி, 1920 ; iv. உ.ப. 168 ; v. 21×13 செ.மீ.; vi. 0–8–0 ; vii. புதிய ஏற்பாட்டில் அடங்கிய கதைகள் இதில் தரப்பட்டுள்

ளன ; பட விளக்கங்களுடன் கூடியது. இயேசுவின் இளம் பருவம், இயேசுவின் உபதேசங்கள், அவர் செய்த அடையாளங் கள், இயேசு பாடுபட்டு இறத்தல், இயேசு உயிரோடெழுந்து விண்ணுலகம் செல்லல், ஆண்டவராகிய இயேசுவின் திருச்சபை என்னும் பொருள்களில் இக்கதைகள் அமைந்துள; viii. 730/1920/I.

Q6 : 23

## 230 கொள்கை விளக்கும் வேத சாத்திரம்

**அசரியா, வி. எஸ்.**

367. i. கொரிந்தியர் நிருபப் பாடங்கள்: முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி, சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1917 ; iv. உ. ப. 152 ; v. 18×13 செ.மீ ; vi. 0–4–0 ; vii. இந்நூலை 'திருச்சபை ஒழுக்க நூல்' எனவும் கூறலாம். அப்போஸ்தலர் காலத்துச் சபைகளின் நிலையும், அச்சபையை அப்போஸ்தலர் நடத்திவந்த விதமும், அச்சபைகளின் ஒழுக்கத்துக்கு அவர்கள் விதித்த பிரமாணங்களும் இதில் விளக்கப்பட்டுள்ளன. இவை 52 பாடங்களாக அமைத்துத் தரப்பட்டிருக்கின்றன; viii. 903/1917/IV

Q6:3

368. i. அதிமகத்தான வேலை, அதாவது ஆத்துமா ஆதாய நெறி : முதற் பதிப்பு ; ii. சி. எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1919 ; iv. உ. ப. 16 ; v. 19×12 செ.மீ.; vi. 0–1–0 ; vii. இது ஒரு கிறித்துவ மதப் புத்தகமாகும். இப்பூவுலகில் அதிமகத்தான வேலை என்ன என்பது பற்றியும், ஆத்தும ஆதாய நெறியினைப்பற்றியும் கூறப்பட்டுள்ளது. 'புது ஜீவியம் தொடங்கின வகை' என்பது தொடங்கிப் பாட அனுபந்தம் ஈறாக ஒன்பது பாடங்களில் விளக்கம் தரப்பட்டிருக்கிறது; viii. 979 /1919/I.

Q6:3

**அப்பாசாமி, ஏ. எஸ்.**

369. i. ஆத்மஞான போதனை : முதற் பதிப்பு ; ii. ஏ. எஸ். அப்பாசாமி, பாளையங்கோட்டை ; பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. மார்ச், 1919 ; iv. உ. ப. 24 ; v. 19×12 செ.மீ. ; vi.......... ; vii. இது கிறித்துவ சமயக் கொள்கைகளைப் பற்றிக் கூறும் சிறு வெளியீடு ; ஆத்மாவைப் பற்றிய பல கொள்கைளை, விவிலிய நூல் ஆதாரங்களுடன் வினு-விடை முறையில் எளிய உரை நடையில் விளக்குவது; viii. 1/1919/II.

Q6:3

370. i. அப்போஸ்தோலிக்கு நிருபம் : முதற் பதிப்பு ; ii. எம்.பி.எ தம்பி, சென்னை ; குட்பாஸ்டர் பிரஸ், சென்னை ; iii. மே, 1920, iv. உ. ப. 24 ; v. 18×13 செ. மீ.; vi. இலவசம்; vii. பரிசுத்த பிதாவாகிய பதினைந்தாம் ஆசீர்வாதப்பர் என்னும் பாப்பரசர் உலகமுற்றிலும் சத்திய வேதத்தைப் பரப்புவதற்காகச் சகல பிதாப் பிதாக்கள், பிரதம அத்யட்சகர்கள், அதிமேற்றி ராணியார், மேற்றி ராணிமார் முதலியவர்களுக்கெழுதிய அப்போஸ்தாலிக்கு நிருபமே இது; viii. 609/1920/II.

Q6:3

அருளானந்தர், எஸ். ஜே.

371. i. லீலி மலர் அல்லது கற்பென்னும் பரிசுத்தப் புண்ணியம் ; ii. ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஜூலை, 1918 ; iv. உ. ப. 246 ; v. 16×11 செ. மீ.; vi. 0–8–0 ; vii. இஃது ஓர் உரோமன் கத்தோலிக்க மத வெளியீட்டுப் புத்தகமாகும். இதில், பெண்களுடைய கற்பின் மகிமையைப் பற்றியும், கன்னிமேரியுனுடைய கற்பின் சிறப்பினைப் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன. கற்பைச் சரிவர அநுசரிப்பதற்கு அவசியமானவையெல்லாம் அநேக உதாரணங்களோடும், சரித்திரங்களோடும் விளக்கிக் காட்டப்பட்டிருக்கின்றன. நூலின் முகப்பில், கன்னிமரியம்மையின் திருவுருவப் படம் அமைந் துள்ளது; viii. 317/1918/III.

Q6:3

372. i அலங்கார ஜீவியம் : முதற் பதிப்பு ; ii. மிஸ் கென்னி, கூனூர் ; நியூ ஆல்பியன் பிரஸ், கூனூர் ; iii. ஏப்ரல், 1920 ; iv. உ. ப. 5 ; v. 17×11 செ.மீ.; vi........; vii. இது ஒரு ஜப்பானிய இளைஞன் கிறித்துவ சமயத்தைச் சார்ந்த கதை யினை விளக்கும் கிறித்துவ சமயநூல் ; vii. 429/1920/II.

Q6 : 3

ஆபிரகாம் பண்டிதர், மு., தஞ்சாவூர்

373. i. நன்மறைகாட்டும் நன்னெறி : முதற்பாகம் : முதற் பதிப்பு ; ii. மு. ஆபிரகாம் பண்டிதர், தஞ்சாவூர் ; லாலி எலக்டிரிக் அச்சுக்கூடம், தஞ்சாவூர் ; iii. மார்ச், 1918 ; iv. உ.ப. 184 ; v. 25×17 செ.மீ.; vi. 1-0-0 ; vii. கிறித்துவ சமயக் கொள்கைகளை ஒட்டி எழுதப்பட்ட பல அறிவுரைகளும், கருத்துரை களும் இதில் அடங்கியுள்ளன. ஆசிரியரின் புகைப்படம், நூன் முதலில் உண்டு. 55 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளது. 1270 தனிப்பத்திகளும் உள. கிறிஸ்து பரமான்மாவைச் சோதித்த சாத்தானின் மூன்று கேள்விகளையும், அவைகளின் மறு உத்தரவையும் முதலாக எடுத்துக்கொண்டு அம்மூன்று பொருளை மூன்று பாகமாகப் பிரித்தும், அவற்றை அறிவதற்குப் பரமான்மாவின் சில வசனங்களையும், சில பொதுக்

குறிப்புக்களையும் முதல் பாகமாகச் சேர்த்தும், ஆசிரியர் இயற்றியுள்ளார் என்பது முகவுரையில் தெரியவருகிறது. viii; 1189/1918/I.

Q6:3

•

374. i. இவ்வுலக ராஜ்யங்கள் : தேவராஜ்யம் : இரண்டாம் பங்கு; ii. வாட்ச் டவர் பைபிள் அண்டு டிராக்ட் சொசைட்டி, சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1919 ; iv. உ.ப. 55 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–2–6 ; vii. இது, கிறித்துவ சமய நூல். தேவ ஏற்பாட்டைப் பற்றிய பிரதி எண் நான்கு. சத்தியவேத பாடங்கள் முதல் நூலிலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்டது. இந்நூலின் முதற் பங்கில் 'இவ்வுலக ராஜ்யங்கள்' குறித்தும். இரண்டாம் பங்கில் 'தேவராஜ்யம்' குறித்தும் விவரிக்கப்பட்டுள்ளன; viii. 263/1919/II.

Q6:3

375. i. எக்காவாவின் நாள் : முதற் பதிப்பு ; ii. வாட்ச் டவர் பைபிள் அண்டு டிராக்ட் சொசைட்டி, சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. மே, 1919 ; iv. உ.ப. 35 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–2–6 ; vii. இது கிறித்துவ சமய நூல். தேவ ஏற்பாட்டைப் பற்றிய வெளியீட்டு வரிசையில் இது ஐந்தாவது. எகோவாவின் நாளில் உள்ள வரலாற்றைக் கூறுவது; viii. 620/1919/III.

Q6: 3

376. i. ஓர் சம்பாஷணை (பெருமாள், மருதை, ராமா) : முதற் பதிப்பு ; ii. செயிண்ட் ஜோசப்ஸ் இண்ட்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஜனவரி. 1918 ; iv. உ.ப, 19 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. இஃது, இந்து சமயத்தினரைக் கிறித்துவ சமயத்தைத் தழுவச் செய்யும் நோக்கத்துடன் எழுதப்பெற்ற நூல்; viii. 464/1918/I.

Q6 : 3

377. காலாவதிகளும் நியமகங்களும் : முதற் பதிப்பு ; ii. வாட்ச் டவர் பைபிள் & டிராக்ட் சொசைட்டி, கோட்டயம் ; தாம்சன் அண்ட் கம்பெனி, சென்னை ; iii. மார்ச், 1919 ; iv. உ.ப. 26 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. இது கிறித்துவ சமய நூல், தேவஏற்பாட்டைப் பற்றிய பிரதி எண், ஒன்று. இதன் முதற் பங்கில் காலாவதிகளும் நியமகங்களும் பற்றியும், இரண்டாம் பங்கில், மூன்று பாதைகளாகிய விசாலப்பாதை நெருக்கப் பாதை, ராஜபாதை பற்றியும் கூறப்பட்டுள்ளது. சத்திய வேத பாடங்கள் முதல் நூலிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டன; viii. 264/1919/II.

Q6:3

கிருஷ்ணமாசாரியார், பா., உரும்பட்டூர், விழுப்புரம்

378. i. கிறிஸ்து என்பவர் யார்? : முதற் பதிப்பு ; ii. பா கிருஷ்ண மாசாரியார், வேலூர் ; அப்பாஸ் அண்டு சன்ஸ், வி. என். அச்சுக்கூடம், வேலூர் ; iii. 1915 ; iv. உ.ப. 13 ; v. 21×14 ; செ.மீ ; vi....... ; vii. இந்நூல் அந்நாளில் கிறித்துவ மதப் பிரசாரத்தைக் குறித்து எழுதப்பெற்றது. கிறித்துவ சமயத்தைப் பற்றியும், அதைச் சார்ந்த சில கருத்துக்களைப் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது. கிறித்து உபதேசித்த கொள்கை இந்திய ஞானிகளிடமிருந்து திருடித் திரட்டினதோர் கதம்பம் என்கிறார் இவ்வாசிரியர். viii. 318/1917/IV.

Q6:3

379. i. கிறிஸ்தவ ஜீவியத்தின் மூலாதாரம் : முதற் பதிப்பு ; ii. எஸ். டி. ஏ. பப்ளிஷிங் ஹவுஸ், பெங்களூர் ; iii. 1919 ; iv. உ.ப. 21 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. கிறித்தவ வாழ்க்கையின் அடிப்படையாகிய மூலாதாரச் கொள்கையினை இந்நூல் நன்கு விளக்குகின்றது. இரட்சிப்பின் நம்பிக்கை, குணப்படுத்துதல், மறு ஜனனம், விசுவாசத்தினால் நீதிமானாக்கப்படுதல் முதலிய செய்திகளை விவரிக்கின்றது. viii. 748/1919/IV.

Q6:3

சந்தியாகு போதகர் (மொ.து.)

380. i. சுவிசேஷப்படை முயற்சிக்கேற்ற வேத பாடங்கள் : முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி பார் இந்தியா, சென்னை ; சி.எல்.எஸ். பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1918 ; iv. உ.ப. 34 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. கிறித்துவ மதத்தின் வேதமான பைபிளிலிருந்து எடுக்கப்பட்ட பதினேழு பிரிவுகளைக் கொண்ட வேத விளக்கம் ; மிகவும் எளிய நடையில் யாவரும் புரிந்துகொள்ளக்கூடிய தன்மையில் எழுதப்பட்டுள்ளது. சங்கை, ஏ. ஏ. ஸ்காட் போதகர் இயற்றிய பாடங்களிலிருந்து எடுத்தெழுதப்பட்டது; viii. 436/1918/II.

Q6:3

381. i. சாது சுந்தர்சிங் என்பவருக்கு எழுதப்பட்ட பகிரங்கக் கடிதம்; முதற் பதிப்பு ; ii. அமெரிக்கன் அட்வெண்ட் மிஷன் வேளச்சேரி, ஏ.ஏ.எம். பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1918 ; iv. உ.ப. 16 ; v. 21×14 சே.மீ. ; vi. இலவசம் ; vii. சாது சுந்தர்சிங் என்பவருக்கு எழுதப்பட்ட பகிரங்கக் கடிதம், இதில் அடங்கியுள்ளது. இது கிறித்துவ மதப் புத்தகமாகும்; viii. 840/1918/IV.

Q6:3

382. சுகுண போதினி அல்லது நாம் முன்னேறுவதெப்படி : முதற் பதிப்பு ; ii. சங்கை, ஏ. ஆர். ஜான் ஐயர், சென்னை ; நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1920 ; iv. உ.ப. 61 ; v. 22×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. இந் நூலில், முன்னைய தத்துவ சாத்திரத்திற்கும், இக்காலத்துத் தத்துவ சாத்திரத்திற்கும் உள்ள வேறுபாடுகள் அடங்கியிருக் கின்றன. இஃது இந்தியக் கிறித்துவர் ஒருவரால் எழுதப் பெற்றது. சாதி வேறுபாட்டினை வன்மையாகக் கண்டித்துள்ளார் இதன் ஆசிரியர். viii. 530/1920/I.

Q6:3

383. i. சேசுவின் திருஇருதயப் பரிகாரச் சபையாரின் ஞானப் பொக்கிஷம் : நான்காம் திருத்திய பதிப்பு ; ii. எஸ். ஜே. ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செயிண்ட் ஜோசப்ஸ் இண் டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. மே, 1918 ; iv. உ.ப. 628 ; v. 13×10 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. உரோ மன் கிறித்துவ சமயத்தாரின் தினசரிப் பக்தி மார்க்கத்தினை இந்நூல் விளக்குகிறது. இயேசு கிறிஸ்துவின் திருஉருவப் படம் நூன்முகப்பை அலங்கரிக்கின்றது. நூலின் பொருள் அட்டவணை நூலிறுதியில் தரப்பட்டிருக்கிறது. viii. 653/1918/II.

Q6:3

**சேமே சாஸ்திரியார், சங். சி., தரங்கை.**

384. i. மெஞ்ஞான போதம் : முதற் பதிப்பு ; ii. சர்ச் ஆப் சுவீடன் மிஷன் பப்ளிஷங் ஹவுஸ், தரங்கம்பாடி ; சர்ச் ஆப் ஸ்வீடன் மிஷன் பிரஸ், தரங்கம்பாடி ; iii. 1916 ; iv. உ.ப. 632+36 ; v. 22×14 செ.மீ. ; vi. 2–8–0 ; vii. கிறித்துவ சமயம், சைவ சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்குவதாக இந்நூலாசிரியர் விளக்குகிறார். சைவ சாத்திரமாகிய சிவஞான போதம் போல பிரமாண இயல், காரண இயல், சாதன வியல், பயனியல் என நான்கு பாகுபாட்டில் இந்நூலினை அமைத்துள்ளார். viii. 732/1916/III.

Q6:3

385. i. ஞான முத்துமாலை : முதற் பதிப்பு ; ii. எஸ். ஜே. ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செயிண்ட் ஜோசப்'ஸ் இண்டஸ்ட் ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1916 ; iv. உ.ப. 281 ; v. 16×10 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. கிறித்துவ கொள்கையின்படி, ஞான மார்க்கத்தை அடையும் வழியினை இந்நூலின்கண் காணலாம். மோட்சத்துக்குப் போகும்படி வேத கற்பனைகளை அனுசரித்தல், இஷ்டப் பிரசாதத்தை இழந்து போனால் பச்சாத்தாபத்தாலும் ஜெபத்தினாலும் அதை மறுபடி பெற்றுக்கொள்ளல், பாவத்தைவிட்டு எழுந்து, மறுபடியும் அதில் விழாமலிருப்பதற்குரிய உபாயங்கள் முதலியவற்றை விவரிப்பது. ஞான முத்துமாலையில் 105, முத்துக்கள் போன்ற,

சிறந்த சமய ஒழுக்க உண்மைகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. தத்துவ போதக சுவாமியாருடன் உழைத்த இம்மானுவேல் மார்த்தீன்ஸ் (ஜெக நிவாசகர்) சுவாமியாருடைய வாழ்க்கை வரலாறும் முகவுரையாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 87/1916/III.

Q6:3

டேனியல்

386. i. சுயாதீனம்: இரண்டாம் பதிப்பு ; ii. பெந்திக்கோஸ்து மிஷன், ராயப்பேட்டை, சென்னை ; ஹோகார்த் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1919 ; iv. உ.ப. 2 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–0–1 ; vii. இது, சென்னை பெண்டிகாஸ்ட் சங்கத்தார் வெளியிட்ட கிறித்துவ சமயத் துண்டு வெளியீடு. viii. 1062/1919/III.

Q6:3

387. i. பரிபூரண ஜீவன் : இரண்டாம் பதிப்பு ; ii. ஏ. எம். குலசேகரம் பிள்ளை, பாளையங்கோட்டை ; டார்லிங் பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை ; iii. செப்டம்பர், 1918 ; iv. உ.ப. 176 ; v. 18×11 செ.மீ ; vi. ...... ; vii. ஜீவன் உண்டாவது எப்படியென்றும், அது பரிபூரணப்படுவது எப்படி என்றும் இப்புத்தகத்தில், வெகு அருமையாக, நமது தமிழ்நாட்டுக் கிறித்தவர்களுக்குப் பயன்படுமாறு சொல்லப்பட்டிருக்கிறது. ஜீவனில்லாதவர்களுக்கு ஜீவனுண்டாகவும், ஜீவனுள்ளவர்களில், அந்த ஜீவன் பரிபூரணப்படவும், கர்த்தரும், ஜீவனைக் கொடுக்கிறவருமாகிய பரிசுத்த ஆவியாகிய தேவன் ஜீவாதிபதியின் மகிமையை அறிய இப்புத்தகம் பயன்படுவதாகும். ஜீவன், பரிபூரண ஜீவன், பரிபூரண ஜீவனின் பயன், பரிபூரண ஜீவனின் நிலவரம் இவற்றைக் குறித்து முறையே நான்கு பகுதிகளில் ஆசிரியர் விவரித்துள்ளார். viii. 229/1918/IV.

Q6:3

பவுல்.

388. i. போதக நிருபங்கள் : மூலமும், வியாக்கியானமும் : முதற் பதிப்பு ; ii. யூனியன் தியலாஜிகல் செமினரி, பசுமலை ; ஏ. எம். லிஞக்ஸ் பிரஸ், பசுமலை ; iii. 1918 ; iv. உ.ப. 163 ; v. 22×14 செ.மீ.; vi. ...... ; vii. கிறித்துவ சமயத்தைப் பரப்பும் பணியில் ஈடுபட்டோர்க்குப் பயன்படும் வகையில் அமைந்தது இந்நூல். போதக நிருபங்களின் மூலமும் விளக்கமும் இதில் உள. viii. 384/1918/I.

Q6:3

பரபலி, எச். ஏ.

389. i. சற்சமய விளக்கம் : முதற் பதிப்பு ; ii. கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி, சென்னை ; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1917 ; iv. செ. மூ. உ. ப. 132

v. 19×13 செ.மீ.; vi. 0–6–0; vii. கிறித்துவ சமயக் கருத்துக்களை விளக்கும் பொருட்டு இந்து சமயத்தைச் சேர்ந்த சில எடுத்துக்காட்டுகளைப் பயன்படுத்தி விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது ஏழு அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டு, அனுபந்தத்துடன் கூடியதாய் உள்ளது. இதில் எடுத்தாளப்பெற்ற நூல்கள் அகராதிப் பட்டியல் ஒன்றும் தரப்பட்டிருக்கிறது. viii. 225/1918/I.

Q6:3

பிடெண்டிரிக், துரைசானி (மொ. து.)

390. i. இயேசு சந்தித்தவர்களில் சிலர்: முதற் பதிப்பு; ii. சி. எல். எஸ்., சென்னை; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை; iii. மே, 1920; iv. உ. ப. 117; v. 19×13 செ.மீ.; vi. 0–6–0; vii. "நாசரேத்தூர் தச்சராகிய இயேசு" என்ற ஆங்கிலப் புத்தகத்தில் உள்ள சில பகுதிகளின் மொழி பெயர்ப்பே இந்நூல். பட விளக்கங்களுடன் கூடியது. viii. 83/1920/IV.

Q6:3

புலிகோடன், பி. ஐ.

391. i. தேவராஜ்யத்தின் சுவிசேஷம்: முதற் பதிப்பு; ii. அமெரிக்கன் அட்வெண்ட் மிஷன், வேளச்சேரி; ஏ. ஏ. எம். பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1918; iv. உ. ப. 16; v. 16×10 செ.மீ.; vi. இலவசம்; vii. இது ஒரு கிறித்துவப் புராட்டஸ்டண்ட் மத வெளியீடு. விவிலிய நூல் மேற்கோள்காட்டி விளக்கப் பெற்றிருக்கிறது. viii. 839/1918/IV.

Q6:3

மரியாநந்தம், எஸ்.

392. i. மரியாயின் மங்களம்: முதற் பதிப்பு; ii. எஸ். மரியானந்தம், திருச்சிராப்பள்ளி; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. மார்ச், 1920; iv. உ.ப. 32; v. 18×13 செ.மீ.; vi. 0–1–6; vii. இது கத்தோலிக்க சமயத்தைச் சார்ந்த ஒரு நூல். அன்னை மரியாயின் சிறப்பினை எடுத்துக் கூறுவது. அர்ச். லூக்காஸ் என்பாரின் சுவிசேஷத்திலிருந்து எடுக்கப்பட்ட தேவ வசனங்களும் முதலில் உள்ளன. viii. 767/1920/I.

Q6:3

393. i. மனசாட்சி விளக்கம்: இரண்டாம் திருத்திய பதிப்பு. ii. சங்கை, ஈஹெறன்மேன் ஐயர், தரங்கம்பாடி; சி. எஸ். மிஷன் பிரஸ், தரங்கம்பாடி; iii. அக்டோபர், 1920; iv. உ. ப. 174; v. 18×12 செ.மீ.; vi. 0–9–0; vii. மனச்சாட்சி விளக்கம் என்பது கிறித்துவ வேதத்தின் பொருளை மனச்சாட்சிக்கு விளங்கவைத்தலாகும். ஆசிரியர் மிகவும் நல்ல முறையில் எளிய நடையில் வேத விளக்கம் செய்துள்ளார். viii. 71/1920/IV.

Q6:3

394. i. மூன்று பிரியதத்த மந்திரப்பத்தியினால் மோட்சவாசல் திறக்கப்படுகிறது : முதற் பதிப்பு ; ii. சங்கை, எஸ். ஜே. ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. அக்டோபர், 1918 ; iv. உ. ப. 8 ; v. 12×9 செ.மீ.; vi. இலவசம் ; vii. கிறித்துவ மதத்தைச் சார்ந்த புத்தகமாகும் இது. மூன்று பிரியதத்த மந்திர பக்தியினால், பக்தர்களுக்கு மோட்சவாசல் திறக்கப் படுகிறது என்பது இந்நூலில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. viii. 355/1918/IV.

Q6;3

**ரெட்வுட், ஏ. எம்.**

395. i. கிறிஸ்துவ சித்தாந்தங்கள் அல்லது போதனைகள் : முதற் பதிப்பு ; ii. ஏ. எம். ரெட்வுட், பெங்களூர் ; ஏ. ஏ. எம். பிரஸ், வேளச்சேரி, செயிண்ட் தாமஸ் மவுண்ட், சென்னை ; iii. மார்ச், 1920 ; iv. உ. ப. 48 ; v. 14×11 செ.மீ.; vi. .......... ; vii. இது, கிறித்துவ சமயக் கருத்துக்களை விளக்கும் நூல். விவிலிய நூல் மேற்கோள்கள் எடுத்துக்காட்டி விளக்கம் தருவது. viii, 3/1920/II

Q6:3

**லாஸரஸ் ஐயர், ஜே. (மொ. து.)**

396. i. எபிரேயருக்கு எழுதிய நிருபம் : முதற் பதிப்பு ; ii. சென்னைக் கிறித்துவக் கல்வி அபிவிருத்தி சங்கம், சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. மே, 1917 ; iv. உ.ப. 217 ; v. 19×13 செ.மீ.; vi.... vii. எபிரேயர் நிருபத் துக்கு உரையாகிய இதில், எம்பெருமானின் திவ்விய மகத்து வத்தையும், அவரது இரட்சணியத்தின் முக்கியத்துவத்தையும், வீண சடங்காசாரங்களின் அனர்த்தத்தையும் நிருபத்திலிருக்கிற வண்ணமாக விவரித்துக் கூறப்பட்டிருக்கிறது. சிற்சில படங் களும் இதில் உள்ளன. இந்த விளக்கம், பல ஆங்கிலேய விளக்கங்களின் உதவியைக்கொண்டு, தமிழ் நாட்டாருக்குப் பயன்படும் வகையில் எழுதப் பெற்றது. ‘கிறிஸ்து’ என வல்லினம் இட்டு எழுதாது, ‘கிரிஸ்து’ என்று இடையின ‘ர’ கரம் இட்டு எழுதுவதே முறை என்பதை ஆசிரியர் தமது முகவுரையில் விளக்கிக் காட்டியுள்ளார். viii. 629/1917/II.

Q6:3

**ரோசிஞ்ஞொலி சுவாமிகள்**

397. i. வாலர் தீபிகை : முதல் காண்டம் : முதற் பதிப்பு ; ii. ரோச்சு சுவாமிகள் ; செயிண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. உ. ப. 216 ; v. 18×13 செ. மீ.; vi. 0–12–0 ; vii. அந்தஸ்து தெரிதலின்மட்டில் தேவ சித்தத்தை அறிந்து அதற்கேற்ப நடக்கவேண்டிய பக்தி நெறிகளைப்பற்றி இதில் கூறப்பட்டுள்ளது. இது ஒரு கத்தோலிக்கக் கிறித்துவ மதப்

புத்தகமாகும். இந்நூல், வாலிபர்களுக்கொரு தீபம் போன்று வழிகாட்டியாய் இருக்குமென்ற கருத்தில், 'வாலர் தீபிகை' யென்று இதற்குப் பெயரிடப்பட்டது. ஞ்ருசிஞ்ஞொலி என்னும் சுவாமியாரால், பிரெஞ்சு பாஷையில் செய்யப்பட்ட நூலி னின்றும், தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட நூல். 'அந்தஸ்துத் தெரிதலின்மட்டில் தேவ சித்தத்தையறிதல்' என்றும் இதற்கு ஒரு பெயர் உண்டு. viii. 623/1918/III.

Q6:3

398. i. ஜீவியத்தின் நோக்கம் : நீ இரட்சிக்கப்பட்டிருக்கிறாயா ? ii. ஹோகார்த் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1919 ; iv. உ. ப. 4 ; v. 21×14 செ.மீ.; vi. இலவசம் ; vii. வாழ்க் கையின் நோக்கத்தினைப் பற்றியும், மனிதன் இரட்சிக்கப்பட்டபடி வாழ்க்கையை மேற்கொள்ளுகிறான் என்பதைப் பற்றியும் விளக்கும் நூலாகும் இது. இயேசு கிறித்துவை நம்பவேண்டும் என்று அறிவிக்கும் சமயப் பிரசாரச் சிறு வெளியீடாகும் இந்நூல். viii. 857/1919/IV.

Q6 : 3

ஜெகந்நாதர், ஜே., சங்கை

399. i. வேதம் என்னத்திற்கு ? : முதற் பதிப்பு ; ii. செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஆகஸ்ட், 1919 ; iv. உ. ப. 16 ; v. 18×12 செ. மீ.; vi. 0–1–0 ; vii. இது, கத்தோலிக்க சமயத்தைச் சார்ந்த ஒரு நூல். வேதம் என்பது, கடவுளிடம் நாம் செலுத்த வேண்டிய கடமையை உணர்த்தும் நூல் என்றும், வேத முறைப்படி வாழ்க்கை நடத்தவேண்டும் என்றும் அறிவுறுத்து கின்றது. வேதத்தின் உண்மைக் கருத்தைத் தெளிவுற விளக்குகின்றது. viii. 575/1919/III.

Q6:3

400. i. ஜோசேலி அல்லது வித்தியா வாஞ்சை விசுவாசநாதம் : முதற் பதிப்பு ; ii. இந்தியக் கத்தோலிக்க சத்தியபிரமாண சபை ; iii. ஜனவரி, 1920 ; iv. உ.ப. 24 ; v. 18×13 செ.மீ.; vi. 0–1–0 ; vii. கத்தோலிக்க சமயத்தை ஒட்டிய தமிழ் வெளியீடு இது. viii. 505/1920/I.

Q6 : 3

ஜேசுதாசன், ஜே.

401. i. சிலுவைப்பாதையும், பிரசங்கமும் : முதற் பதிப்பு ; ii. ஜே. ஜேசுதாசன், முதலூர் ; டார்லிங் பிரிண்டிங் பிரஸ், பாளை யங்கோட்டை, iii. ஏப்ரல், 1919 ; iv. உ.ப. 42 ; v. 17×10 செ.மீ. ; vi. . . . . . . . . .; vii. இது, கிறித்துவ சமயக் கொள்கை களை விளக்கும் சிறு நூல். இயேசு கிறித்து சிலுவையில் அறை யப்பட்டபோது மொழிந்தருளின ஏழு திருவசனங்களைக் குறித்து விளக்கம் தருகிறது இந்நூல். viii- 491/1919/II.

Q6:3

## 232.9 கிருஸ்துவின் வரலாறு

**புலிக்கோடன், பி. ஐ.**

402. i. கிறித்துவின் ஜீவிய சரித்திரம்: புதிய பதிப்பு; ii. பி. ஐ. புலிக்காடன்; ஏ. ஏ. எம். பிரஸ், வேளச்சேரி, சென்னை; iii. 1916; iv. உ.ப. 215; v. 18×12 செ.மீ.; v. 0—8—0 vii. இயேசு கிறித்துவின் வாழ்க்கையை விவரிக்கும் நூல். நான்கு சுவிசேஷங்களிலிருந்து ஒன்றுகச் சேர்க்கப்பட்டது. இடையிடையே சரித்திரப் போக்கிற்கு ஏற்ற தலைப்புக்கள் தரப்பட்டுள்ளன. நிகழ்ச்சிகளுக்கு ஆதாரமான வேத வசனங்களைப் பற்றிய குறிப்பும், அடிக்குறிப்பாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. viii. 175/1916/II.

Q6: 33

**ஹரிஹரஐயர், ஆர்., அம்பாசமுத்திரம்**

403. i. இரக்ஷகர் சரித்திரமும், பவுல் சரித்திரமும்: முதற் பதிப்பு; ii. பு. க. ஸ்ரீநிவாசாரியார், வேலூர்; சுந்தரவிநாயகர் அச்சுக்கூடம். வேலூர்; iii. 1916; iv. உ.ப. 89; v. 19×13 செ.மீ.; vi. 0—8—0; vii. இந்நூலில், இயேசுகிறித்துவின் வரலாறும் பவுலின் வரலாறும் வரையப்பட்டுள்ளன. விவிலிய நூலிற் கண்டபடி இச்சரித்திரங்கள் எழுதப்பட்டுள்ளன. சிறுவர், சிறுமியர் வாசித்து மகிழத்தக்க எளியநடையில் இந்நூல் அமைந்துள்ளது. அழகிய நீதிகளும், உறுதி மொழிகளும், இச்சரிதங்களில் பொதிந்துள. திருக்குறள் முதலிய நீதி நூல்களிலிருந்து தக்க மேற்கோள்களை ஆசிரியர் அங்கங்கே எடுத்தாண்டுள்ளார். viii. 172/1916/III.

Q6:33

404. i. இரக்ஷகர் சரித்திரம்: இரண்டாம் பதிப்பு; ii. ஆர். ஹரிஹர ஐயர், அம்பாசமுத்திரம்; லக்ஷ்மி விலாச அச்சியந்திரசாலை, அம்பாசமுத்திரம்; iii. செப்டம்பர், 1919; iv. உ.ப. 54; v. 18×13 செ.மீ.; vi. 0—6—0; vii. இயேசு கிறித்துவின் வாழ்க்கை வரலாற்றினை மிகவும் நல்லமுறையில், ஆசிரியர், எளிதாக விளக்கியுள்ளார். "சுவிசேஷ நவநீதம்" என்றும் இதற்கு ஒரு பெயர் உண்டு. 300 பாடல்கள் கொண்ட 'புத்த புராணம்' என்னும் நூலொன்றை இவர் அச்சிட்டுவரும் விவரமும் தெரிகிறது. தவிரவும், இவ்வாசிரியர் இயற்றிய பிற நூல்களின் விவரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. அம்பை (அம்பாசமுத்திரம்) தலபுராணம், அரிகேசநல்லூர் பஜனமடாலயக் குமரக் கடவுள் பிள்ளைத் தமிழ் என்பன செய்யுளில் அமைந்தவை. உரைநடை நூல்களில், ஆத்திசூடி நீதிக்கதைகள், பொய்யாமொழிப் புலவர் சரித்திரம், நின்றைக்காளத்தி வள்ளல் சரித்திரம், தெய்வமிகமேல், அடைக்கலங்காத்தல், பவுல் சரித்திரம் முதலியன குறிப்பிடப்பட்டுள்ளன. viii. 123/1919/IV.

Q6:33

## 232. 931 மேரி

துரைசாமிப் பிள்ளை, சா. சே.

405. i. நவரத்தினச் சிந்தாமணி: மூன்றும் பதிப்பு ; ii. வி. ஏ. ஆர். நத்தான்யேல் நவநீத உபாத்தியாயர் ; மெர்க்குரி பிரஸ், சென்னை ; iii. செப்டெம்பர், 1918 ; vi. செ.மூ.எ. 80; v. 21×14 செ.மீ.; vi. ; 0—1—0 ; vii. வேளாங்கண்ணியில் எழுந்தருளியிராநின்ற பரிசுத்த ஆரோக்கிய தேவதாயாரின் அற்புத தரிசன சரித்திராலங்கார நவரத்தினச் சிந்தாமணி யாகும் இது. மேரி மாதாவைப் புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்கள் இதில் உள்ளன. 1901 ஆம் ஆண்டு ஆசிரியர் இயற்றிய கைப் பிரதியைக் கொண்டு பரிசோதித்து இந்நூற் அச்சிடப்பெற்றது. viii. 942/1918/III.

Q6:331

406. i. நல்ல ஆயன்சபை மடத்தின் சிரேஷ்ட தாயாராய் விளங்கிய திவ்விய இருதயமரியின் சரித்திரம்: (1863–1899) முதற் பதிப்பு : ii. நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1918 ; iv. உ.ப. 154 ; v. 15×11 செ.மீ. ; vi. 0—1—0 ; vii. நல்ல ஆயன் சபை மடத்தின் முதல் தாயாராய் விளங்கின, (1863–1899) திவ்விய இருதய மரியின் சரித்திரம் மிகவும் சுருக்கமாகவும், விளக்கமாகவும் எழுதப்பட்டுள்ளதை இப்புத்தகத்தில் காணலாம். திவ்விய இருதயமரியின் திருஉருவப்படத்துடன் கூடியது. ஜெர்மனி தேசத்தவராகிய இவ்வம்மையார், தாமே எழுதிய சுயசரித்திரத்திலிருந்து இவ்வரலாறு தொகுத்து எழுதப்பட் டுள்ளது. viii. 273/1918/III.

Q6:331

407. i. வேளாங்கண்ணி ஆரோக்கியமாதாவின் மீது தோத்திரங்கள்; ii. நா. சி. இராயக்கண்ணு முதலியார், உபாத்தியாயர், இராய புரம், சென்னை ; முரஹரி அச்சுக்கூடம், சென்னை; iii. 1917 ; v. செ.மூ.ப. 12 ; v. 22×14 செ.மீ. ; vi. 0—1—0 ; vii. வேளாங்கண்ணியில் திருக்கோயில் கொண்டிருக்கும் பரிசுத்த ஆரோக்கியமாதாவைக் குறித்த தோத்திரங்கள் அடங்கிய தொகுதி. ஆரோக்கியமாதாவின் அதிசயக் காட்சியும், அற்புத சரித்திர அலங்காரப் பாடலும் இதில் உள. 'தேவமாதாவின் பேரில் பாவ விளக்க பஞ்சரத்னம்' என்னும் சிறு பிரபந்தமும் இதன் இறுதியில் உளது. viii. 971/1917/III.

Q6:331

408. i. வேளாங்கண்ணி ஆரோக்கியமாதாவின் மீது தோத்திரங்கள் : ii. நா. சி. இராயக்கண்ணு முதலியார், உபாத்தியாயர் இராய புரம், சென்னை ;iii. முரஹரி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1917 ; iv. செ.மூ.ப. 12 ; v. 21×14 செ. மீ. ; vi. 0—1—0 ; vii.......... ; viii. 917/1917/III.

Q6:331

## 242 தியானம்

409. i அர்ச். லூர்துமாதாவின் நவநாட் செபத்தியானம்: முதற் பதிப்பு ; ii. சங்கை. எஸ்.ஜே. ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப் பள்ளி ; iii. மார்ச், 1919 ; iv. உ. ப. 43 ; v. 17×13 செ.மீ. ; vi......; vii. இது, கிறித்துவ சமய நூல். அர்ச் லூர்துமாதா வினைக் குறித்து எழுதப்பெற்ற ஒன்பது நாட்கள் தியான வசனங்கள் உள்ளன. லூர்துமாதாவின் படங்கள் இரண்டு இந்நூலில் உள்ளன. ஒவ்வொரு நாளுக்கும் உரிய தியானத்தி லும் யோசனை, செபம், பிரதிக்கினை என மூன்று பகுதிகள் உள்ளன. viii. 174/1919/II.

Q6:412

410. i. அர்ச். வியாகுலமாதாவின் ஜெபமாலை முதற் பதிப்பு ; ii. சங்கை. எஸ். ஜே. ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செயின்ட் ஜோசப் இண்டஸ்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1916 ; iv. உ.ப. 23 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—0 3 ; vii. இயேசு கிறித்துவின் தாய் கன்னிமேரியின் மீது அமைந்த தோத்திரம். பரிசுத்த கன்னிமரியாயி, தமது திருக்குமார னுடைய பாடுகள் நிமித்தமாக அனுபவித்த ஏழு வியாகூலங் களைத் தியானிப்பது. viii. 359/1916/I·

Q6:412

அருமைநாயகம், வி.

411. i. சிலுவைத்தியானம் ; ii. வி. அருமைநாயகம் ; சுப்ரமணிய விலாசம் பிரஸ், தூத்துக்குடி ; iii. 1916 ; iv. உ.ப. 16 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—1—0 ; vii. "லெந்து நாட்கள்" என்னும் தபசுநாட்களின் தியானத்திற்கு அனுகூலமாயிருக்கும்பொருட்டு எழுதப்பட்டுள்ளது. viii. 687/1916/I.

Q6:412

தாவீது ஐயர், ஜே. தே., தஞ்சாவூர் (மொ. து.)

412. i. ஜெபாலயம்: முதற் பதிப்பு ; ii. அழகிரிநாதசுவாமி சேலம் ; ரா. விவேகாநந்த அச்சியந்திரசாலை, வேப்பேரி, சென்னை ; iii. மே. 1919 ; iv. உ.ப. 117+77+171+55 ; v. 18×11 செ.மீ. ; vi. 0—12—0 ; vii. இது கிறித்துவ சமயப் பாடல்களைக் கொண்டுள்ளது. பல வேளைகளுக்குரிய தியானங்களும், ஜெபங்களும் உண்டு என்று இதில் குறிப் பிடப்பட்டுள்ளது. பற்பல காலங்களிலும் செய்வதற்கு ஏற்றதான தானங்கன் இதில் குறிக்கப்பட்டிருக்கின்றன. viii. 603/1919/II.

Q6:412

வேதமாணிக்கம், ச., சென்னை.

413. i. தபசுகால தியான பூஷணம்: முதற் பதிப்பு ; ii. ச. வேத மாணிக்கம், சென்னை ; அமெரிக்கன் டயமண்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. மே, 1919 ; iv. செ.மூ.ப. 64: v. 16×13

செ.மீ.; vi. 0–6–0 ; vii. இதில் கத்தோலிக்கக் கிருத்துவ சமயக் கொள்கைகள் பாடல்வடிவில் விளக்கப்பட்டுள்ளன. நசகேசரம்மானை, நசரேசர் திருப்பாட்டுச் சிலுவைத்தியானம், திருப்பாட்டு வரலாற்றுத்தியானம், திருப்பாட்டு மனோவல்லியத் தியானம், திருப்பாட்டுச் சிந்தா குலத்தியானம், திருபாட்டுத் திருவலங்கல், சேவடி தியானப்பத்து முதலியவை அடங்கி யுள்ளன. அம்மானைப்பாடலில் மேதினியில் சுதன் மனுவாய் விரைந்து வந்தாரம்மானை என்றாற்போல் அம்மானை என்னும் சொல் இடையிடையே வருகின்றது. பாடல்கள் எளிமையாயும் உருக்கமுடனும் அமைந்துள்ளன. viii. 216/1919/III.

Q6 : 412

**ஜான் ஐயர், ஏ. ஆர். (தொ. து.)**

414. i. நல்ல ஆயன் சோலை: திருத்திய நான்காம் பதிப்பு ; ii. சங்கை ஏ. ஆர், ஜான் ஐயர், சென்னை ; நல்ல ஆயன் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. உ.ப. 389 ; v. 13×9 செ. மீ. ; vi. 0–8–0 ; vii. இது கத்தோலிக்க சமயத்தைச் சார்ந்த நூல். தென்னிந்தியாவிலுள்ள கத்தோலிக் கத் தமிழ்க் கிறித்துவர்களைத் திட்டி நசுக்கக்கூடிய அவிசுவாச அஞ்ஞான ஆபாசங்களைக் கண்டித்து எழுதப்பெற்றது. சாதாரண மாய் நல்ல கிறித்துவனுக்கு இன்றியமையாத முக்கிய செபங் களைத் திரட்டி அமைக்கப்பெற்றது இந்நூல், viii. 398/1920/III.

Q6 : 412

## 252 பிரசங்கங்கள்

415. i. அர்ச். இஞ்ஞாசியார் திருநாள் முன்பாகக் கொண்டாடப் படுகிற ஒன்பது நாள் பிரசங்கங்கள் : முதற் பதிப்பு ; ii. செயின்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஜுலை, 1917 ; iv. உ. ப. 84 ; v. 13×9 செ.மீ.; vi. 0–1–6 ; vii. இந்நூல், உரோமன் கத்தோலிக்க மதப் பிரிவினரின் கொள்கைகளை விளக்கும் வகையில் அமைந்தது. இதில் உள்ள பிரசங்கங்கள் அர்ச். இஞ்ஞாசியாரின் அற்புத சாதனைகளை விவரித்து உரைக்கின்றன. அர்ச். இஞ்ஞாசியாரைக் குறித்த சில செபங்களும், பிரார்த்தனைகளும் இறுதிப்பகுதியில் உள. viii. 456/1917/III.

Q6 : 52

**ஞானாபரணம், எஸ். (மொ. து.)**

416. i. சுந்தர்சிங் என்பவரின் பிரசங்கங்கள் . முதற் பதிப்பு ; ii. இந்திய சுயதேச மிஷனரி சங்கத்தார், சென்னை ; எம்.எம்.எஸ். அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜுலை, 1919 ; iv. உ.ப. 136 ; v. 18×12 செ.மீ.; vi. 0–6–0 ; vii. சாது சுந்தர்சிங் என்னும் கிறித்தவப் பெரியாரின் சொற் பொழிவின் தொகுப்பே இந்நூல் 20 பிரசங்கங்கள் இதில் உள. இவை யாவும் விவிலிய நூலைப் பின்பற்றி அமைந்தன வாகும். விவிலிய நூல் பிரமாணங்கள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

இத்தமிழ் மொழிபெயர்ப்பை ஆக்கியவர் ஞானபரணம் என்பவராவார். நூலின் முகவுரை ஆங்கிலத்தில் அவர்தம் கையெழுத்துப் படியில் தரப்பட்டுள்ளது. v;ii. 810/1919/III.

Q6:52

## 265.1 ஞான ஸ்நானம்

அசரியா தோர்ணக்கால் அத்தியகூஷர்

417. i. பரிசுத்த ஞான ஸ்நானம்: முதற் பதிப்பு ; ii. எஸ். பி சி. கே. பிரஸ், சென்னை ; iii. 1919 ; iv. உ.ப. 110 ; v. 19×13 செ.மீ.; vi.......... ....; vii. இது ஒரு கிறித்துவ சமய நூல். பரிசுத்த ஞான ஸ்நானத்தின் யதார்த்தமான தன்மையை விவரிக்கிறது இந்நூல். இதில் உள்ள எட்டு அத்தியாயங்களில், முதல் ஐந்தும் திருச்சபைத் தீபகையில் வெளியாயின. ஏனையவை, இந் நூலில் முதன் முதலாக வெளிப்படுத்தப்பெற்றவை. viii. 716/1919/III.

Q6:423

418. i. ஞான முறைமைகளின் புஸ்தகம்: (இரண்டாம் பங்கு) திருத்திய ஐந்தாம் பதிப்பு ; ii. ஸ்வீடிஷ் மிஷன் சர்ச் சொசைட்டி, தரங்கம்பாடி ; போனிக்ஸ் பிரஸ், சென்னை ; iii ஜூலை, 1918 ; iv. உ.ப. 120 ; v. 18×12 செ.மீ.; vi. 0–4–0 ; vii. புராட்டஸ்டண்ட் கிறித்துவ மதத்தில் உள்ள அத்துணை வழி முறைகளைப் பற்றியும், மதக்கோட்பாடுகள் பற்றியும், மிகவும் விவரமாக இப்புத்தகத்தில் எழுதப்பட்டுள்ளன. திருச்செய்கை முறைமைகள் இதில் தெரிவிக்கப்பட்டுள்ளன. குருப்பட்டங் கொடுக்கும் முறை, ஞானஸ்நான முறை, திடப்படுத்தும் முறை, பால சங்கீர்த்தான முறை, விவாக முறை, ஒரு புதிய தெய்வாலயப் பிரதிஷ்டை முறை முதலிய பல சமய ஒழுக்கங்கள் விளக்கப்பட்டுள்ளன. viii. 333/1918/III.

Q6:423

419. i. ஞான ஸ்நானத்தினால் உண்டாகிற மறு ஜன்னம்: முதற் பதிப்பு ; ii. எஸ்.பி.எம். சேந்தமங்கலம் ; யூனியன் பிரஸ், நாமக்கல் ; iii. 1918 ; iv. உ.ப. 35 ; v. 13×11 செ.மீ.; vi. இலவசம் ; vii. இஃது ஒரு கிறித்துவ சமய நூல். ஞான ஸ்நானத்தின் தத்துவத்தை விளக்குவது. வேதவாக்கிய மேற்கோள்களுடன் விளக்கம் தரப்பட்டுள்ளது; viii. 185/1919/III.

Q6:423

## 267 கிறித்துவச் சபைகள்

420. i. திருச்சபையின் புதுச்சட்டம்: முதற் பதிப்பு ; ii. சங்கை எஸ். ஜே. ஜோசப் ஐயர், திருச்சிராப்பள்ளி ; செயிண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி;

iii. செப்டம்பர், 1920; iv. உ.ப. 24; v. 19×13 செ. மீ.; vi. 0–2–0; vii. இது ரோமன் கத்தோலிக்க சமயத்தை ஒட்டிய நூல். இச்சமயத்தார் அனுசரிக்க வேண்டிய சில சட்ட திட்டங்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன. viii. 1024/1920/III.

Q 6:6

421. i. வேம்பார் சீரழிவிற்குப் பேர்வளியார் முதற் பதிப்பு; ii. அருணோதயம் பிரஸ், தூத்துக்குடி; iii. ஜனவரி, 1917; iv. உ.ப. 3; v. 34×21 செ.மீ.; vi. இலவசம்; vii. தூத்துக்குடிக்கு அருகே உள்ள வேம்பால் என்னுமிடத்தில், ரோமன் கத்தோலிக்க சமயத்தினரிடையே நடந்த சச்சரவு பற்றிய துண்டுப்பிரசுரம் 'வேம்பார்ச் சீரழிவு ,, என வெளி யிடப்பெற்ற ஒரு துண்டுப் பத்திரிகைக்கு விடைகூறும் முகத் தால் எழுந்தது இந்த வெளியீடு. viii. 674/1917/I.

Q6:6

## 291 சமயம் : பொது

422. i. இந்தியர் சமயம்: முதற் பதிப்பு; ii. ஹிந்து மதாபிமான சங்கம், காரைக்குடி; எஸ்டேட் பிரஸ், காரைக்குடி; iii. மே, 1919; iv. உ.ப. 16; v. 10×7 செ. மீ.; vi. இலவசம்; vii. இந்நூலில் இந்தியர்களுக்கென ஒரு சமயம் இருக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தி எழுதப்பட்டுள்ளது. இந்தியர் மதமே உலக மதம் என்பதனை வற்புறுத்தி உரைப்பது இச்சிறு நூல். viii. 341/1919/III.

QA

ஜினராஜ தாஸர்

423. i. எனது பிரதிக்ஞை: திருந்திய இரண்டாம் பதிப்பு; ஏ. இரத்தின சபாபதி முதலியார், திருமீயச்சூர்; பிரம வித்யா பிரஸ், திருமீயச்சூர்; iii. ஆகஸ்ட், 1918; iv. உ.ப. 97; v. 21×14 செ மீ.; vi. 1–0–0; vii. ஆங்கிலத் தில் 'I promise' என்று திரு. ஜினராஜதாஸர் எழுதியது தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. சீடபாவம் பெற்ற சில சிறுவர்களை நோக்கி ஜினராஜதாஸர் அவர்களால் உரைத் தருளப் பெற்ற வசனங்களும், திருவாசகம், தாயுமானவர் திருமந்திரம் முதலிய நம் முன்னோர்களின் நூற்களினின்று எடுத்த மேற்கோள்களும் இதில் அடங்கியுள்ளன. இது ஒரு பிரம்மஞான சபை வெளியீடாகும். தமிழ் மொழி பெயர்ப்பை ஆக்கியோர் ஆலங்குடி கே. எஸ். ராமச்சந்திர ஐயரும், பி.ஆர். சுந்தரராஜ ஐயரும் ஆவர். மலர்ந்த பார்வைகள், தீரமொழிகள், சந்தோஷ நிறைந்த நினைவுகள், வீரியமுடைய செயல்கள், முடிவுரை எனும் தலைப்புகளில் இது பாகுபடுத்தப் பெற்றிருக்கிறது. ஜினராஜதாஸர் அவர்களின் திருவுருவப் படம் நூன் முகப்பை அணி செய்கிறது. viii. 969/1918/III.

QA

424. i. மகா குருவின் வருகை: முதற் பதிப்பு; ii. உதயதிசை நக்ஷத்திர சங்கம்; லிட்ரரி சன் பிரஸ், கோயம்புத்தூர்; iii. அக்டோபர், 1918; iv. உ.ப. 16; v. 13×11செ.மீ.; vi. 0–0–6; vii. மகா குரு ஒருவர் மனிதருக்கு உதவி வருவார் என்று இந்து மதம், பார்ஸி மதம், புத்த மதம் முதலிய எல்லா மதங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்ற தென்ற விவரத்தை இந்நூலிற் காணலாம். மேலும் உதய திசை நட்சத்திர சங்கத்தின் ஆறு கொள்கைகளும் இதன்கண் கூறப்பட்டுள்ளன. viii. 347/1918/IV.

QA

## 294.1 வேதகாலத்துச் சமயம்

சிவத்தியாநாநந்த மஹரிஷி, குன்னூர் (மொ.து.)

425. i. இருக்கு வேதசங்கிதை—முதற் பாகம்: முதற் பதிப்பு; ii. சிவத்தியாநாநந்த மஹரிஷி, குன்னூர்; பிரேசர் பிரஸ், குன்னூர்; iii. ஏப்ரல், 1918; iv. செ.மூ.உ.ப. 54; v. 23×14 செ.மீ.; vi. 1–0–0; vii. இருக்கு வேதத்தைத் தமிழில் செய்யுள் நடையில் உரையுடன் விளக்கப்பட்டுள்ளது. இது முதல் பாகமாகும். இந்நூல் மாத மொரு பாகமாக 36 பாகங்களில் 1918 ஏப்ரலிலிருந்து வெளி வந்த தாகத் தெரிகிறது. வருட சந்தா ரூ. 6 என்றும், தனிப் பிரதி விலை ரூபாய் 1 என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. viii. 831/1918/II.

Q11

426. i. இருக்குவேத சங்கிதை—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. சிவத்தியாநாநந்த மஹரிஷி, குன்னூர்; பிரேசர் பிரஸ், குன்னூர்; iii. மே, 1918; iv. செ.மூ.உ.ப. 56; v. 23×14 செ.மீ.; vi. 1–0–0; vii. இருக்கு வேதத்தைத் தமிழில் மொழி பெயர்த்துப் பொருளுடன் விளக்கப்பட்டுள்ளது. ருக்வேதம் தமிழில் செய்யுளும் வசனமுமாய் 36 பாகங்களாக 1918 ஏப்ரலிலிருந்து மாதந்தோறும் வெளிவந்து கொண்டிருக்கிறது என்றும் ஆண்டு சந்தா ரூ. 6, தனிப்பிரதி விலை ரூ. 1 என்றும், குறிப்பிடப்பட்டுள்ளது. viii. 832/1918/II.

Q11

427. i. இருக்கு வேத சங்கிதை—மூன்றும் பாகம்: முதற் பதிப்பு; ii. சிவத்தியாநாநந்த மஹரிஷி, குன்னூர், பிரேசர் பிரஸ், குன்னூர்; iii. ஜூன், 1818; iv. செ.மூ.உ.ப. 56; v. 23×14 செ.மீ.; vi. 1–0–0; viii. vii....; 833/1918/II.

Q11

428. i. ஸூத ஸம்ஹிதை: முதற் பதிப்பு; ii. என். எஸ். இராஜா ராமய்யர்; அடிசன் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1918; iv. உ.ப. 590; v. 22×14 செ.மீ.; vi. ....; vii. சிவனின் பெருமையினை

விளக்குகின்றதும், கந்த புராணத்தின் ஒரு பகுதியாக அமைந்ததுமாகிய ஸூத ஸம்ஹிதை பற்றி இந்நூல் தமிழில் தருகிறது. வேதாந்த ரகசியங்கள் மிகத் தெளிவாயும் எளிதில புத்திக்கு விளங்கக்கூடியதாகவும், சைவாகமத்தைப் பின்பற்றியதாகவும் இது உள்ளது. இதற்கு வித்யாரண்ய சுவாமிகள் என்பார் 'தாத்பர்ய தீபிகை' என்னும் பாஷ்யம் எழுதியிருக்கிறார். ஆர். ஆனந்தகிருஷ்ண சாஸ்திரி என்பாரின் தமிழ் மொழி பெயர்ப்பை ஆதாரமாக வைத்து இம்மொழி பெயர்ப்பு நூல் வெளியிடப்பட்டிருக்கிறது. மூலத்தின் மொழிபெயர்ப்பு பெரிய எழுத்திலும், வியாக்கியானத்தில் உள்ளதும் மற்றும் இதர விசேஷங்கள் சிறு எழுத்திலும் அச்சில் அமைக்கப்பட்டிருக்கின்றன. சிவ மஹாத்மியகாண்டம், ஞானயோக காண்டம், முக்தி காண்டம், யக்ஞ வைபவ காண்டம் என நான்கு காண்டங்கள் இதில் உள்ளன. viii. 613/1919/I.

Q23 : 2261

## 294.3 பௌத்த மதம்

அரிகரமையர், ஆர்., அம்பாசமுத்திரம்

429. i. புத்த புராணம்: முதற் பதிப்பு; ஆர். அரிகர மையர், அம்பாசமுத்திரம்; ஸ்ரீராமானுஜம் அச்சியந்திரசாலை, தென்காசி; iii. மார்ச், 1920; iv. செ.மூ.உ.ப. 81; v. 19×13 செ.மீ.; vi. 0–8–0; vii. கௌதம புத்தரின் வாழ்க்கை வரலாறு இதில் கூறப்பட்டுள்ளது. இனிய எளிய செய்யுள் நடையாலாயது. 13 படங்களையும் 303 செய்யுட்களையும் கொண்டது இந்நூல். புத்த புராண வசனச் சுருக்கமும் அரும்பதவுரையும் இந்நூலின்கண் அமைந்துள்ளன. கல்லிடைக்குறிச்சி ஏகாம்பரபுரம் கிராமம் திரு. எஸ். எஸ். சங்கரய்யர் பொருளுதவியால் இந்நூல் வெளிப்போந்ததாகத் தெரிகிறது. அம்பாசமுத்திரம் தீர்த்தபதி உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் சதாசிவ அய்யர் என்பார் அணிந்துரை யொன்று இதற்கு வழங்கியுள்ளார். viii. 70/1920/II.

Q4 : 33

அயோத்திதாஸ், க.

430. i. பாதசேவை விவரம்: முதற் பதிப்பு; ii. பி. எம். இராஜரத்தினம், சென்னை; பி. ஆர். ராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. ஜனவரி, 1918; iv. உ.ப. 11; v. 21×14 செ.மீ.; vi. 0–0–6; vii. இது ஒரு புத்த சமயச் சிறு வெளியீடு. சைவ, வைணவ வழிபாட்டு முறைகள் புத்த சமய மூல முறைகளை ஒட்டியன என்று வலியுறுத்துகிறது. இதில் ஸ்ரீபாத சேவை விவரம், இலிங்க பூஜை விவரம் என

இரு பகுதிகள் உள. ஞானமதியுள்ளான், அருங்கலச் செப்பு முதலிய பல நூல் மேற்கோள்களையும் தமது கருத்துக்கு ஆதரவாக ஆசிரியர் கொடுத்துள்ளார். viii. 561/1918/I.

Q4: 3

431. i. **ஒளவையார் என்னும் அம்பிகையம்மன் சரித்திரம்**: திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. கோலார் தங்கத்தரை சாம்பியன் ரீப்ஸ் சாக்கைய புத்த சங்கம்; பி. ஆர். ராம ஐயர் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1916; iv. செ.மூ.ப. 21; v. 21×14 செ.மீ.; vi. 0–1–0; vii. தமிழ் மூதாட்டியான ஒளவையின் வாழ்க்கையைப் பற்றி எழுதப்பெற்றது, இந்நூல். புத்த மத நோக்குடன் எழுதப்பெற்றது. அம்பிகையை வழிபடும் முறைகளும் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 349/1917/I.

Q4: 3

**மாதவையர், அ.**

432. i. **சித்தார்த்தன்**: முதற் பதிப்பு; ii. சுதேசமித்திரன் ஆபீஸ், சென்னை; சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1918; iv. உ.ப.+செ.மூ.ப. 168; v. 18×13 செ.மீ.; vi. 0–12–0; vii. இது புத்த சமயப் பெரியாரான கௌதம புத்தரின் வாழ்க்கை வரலாற்றைச் சித்தரிப்பது; உ. வே. சாமிநாதய்யர் இயற்றிய புத்த சரித்திரமும் ஆங்கிலத்தில் சர் எட்வின் ஆர்னல்டு எழுதிய "ஆசிய சோதி" ஆகிய இரு நூல்களையும் அடியொற்றி எழுதப்பட்டது. நூலிறுதியில் பாயிரமாகப் புத்த சரிதை கவிதை உருவாகத் தரப்பட்டுள்ளது. டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்களுக்கு இந்நூல் சமர்பிக்கப்பட்டதாகவும் முன்னுரையில் குறிப்பிடப்பட்டுள்ளதோடு அவரைப் பற்றி ஒரு செய்யுளும் எழுதியுள்ளார். அவ்வாசிரியர் புத்த சரிதையைப் பாட முயன்றனரென்றும், முற்றுவிக்கவியலாது இடையே தடைபட்டதாகவும் பாடிய ஒரு பகுதியை இவ்வுரை நூலுடன் வெளியிட்டுள்ளதாகவும் குறிப்பிட்டுள்ளார். viii. 12/1919/II.

Q4: 3

**ஸ்ரீநிவாஸ அய்யங்கார், ஸி. ஆர்.**

433. i. **கௌதம புத்தர்**: முதற் பதிப்பு; ii. சுதேசமித்திரன் ஆபீஸ், சென்னை; சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1920; iv. உ.ப. 87; v. 16×11 செ.மீ.; vi. 0–5–0; vii. இதில், கௌதம புத்தரின் வாழ்க்கை வரலாறு, புத்த சமயத்தின் பிற்கால அமைப்பு, பௌத்த மத நூல்கள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. viii. 806/1920/III.

Q4: 3

## 294.4 சமண மதம்

434. i. ஸ்தோத்திரச் செய்யுட் கோவை: முதற் பதிப்பு; ii. தி. அதி நயினார், சென்னை; தருமசீலன் அச்சுக்கூடம், சென்னை; iii. மார்ச், 1919; iv. செ.மூ.உ.எ. 48+1; v. 21×14 செ.மீ.; vi. 0–1–0; vii. இது சைன சமய தோத்திர நூல். அருக சமயப் பெரியோர் செய்த நூல்களினின்றும் தெரிந்து தொகுக்கப்பெற்றது இத்தோத்திரமாலை. வடமொழிக் கவிகள் கிரந்த லிபியில் தரப்பட்டுள்ளன. தமிழிலுள்ள ஜீவ ஸம்போதனை, சூளாமணி, சிந்தாமணி, திருக்கலம்பகம், திருநூற்றந்தாதி, நாககுமார காவியம், யசோதர காவியம், மேருமந்தர புராணம், நரிவிருத்தம், சிலப்பதிகாரம் என்னும் நூல்களிலிருந்தும் பாடல்கள் திரட்டப்பட்டுள்ளன. viii. 319/1919/III.

Q3: 3

## 294.5 இந்து சமயம்: சமயநெறி

தாமோதர முதலியார், கோ.

435. i. பகவன்நாம விசேடம்: முதற் பதிப்பு; ii. மாசிலாமணி முதலி; சுந்தரவிலாச அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. உ.ப. 9; v. 18×11 செ.மீ.; vi. 0–1–0; vii. தியானத்தால் அடையும் நன்மைகளை விளக்குவது இந்நூல். அகங்காரம், மமகாரம் முதலிய தற்போதம் நீங்கி மனம் தூய்மையடைந்து கரை ஏற வழிகாட்டுவது. இறைவன் நாமத்தைத் தியானித்தலால் உளதாகும் நற்பயனும் உரைக்கப்பட்டுள்ளது; கஸ்டம் ஆபீஸ் கு. இராஜு முதலியார் வேண்டுகோளின்படி இந்நூல் இயற்றப்பெற்றது. இதன் ஆசிரியர் வேதாந்த சித்தாந்த சமரச வித்வான் கோ. வடிவேலு செட்டியார் அவர்களின் மாணவராவார். viii. 439/1916/I.

Q2: 4

திருவேங்கட ஆச்சாரியார், கே., காயிரம்பேடு

436. i. பௌருஷேய பிராஹ்மண ஸந்தியா வந்தனம்: முதற் பதிப்பு; ii. கே. திருவேங்கடாச்சாரி, காயிரம்பேடு; பிரின்ஸ் ஆப் வேல்ஸ் பிரஸ், சென்னை; ii. 1916; iv. உ.ப.+செ.மூ.ப. 120; v. 18×11 செ.மீ.; vi. 0–6–0; vii. பௌருஷேயப் பிராம்மணோத்தமர்கள் கைக்கொள்ள வேண்டிய நித்திய நைமித்யாதி கர்மங்களை விவரிப்பது. பௌருஷேய பிராமணர்கள் எங்கும் ஒரேவிதமான அனுஷ்டானிகளாக இருக்கச் செய்யும் நோக்கத்துடன் இந்நூல் தொகுப்பு வெளியிடப்பட்டது. viii. 19/1916/II.

Q2: 4

நன்னய்யர், வி.கே.

437. i. ஸனாதன தர்ம ஸபா—7 வது பிரகடனே—மத நிரூபணம் முதற் பதிப்பு ; ii. ஸ்ரீ பிரசன்ன வெங்கடேஸ்வா அச்சாபீஸ், மதுரை ; iii. நவம்பர், 1918 ; iv. உ.ப. 8 ; v. 13×12 செ.மீ. ; vi. -0–3 ; vii. இதில் சமூகத்திற்குச் சமயத்தின் அவசியம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. viii. 25/1919/II.

Q2:4

438. i. ஸனாதன தர்ம ஸபா—8-வது பிரகடனே ; ii. வி.கே. நன்னய்யர், சென்னே ; iii. பிரசன்ன வெங்கடேஸ்வா அச்சாபீஸ், மதுரை ; iii. டிசம்பர், 1918 ; iv. உ.ப. 8 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–0–3 ; vii இதில் குலம் எது? என்பது பற்றி விளக்கிக் கூறப்பட்டுள்ளது. viii. 26/1919/III.

Q2:4

439. i. ஸனாதன தர்ம ஸபா—9வது பிரகடனே—"ஸௌசம்" : முதற் பதிப்பு ; ii. வி.கே. நன்னய்யர், சென்னே ; ஸ்ரீபிரசன்ன வெங்கடேஸ்வர அச்சாபீஸ், மதுரை ; iii. ஜனவரி, 1919 ; iv. உ.ப. 8 ; v. 14×11 செ.மீ.; vi. 0–0–3 ; vii தேக ஆரோக்கியம் பற்றியும் சுத்தத்தின் சிறப்புப் பற்றியும் இதில் விளக்கப்பட்டுள்ளது. சுருதிகளில் சொன்னபடி நல்லொழுக்கங்களே மேற்கொண்டு ஒழுகவேண்டியதன் அவசியத்தை ஆசிரியர் வற்புறுத்திக் கூறியுள்ளார். viii. 27/1919/III.

Q2:4

முத்துக் கற்பகக் குருக்கள்

440. i. திலோதக தர்ப்பண விதி: திருந்திய இரண்டாம் பதிப்பு ; ii. முத்துக் கற்பகக் குருக்கள்; ஸ்ரீபாலம்பிகா விலாச அச்சுக்கூடம், சிதம்பரம் ; iii. 1915 ; iv. உ.ப. 13 ; iv. 14×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இறந்தவர்கள் ஆத்மா சாந்தியடைய நடத்தப்படும் சடங்குகளே விளக்குவது. முதலில் வருஷாதி, அயனம், ருது, மாசம், பக்ஷம், திதி, வாரம், நட்சத்திர விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. பின், தர்ப்பண விதி தொடங்கிச் சங்கற்பம், விபரீத சகளிகரணம் வரை செய்யத்தகு முறைமைகள் இதில் விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 64/1916/II.

Q2·4

441. i. லௌகிகஸ்தருக்குத் தகுந்த நித்யாநுஷ்டான திருவாராதனச் சுருக்கம் ; ii. மந்திரம் சபா ; மினர்வா பிரஸ், சென்னே ; iii. 1916 ; iv. உ.ப.+செ.மூ.ப. 22 ; v. 11×12 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. தென்கலே ஸ்ரீவைஷ்ணவர்களின்

கொள்கைப்படி அனுஷ்டிக்க வேண்டிய நித்ய கர்மானுஷ்டங்கள் அடங்கியுள்ளன. தினமும் காலையில் படுக்கைவிட்டெழுந்து, தந்த சுத்தி முதலியன செய்து, தீர்த்தமாடி, திருமண்காப்பணிந்து பின் திருவாராதனை செய்ய வேண்டும். ஒவ்வொரு நிலையிலும் சொல்ல வேண்டிய மந்திரங்களும் பாசுரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 462/1916/II.

Q2:4

வங்கடராம சாஸ்திரியார், ஜே.எஸ்.

442. i. ஸந்த்யாவந்தன சந்த்ரிகா : முதற் பதிப்பு ; ii. ஜே.எஸ். கிருஷ்ணசுவாமி ஜோசியர், மதுரை ;விக்டோரியா பிரஸ், மதுரை ; iii. 1917 ; iv. உ.ப.+செ.மூ.ப. 108 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இதில் திரிகால சந்த்யாவந்தனமும் அதன் அர்த்தமும் ஆதார சுலோகங்களோடு விவரித்து எளிய நடையில் வசன ரூபமாய் எழுதப்பட்டிருக்கிறது. 50 அத்தியாயங்கள் உள, வட மொழிச் சுலோகங்கள் நாகரி எழுத்திலும் கிரந்த எழுத்திலும் தரப்பட்டுள்ளன. அவற்றிற்குத் தமிழ்ப் பொருளும் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 970/1917/III.

Q2:4

ஷர்மா எம்.ஜே., மதுரை. (மொ.து.)

443. i. ஆர்ய வைதிக சந்தயா வந்தனம் : முதற் பதிப்பு ; ii. எம்.ஜே. ஷர்மா, மதுரை ; அஷ்டலக்ஷிமி விலாசம் பிரஸ், மதுரை ; iii. ஜூலை, 1917 ; iv. உ.ப. 16 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. ஆரிய சமாஜ பிரிவினர் பொருட்டுத் தயானந்த சுவாமியால் வட மொழியில் இயற்றப்பட்ட பஞ்ச மஹா யக்ஞ விதியின் ஒரு பாகமாகிய சந்தியா வந்தனத்தின் தமிழாக்கமே இந்நூல். இறை வழிபாட்டு முறைகளும், ஆரிய சமாஜத்தின் கொள்கைகளும் விளக்கப்பட்டுள்ளன. viii. 101/1917/III.

Q2:4

444. i. ஆர்ய வைதிக சந்தியா வந்தனம் : இரண்டாம் பதிப்பு ; ii. எம்.ஜே. ஷர்மா, மதுரை ; விக்டோர்யா பிரஸ், மதுரை ; iii. டிசம்பர், 1918 ; iv. உ.ப. 13 ; v. 20×I2 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. ஆர்ய வைதிக சந்தியா வந்தனத்தைப் பற்றி இப்புத்தகத்தில் கூறப்பட்டுள்ளது. தயானந்த சுவாமி அவர்களால் வட மொழியில் இயற்றப்பட்ட பஞ்சாமஹா யக்ஞ விதியின் ஒரு பாகமாக உள்ள சந்தியா வந்தனம் பற்றிய செய்திகளைத் தருவது. மதுரை எம்.ஜே. ஷர்மா என்பார் இதனைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். viii. 183/1919/I.

Q:24

## 294·5 இந்து சமயம்: வழிபாடு

445. i. **அஷ்டோத்தர ஸதநாமங்கள்** ; ii. கோ. செல்வரங்கம் அண்டு கம்பெனி, சென்னை ; மனோன்மணி விலாச அச்சுக் கூடம், சென்னை ; iii. 1913 ; iv. செ.மூ.எ. 101 ; v. 13×9 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. விநாயகர், சுப்பிரமணியர், சிவம், சிவகாம சுந்தரி, விஷ்ணு ஆகிய தெய்வங்களின் அர்ச்சனைக்குரிய அஷ்டோத்திர ஸத நாமங்கள் இதில் அடங்கியுள்ளன. viii. 1080/1919/I.

Q2:4

446. i. **அஷ்டோத்திர ஸத நாமங்கள்** : முதற் பதிப்பு ; ii. கே. செல்வரங்கம் கம்பெனி, சென்னை ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. நவம்பர், 1920 ; iv. செ.மூ.ப. 32 ; v. 12×8 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. விநாயகர், சுப்பிர மணியர், சிவம், சிவகாம சுந்தரி, விஷ்ணு ஆகிய தெய்வங் களின் அர்ச்சனைக்குரிய பெயர்களின் பட்டியலை இப்புத்த கத்தில் காணலாம். viii. 706/1920/IV.

Q2:4

447. i. **ஆலய வழிபாடு** : திருந்திய பதிப்பு ; ii. சுவாமி வேதா சலம், பல்லாவரம் ; டி.எம். அச்சுக்கூடம், பல்லாவரம் ; iii. ஜனவரி, 1918 ; iv. உ.ப. 8 ; v. 18×13 செ.மீ. vi. 0–2–0 ; vii. ஆலயங்களில் இறைவனை வழிபடுவதால் உண் டாகும் பக்தியினைப் பற்றியும், மனநிலையினைப் பற்றியும் மிகவும் சுருக்கமாகவும், அழகாகவும் இந்நூலில் குறிப்பிடப் பட்டுள்ளது. பல்லாவரம் சமரச சன்மார்க்க நிலைய குரு சுவாமி வேதாசலம் அவர்களால் பார்வையிடப்பட்ட நூல். இதனை வெளியிட ஆரல்வாய்மொழி ந. சுப்பிரமணிய பிள்ளை என்பார் உதவி புரிந்துள்ளார். viii. 315/1919/I.

Q2:4

உரோம லிபி

i. பூஜா விதி—6 (தொ.எ. 1123 பார்க்க) ; ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சி யந்திர சாலை, மதுரை ; iii. 1914 ; iv. செ.மூ.எ. 6 ; v ..; vi....; vii. தேவதாசிக் கரங்களைக் கீறி வழிபாடு செய்யும் முறைகளை விளக்குகிறது. திருச்சி மேட்டுச்சிந்தாமணியிலிருக்கும் வைத்தியர் தி. சுப்பிரமணிய பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது. viii. 181/1916/IV.

Q2:4

i. பூஜா விதி சக்கரம்—14 (தொ.எ. 1123 பார்க்க) ; ii. வித்வான். த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1914 ; iv. செ.மூ.எ. 14 ; vii. பூசைக்குரிய சக்கரங்களின் விதி முறைகளை விளக்குகிறது. ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த சுந்தரபாண்டியம் புஸ்தகக் கடை, வை. சிவகுருநாத மூப்பனர் அவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்நூல் அச்சிடலானது. viii. 181/1916/IV.

Q2:4

**கிருஷ்ண பண்டிதர், மைசூர் அம்பிலி**

448. i. வைதிகாவைதிக பூண்ட்ர கல்பித நிரூபணம் ; ii. அ. கி.வெ. ராமர் ராய், மதுரை ; ஸௌராஷ்ட்ர பிரஸ், மதுரை ; iii. 1919 ; iv. உ.ப.+செ.மூ.ப. 7 ; v. 12×8 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. இது ஸௌராஷ்ட்ரா பிரிவினரின் தத்துவ விளக்கமாகும். இது ஸௌராஷ்ட்ர ப்ராஹ்மண வித்வஜன அபிவிர்த்தியின் பொருட்டு வெளியிடப்பெற்றது. சைவ வைணவர் நெற்றியில் தரிக்கும் புண்டரக் குறியீடு பற்றியும் விளக்கம் தரப்பட்டிருக்கிறது. viii. 417/1919/IV.

Q2:4

449. i. **சச்சிதானந்த மாலை** : முதற பதிப்பு ; ii. பகடால முனி ரத்தினம் நாயுடு, இராயவேலூர் ; கிருஷ்ண விலாஸ அச்சுக் கூடம், இராயவேலூர் ; iii. டிசம்பர், 1917 ; செ.மூ.எ. 3+30 ; v. 14×12 செ.மீ. ; vi. 0-0-6 ; இறை வணக்கப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. சிவபரம்பொருளின் தன்மை விரித்தோதப்பட்டுள்ளது. இரட்டையாசிரிய விருத்தங்களால் ஆகியது இம்மாலை. viii. 206/1918/I.

Q2:4

450. i. **சனி பகவான் தோத்திரம், நவக்கிரக தோத்திரம்** : திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. பி. நாராயணசாமி பிள்ளை, அண்டு பிரதர், சென்னை ; நற்றமிழ் விலாச அச்சியந்திர சாலை, சென்னை ; iii. மே, 1920 ; iv. செ.மூ.ப. 8 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–0-3 ; vii. இதில் நவக்கிரகத்துள் ஒன்றாகிய சனி பகவானைக் குறித்துப் பாடப்பெற்ற துதிப் பாடல்களும் நவக்கிரக தோத்திரப் பாடல்களும் அடங்கியுள்ளன. viii. 190/1920/III.

Q2:4

**சுப்பிரமணிய முதலியார், ஆ., திருத்தவத்துறை**

451. i. பஞ்சகவ்ய பூஜையும் சைவ பிதுர்தர்ப்பண விதியும் : மூதற் பதிப்பு ; ii. தொண்டை மண்டல வேளாளர் அபிவிருத்தி

கிளைச் சங்கம், திருச்சிராப்பள்ளி ; வெட்னஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1917 ; iv. உ.ப. 12 ; v. 17×13 செ.மீ.; vi.........; vii. சைவ சமயத்தின் தர்ப்பண விதி இந் நூலில் விளக்கப்பட்டுள்ளது. பஞ்சகவ்ய பூஜை, சைவ பிதுர் தர்ப்பணம் ஆகிய பிரிவுகள் உள. சங்கர்ப்பத்திற்குரிய தானம், மாதாதி குறிப்பு அட்டவணை வடிவில் தரப்பட்டுள்ளது. பஞ்சகவ்ய பூசை முறையும் நன்கு விளக்கிக் காட்டப் பட்டுள்ளது. viii. 160/1917/III.

Q2 : 4

**திருமூலர்**

i. பூஜாவிதி—41 (தொ.எ. 1123 பார்க்க) ; ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை : ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. 1914 ; iv. செ.மூ.எ. 41 ; vii. மந்திர செபம் முதலியவற்றால் வழிபடும் முறையைக் கூறுவது. மதுரை வடக்கு வாசல் யானைக்கல் தெரு வித்வான் மு. குழந்தைவேலுப் பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பட்டது. viii. 181/1916/IV.

Q2 : 4

**தெக்ஷணாமூர்த்தி தேசிகர், தென்காசி**

452. i. சமயாசாரலோப நிவர்த்திக்கின்ற பிராயச் சித்த சிரார்த்த விதி : முதற் பதிப்பு ; ii. பாபவிநாச பண்டாரத்தய்யா ; ஸ்ரீ ராமாநுஜம் அச்சியந்திரசாலை, தென்காசி. iii. மார்ச், 1920 ; iv. உ.ப. 112 ; v. 19×12 செ.மீ.; vi. 0–6–0 ; vii. இந்து சமயத் தொடர்புடைய சில பிராயச்சித்த முறைகளைப் பற்றி இதில் கூறப்பட்டுள்ளது. பிதுர்க்களை நினைந்து செய்யப் பெறும் சிரார்த்த நிகழ்ச்சி முறைகளையும் சிரார்த்தத்தின் மகிமையையும் விளங்க உரைப்பது. viii. 24/1920/II.

Q2 : 4

453. i. நவக்கிரகத் தோத்திரம்—சனிபகவான் தோத்திரம் : முதற் பதிப்பு ; ii. பகடால முனிரத்னம் நாயுடு, வேலூர் ; கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், இராயவேலூர் ; iii. டிசம்பர், 1916 ; iv. செ.மூ.எ. 11+11 ; v. 14×12 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. நவக்கிரகங்களைக் குறித்தும், சனிபகவானைக் குறித்தும் பாடப்பெற்ற தோத்திரப் பாடல்களைக் கொண்டது இந்நூல்; viii. 156/1917/I.

Q2 : 4

**ராமச்சந்திர அய்யர், பி.என்., புதக்குடி**

454. i. ராமேசுர சேது யாத்திராநுகூலம் அதாவது மோக்ஷத்தை அடையும் வழி ; ii. பி.என். ராமச்சந்திர அய்யர்

புதக்குடி; அமிர்தவர்ஷனி பிரஸ், கும்பகோணம்; i. 1916; iv. செ.மூ.ப. 15; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0; vii. ராமேசுவரத்தில் கடலாடினால் உண்டாகும் மோட்ச வழியும் மேற்படி தலத்தில் காணப்படும் அநேக தீர்த்தக் கட்டங்களும் இதில் விளக்கப்பட்டுள்ளன. viii. 400/1916/III.

Q2 : 4

**வாலாம்பாள் அம்மாள், வி. எஸ்., சென்னை**

455. i. வேதாந்தப் பாட்டுகளும் தினசரி ஸ்தோத்திரங்களும்: திருந்திய மூன்றும் பதிப்பு; ii. வி.எஸ். வாலாம்பாள் அம்மாள், சென்னை; கமர்ஷியல் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1919; iv. செ.மூ.ப. 40; v. 22×14 செ.மீ.; vi; 0–3–0; vii. தமிழ்நாட்டுப் பெண்கள் தினசரி காலையில் இறைவனைக் குறித்து நிகழ்த்தும் இறைவணக்க முறை இதில் அடங்கியுள்ளது. இவை காலையிலும், மாலையிலும், மற்றும் பூசை வேளைகளிலும் பாடத்தக்க துதிப் பாடல்களாகும். இந்தப் பாட்டுக்கள் ஆசிரியையின் பாட்டியாரிடமிருந்து தெரிந்து தொகுத்து வெளியிடப்பெற்றனவாகும். viii. 525/1919/III.

Q2 : 4

**வாலிகுருவேலு ஸ்வாமி, சென்னை**

456. i. தீபாவளி லட்சுமி பூசை விதி: முதற் பதிப்பு; ii. வாலி குருஸ்வாமி, சென்னை; ரூபர்ட் அண்டு கோ., சென்னை; iii. நவம்பர், 1916; iv. செ.மூ.ப. 40; v. 23×15 செ.மீ.; vi. 0–2–0; vii. சில தெய்வங்களை வழிபட வேண்டிய விதிகளும், பூசை முறைகளும் இந்நூலில் நன்கு விளக்கப் பட்டுள்ளன. viii. 978/1916/IV.

Q2 : 4

**ஷர்மா, எம்.ஜே., மதுரை**

457. i. ஈஸ்வர பிரார்த்தனை: முதற் பதிப்பு; ii. எம்.ஜே. ஷர்மா, மதுரை; விவேகோதயம் பிரஸ், மதுரை; iii. பிப்ரவரி, 1918; iv. உ.ப.+செ.மூ.ப. 9; v. 17×11 செ.மீ.; vi. 0–0–6; vii. இந்நூல் தயானந்த சுவாமி அவர்களால் வட மொழியில் இயற்றப் பெற்ற சம்ஸ்கார விதியிலிருந்த ஈஸ்வரப் பிரார்த்தனையின் தமிழாக்கம். மஹரிஷி தயானந்த சரஸ்வதி என்பார் 'ஆர்ய ஸமாஜ' ஸ்தாபித்தவராவர். இவருடைய உருவப் படமும் முகப்பில் உளது. பஜனை சங்கீத சத்துருவளி களும் நூலிறுதியில் உள்ளன. viii. 707/1918/I.

Q2 : 4

458. i. ஹிந்து தேவாலயங்கள்—முதற் பாகம்; ii. ஹிந்து மதாபிமான சங்கம், காரைக்குடி; எஸ்டேட் பிரஸ், தேவ கோட்டை; iii. ஜூலை, 1919; iv. உ.ப. 16; v. 12×8 செ.மீ.

vi. இலவசம்; vii. கோயில்களில் விக்ரக ஆராதனை நடக்கின்ற அவசியத்தினைப் பற்றியும், இந்துமதக் கோயில்களைப் பற்றியும் விளக்கமாக இந்நூலில் எழுதப்பட்டுள்ளன. இது முதல் பாகமாகும். இவ்வகையில் ஹிந்து மதாபிமான சங்கத்தார் வெளியிட்ட பிற வெளியீடுகளாவன : பிரணவ கோஷம், ஈசுவர பக்தி, ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்ஸ விஜயம், ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளின் பரமோபதேசம், பிரம்மோற்சவம், இந்தியர் சமயம், விக்கிரக ஆராதனை முதலியனவாம். viii. 275/1919/IV.

Q2 : 4

## 294.5 இந்து மதம்: பொது

அரங்கசாமி செட்டி (தொ.து.)

459. i. த்விஜப்ரகாசிகா: முதற் பதிப்பு; ii. அரங்கசாமி செட்டி & சி. செ. சங்காச்சாரி; விக்டோரியா அச்சுக்கூடம், இராயவேலூர்; iii. மார்ச், 1919; iv. உ.ப. 13; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0; vii. நவீனப் பிராமணர்களினுல் பரவியிருக்கும் அதர்ம குணங்களென்ற அஞ்ஞான குணங்களை நீக்குவதற்காகப் பல நூல்களின் உதவியைக் கொண்டு ஜீவ காருண்ய தர்மநீதிக் குணங்கள் என்னும் 'த்விஜப்பிரகாசிகா' என்ற இந்நூல் சகல மாணவர்களின் உபயோகத்திற்காகச் சீர்திருத்தக் கருத்துக்களோடு வெளியிடப்பட்டுள்ளது. 29 அத்தியாயங்கள் உள. இவற்றில் சில சமாதானங்களும், வேத உபநிஷத்துக்களும், தெலுங்கு, தமிழ் சுலோகங்களும் இடம் பெற்றுள்ளன. viii. 1227/1919/I.

Q2

இராமச்சந்திர நாயுடு, வி., ஏனங்குடி (மொ.து.)

460. i. சின்னங்கள்: முதற் பதிப்பு; ii. எ. இரத்தினசபாபதி முதலி, திருமீயச்சூர்; பிரம்ம வித்தியா அச்சுக் கூடம், திருமீயச்சூர்; iii. ஆகஸ்ட், 1918; iv. உ.ப. 19; v. 22×14 செ.மீ.; vi. 0–3–0; vii. சைவ, வைணவ மதத்தில் உள்ள சின்னங்களைப் பற்றியும், அவைகளில் அடங்கிய உட்கருத்துக்களைப் பற்றியும், அவற்றால் உண்டாகும் பயன்களைப் பற்றியும் இப்புத்தகம் கூறுகின்றது. இஃது ஓர் பிரம்மஞான சபையின் வெளியீடாகும். சடப்பை பிரம்மஞான சபைத் தலைவர் எ. நஞ்சுண்டப்பா என்பாரால் தெலுங்கில் வெளியிடப்பட்ட நூலின் தமிழ் மொழி பெயர்ப்பு, இது 'சாந்தி வசனம்' வெளியீட்டுத் தொடரில் இரண்டாம் தொகுதியின் பதினெண்ணாவது வெளியீடாகும். viii. 972/1918/III.

Q2

**பத்மநாபன், திண்டுக்கல்.**

461. சிவ விஷ்ணு விவேகம்: முதற் பதிப்பு; ii. கம்மெர்ஷியல் அச்சியந்திரசாலை, சென்னை; iii. டிசம்பர், 1917; iv. செ.மூ.உ.ப. 16; v. 18×12 செ.மீ.; vi. 0–1–6; vii. இந்நூலில் சைவ வைணவ வாதம், சிவ விஷ்ணு சமரசம், விஷ்ணு சரிதை, தசாவதாரம், சிவ விஷ்ணு சொரூபம் ஆகிய தலைப்புக்களில் பலவகைப் பாக்கள் அமைந்துள்ளன. பாடல்களுக்குக் கருத்துரையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. கெல்லட் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் வி.எஸ். நாராயணசாமி ஐயர் என்பார் இதற்குச் சாற்றுக்கவி பாடியுள்ளார். viii. 532/1918/I.
Q2

**விஸ்வநாத ஐயர், பி.ஆர்.**

462. i. ரிலிஜியஸ் பிரிமியர்—முதற் பாகம்: முதற் பதிப்பு; ii பி.ஆர். விஸ்வநாத அய்யர், சாத்தூர்; எல். வி. பிரஸ் சாத்தூர்; iii. மார்ச், 1918; iv. செ.மூ.ப. 14; v. 18×11 செ.மீ.; vi. 0–1–0; vii. மதபோதனையைப் பற்றிய பாடப் புத்தகத்தின் முதல் பாகம் இது. தேவார திருவாசகத்திலிருந்து குறிப்பிட்ட சில பாடல்களை எடுத்துக்காட்டி அவைகளின் விளக்கவுரைகளும் கொடுத்து, மாணவர்களுக்கு இறைவன்மாட்டு பக்தி உண்டாகும் முறையில் எழுதப்பட்டுள்ளது. முகவுரைப் பகுதியில் இறைவணக்கத்தின் இன்றியமையாமையை எது காட்டி யாவருக்கும் விளங்கும் வகையில் எழுதியுள்ளார். viii. 576/1918/IV.
Q2

## 294.5 [1] குரு வணக்கம்

**அருளாநந்த சுவாமிகள்**

463. i. குருதோத்திரப்பா: முதற் பதிப்பு; ii. அருளானந்த சுவாமிகள், சென்னை; சச்சிதாநந்தம் பிரஸ், சென்னை; iii. ஜனவரி, 1919; iv. செ.மூ.எ. 8+11+9; v. 14×11 செ.மீ.; vi. இலவசம்; vii. ஸ்ரீநீலமேக சுவாமிகள் மீது அவர்களுடைய சீடர்களில் ஒருவர் பத்தியோடு பாடிய பாடல்கள். இவர் முனிசாமி என்னும் இயற் பெயர் உடையார்; அருளானந்த சுவாமிகள் என்பது இவர் தம் தீட்சா நாமம். காமக்கூர் மு. சுந்தர முதலியார், திருவோத்தூர் ம. தி. பானுகவி சுவாமி முதலியோர் இதற்குச் சாற்றுக்கவி பாடியுள்ளனர். viii. 411/1919/I.
Q2

**அழகுநம்பிக் கவிராயர், பி., சாலிச்சந்தை**

464. i. சாலிச்சந்தை கருணையானந்த சுவாமிகள் பேரில் மணிமாலை: இரண்டாம் பதிப்பு; ii. தமிழ்ச் சங்கம் பவர் பிரஸ், மதுரை; iii. 1919; iv. செ.மூ எ. 60; v. 21×14 செ.மீ.;

vi.......; vii. அது சாலிச்சந்தை கருணையானந்த சுவாமிகள் மீது பாடப் பெற்ற பத்திரசஞ் சொட்டும் அறுபது பாடல்களைக் கொண்டது. viii. 404/1920/I.

Q2

ஆதிநாராயணயதி, டி.

465. i. பரம குரு ஸ்தோத்திரம்; ii. ஆதிநாராயணயதி: பிரம்மானந்த அச்சுக்கூடம், திருவாதி; iii. 1916; iv. செ.மூ.எ. 1+13; v. 15×12 செ.மீ.; vi......; vii. அருட் பிரகாசர் எனப்படும் இராமலிங்க சுவாமிகளைப் பற்றிய தோத்திரமாலை, விருத்தப் பாவாலாகியது; 'திருவருட் பிரகாச வள்ளலே எனை உன் மெய்ச்சிடரொடு சேர்த்தருள்கவே' எனப்பாடல் தோறும் விளித்துத் துதிப்பது. viii. 827/1916/H.

Q2

ஏகாம்பர யோகீஸ்வரர்

466. i. பாலையானந்த சுவாமி கண்மணிப் பதிகம் (ஸ்ரீ ஏகாம்பர யோகீஸ்வரர் தியான அகவல்): ii. செயிண்ட் அந்தோனீஸ் பிரஸ், உதகைமண்டலம்; iii. 1920; iv. செ.மூ.எ. 10; v. 17×14 செ.மீ.; vi......; vii. இந்நூல் மஹாத்மா ஸ்ரீமத் ஏகாம்பர யோகீஸ்வரர் மீது அவர் தம் மாணவர் ஸ்ரீதேசிகானந்தசுவாமிகளால் பாடப்பட்டு, சித்தாத்திரி ஆண்டு கார்த்திகைத் திங்கள் எட்டாம் நாள் ஞாயிற்றுக்கிழமை மண்டலாபிஷேகபூஜா வைபவத்தில் அரங்கேற்றி விநியோகிக்கப்பட்டதாகத் தெரிகிறது. ஸ்ரீ பாலையானந்த சுவாமியென்னும் முருகப் பெருமான் பரமாக 'கண்மணி' எனத்தொடங்கிப் பாடப்பட்ட பதிகமாதலின் இது 'கண்மணிப் பதிகம்' என்னும் பெயரினை எய்துவதாயிற்று. மகாத்மா ஸ்ரீமத் ஏகாம்பரயோகீஸ்வரரின் உருவப்படமும் ஸ்ரீமதி இரத்தின அம்மணி சித்தீஸ்வரி அவர்களின் நிழற் படமும் உள்ளன. நூலினிறுதியில் மஹான் சுவாமி ஓம்பிரகாஷ் அவர்களின் நிழற் படம் ஒன்றும் காணப்படுகின்றது. viii. 363/1920/I.

Q2

கந்தசாமிக் கவிராயர், மு.ரா., மதுரை

i. சண்முகாநந்த மஹாதேவ மாலை (தொ.எ. 565 பார்க்க); ii. மு.ரா. கந்தசாமிக் கவிராயர், மதுரை; டாட்ஸன் பிரஸ், திருச்சி; iii. டிசம்பர், 1916; iv. செ.மூ.எ. 30; v....; vi....; vii இம் மாலைப் பாடல்கள் முப்பதும் 'சண்முகாநந்த மகா தேவ தேவ' எனும் முடிவினைப் பெற்றுள்ளன. இது ஸ்ரீசண்முகாந்தகுருவைக் குறித்த துதிமாலை. தீக்ஷை, யோகம், இருவினை யொப்பு, மலபரிபாகம், சமாதி, அபரஞானம், பரஞானம் முதலியன விளக்கப்பட்டுள்ளன. viii/126/1917/I.

Q2

i. தனிக்கவிகள்: (தொ.எ. 565 பார்க்க); ii. மு. ரா. கந்தசாமிக் கவிராயர், மதுரை; டாட்ஸன் பிரஸ், திருச்சி; iii. டிசம்பர், 1916; iv. செ.மூ.எ. 36; v....; vi....; vii. ஸ்ரீசண்முகாநந்த சுவாமிகளைக் குறித்து ஆசிரியர் பாடிய துதி நூல். இதில் ஸ்ரீசுவாமிகளுக்கும் ஆசிரியருக்கும் கவிதை நடையில் நிகழ்ந்த கடிதங்களையும் காணலாம். கடித முறையில் அமைந்த கவிதைகள் ஒருவகையில் சீட்டுக் கவிகளாகும்; viii. 126/1917/I.

Q2

சாமிநாதையர், சி. எல்., சென்னை

467. i. திருவருட் கோவை: முதற் பதிப்பு; ii. சி.எஸ். சாமிநாதையர், சென்னை; கமர்சியல் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1919; iv. செ.மூ.எ. 8; v. 18×12 செ.மீ.; vi. இலவசம்; vii. திருவருளைப் பற்றி எழுதப்பட்ட பக்திப் பாடல்களின் தொகுப்பாகும் இந்நூல். பகவத் பிரசாதத்தை முன்னிட்டு இயற்றப்பட்டது. மௌனகுருநாதரின் நல்வரவு, குருவணக்கம் ஸர்வேசன் துதி முதலிய எட்டுத் தலைப்புக்களில் பாடல்கள் உள்ளன; viii. 880/1919/IV.

Q2

சிவப்பிரகாச தேசிக சுவாமிகள்

468. i. தெய்வீக லிங்க தெரிசனார்த்த மாலை: முதற் பதிப்பு; ii. நா.மு. செங்கழநி பிள்ளை, சென்னை; ஜெய விநாயக சிவப்பிரகாச அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1919; iv. உ.ப. 8; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii. கடவுள் பக்தரான மறைந்த திரு. பி.எஸ்.பி. முருகேச உபாத்தியாயர் போல் தீப தரிசனத்தன்று பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டதாகும் இந்நூல். அவருடைய வாழ்க்கை வரலாறும் இதன்கண் தெளிவுறக் கூறப்பட்டிருக்கின்றது; viii. 932/1919/IV.

Q2

திருக்காமணிப் பிள்ளை, ச. பெ.

469. i. சாங்குசித்த சிவலிங்க நாயனாரின ஆசாரிய ஸ்தௌத்யம்: முதற் பதிப்பு; ii. ச.பெ. திருக்காமணிப் பிள்ளை, சென்னை: ஸ்ரீஜெய விநாயக சிவப்ரகாச அச்சுக்கூடம், சென்னை; iii; ஜூன், 1920; iv. செ.மூ.ப. 16; v. 22×14 செ.மீ.; vi. 0–1–0; vii. தென்திருப்பதியாகிய சீர்காழியில் திருஞானசம்பந்த சுவாமிகளின் மரபிலெழுந்த கண்ணுடைய வள்ளலார் சுவாமிகளின் அருள் பெற்ற சாங்கு சித்த சிவலிங்க நாயனாரைப் பற்றி இதில கூறப்பட்டுளளது. இந்நூலாசிரியராகிய திரு ச.பெ. திருக்காமணிப் பிள்ளையென்று வழங்கும் திரு. சிவயோகானந்த தேசிகர் அவர்களின் திருவுருவப் படத்துடன் கூடியது; viii. 381/1920/III.

Q2

470. i. **தேவாரநகரம் ஸ்ரீவிலக்ஷணானந்தர் ஸதோத்திரப் பாக்கள்** ; வித்தியா சந்தானம் அச்சுக்கூடம், பாலக்காடு ; iii. 1917 ; iv. செ.மூ.எ; 30 ; v. 14×11 செ.மீ.; vi.........; vii. தேவாரம் என்னும் நகரில் வந்த குருவாகிய விலக்ஷணானந்தர் என்பார் பேரில் பாடப்பெற்ற தோத்திரப் பாடல்கள் கொண்ட சிறு தொகுதி. கொல்லங்கோடு மு. பழனிமலை முதலியார், சிவகங்கை டி. சிங்கத்துரைத் தேவர் முதலியோர் பலர் இவரைப் புகழ்ந்து பாடியுள்ளனர்; viii. 209/1917/III.

Q2

**நாகமுத்துப் பிள்ளை, வா. அ.**

471. i. **ஞான சிவாச்சாரிய சுவாமிகள் பேரில் நவரத்னப் பாசுரக் கீர்த்தனம்: முதற் பதிப்பு** ; ii. சி. நடேசப் பிள்ளை, பாலக்காடு, விக்டோரியா பிரஸ், பாலக்காடு; iii. 1916 ; iv. செ.மூ.ப. 19; v. 21×14 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. பேரூர் மேலை மடம் ஞானம் சிவாச்சாரிய சுவாமிகளின் பேரில் பாடப்பட்ட பக்திப் பாமாலை. ஆசிரிய விருத்தத்தாலாகிய பதிகம் ஒன்றும், வேறு சந்த விருத்தங்களும் ஈற்றில் கீர்த்தனைப் பாடல்கள் சிலவும் உள்ளன. வடக்கன் பரவூர் பழனியாண்டிப் பிள்ளை என்பார் இந்நூலுக்குச் சாற்றுக்கவி பாடியுள்ளார்; viii. 1/1916/III.

Q2

**பாலாம்பாளம்மையார், பூவிருந்தவல்லி**

472. i. **ஸ்ரீசற்குரு சிவாஷ்டோத்திரம், ஸ்ரீ ஆத்ம ராமஷ்டோத்திரம்: முதற் பதிப்பு** ; ii. பாலாம்பாளம்மையார், பூவிருந்தவல்லி ; ஆனந்த போதினி அச்சியந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1919 ; iv. செ.மூ.ப. 15; v. 14×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. சிவப்பிரகாச குருவினைச் சிறப்பித்துப் போற்றி எழுதப் பெற்ற துதிப்பாடல்கள் உள்ளன. இக்குரு வியாசர்பாடியில் வாழ்ந்தவர். "சீருறும் வியாசர்பாடியில் வாழும் சிறப்புறும் சிவப்பிரகாச சிவ" என்று தொடங்கி இவர் தம் பெருமைகளைப் பேசுகின்றார் கவிஞர். இதோடு பொதிகை மலை வாசியான குருநாராயணர் என்பவரைக் குறித்த துதியும் உளது; viii. 141/1919/II.

Q2

**பூலூரு செட்டியார், அருப்புக்கோட்டை**

i. குருநாதன் திருவடிமாலை (தொ.எ. 527 பார்க்க); ii. பூலூரு செட்டியார், அருப்புக்கோட்டை ; மனோன்மணி விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை ; iii. செப்டம்பர், 1920 ; iv. செ.மூ.ப. 6 ; v ; vi..; vii. ஆசிரியர் தமது குருவின் திருவடிகளைக் குறித்துப் புகழ்ந்து பாடிய துதி நூல்; viii. 879/1920/III.

Q2.

மதுராம்பாள் அம்மாள், வரகவி

473. i ஸரஸ்வதி சுவாமிகள் ஸ்தோத்திரக் கீர்த்தனங்கள் : முதற் பதிப்பு ; ii. வி. இரகுநாத சாஸ்திரி, திருக்கோயிலூர் ; புஷ்பாலாலயாம்பா விலாச அச்சுக் கூடம், திருக்கோவலூர் ; iii. அக்டோபர், 1920 ; iv. செ.மூ.ப. 28 ; v. 22×15 செ.மீ ; vi இலவசம் ; vii. ஸரஸ்வதி சுவாமிகளின் வாழ்க்கை வரலாறும் அவரைப்பற்றிப் புகழ்ந்து பாடப் பெற்ற தோத்திரக் கீர்த்தனங்களும் இந்நூலில் உள்ளன. தேவ பாண்டலம் கிராம முன்சீப், சௌந்திரவல்லிபாளையம் திரு. முத்துகிருஷ்ணநாயுடு, மேற்படி யூர் செங்குந்த வம்ச திலகன் சாமிநாத முதலியார் குமாரர் பழனி முதலியார், கள்ளக்குறிச்சித் தாலூக்கா குணையூர் வித்வான் சின்னச்சாமி அய்யர் ஆகியோர் இந் நூலுக்குச் சாத்துக் கவிகள் தந்துள்ளனர்; viii. 458/1920/IV.

Q2

விலக்ஷணானந்த ஸ்வாமிகள்.

474. i. பிரமானந்த குரு பூஜா ஸ்தோத்திரம் : முதற் பதிப்பு ; ii. வித்தியா சந்தானம் அச்சுக்கூடம், பாலக்காடு; iii. டிசம்பர், 1917 ; iv. செ.மூ.எ. 20 ; v. 12×11 செ. மீ.; vi.......; vii. இறைவணக்க முறை இதில் கூறப்பட்டுள்ளது. பிரம்மானந்த குரு என்பாரின் புகழைக் கூறித் துதிக்கும் பாடல்களைக் கொண்டது. viii. 900/1917/IV.

Q2

வேதநாயக சுவாமி, எம்.

i. அப்பரானந்தர் தோத்திரப் பாமாலை (தொ. எ. 1185 பார்க்க) ii. எம். வேதநாயக சுவாமி, சிந்துபூந்துறை ; பெண்ட்லெண்ட் பிரஸ், திருநெல்வேலிப் பாலம் ; iii. மார்ச், 1917 ; iv. செ மூ. எ. 32 ; v....; vi....; vii. நெட்டூரைச் சேர்ந்த அப்பரானந்த சுவாமிகளின் சிறப்பைப் பற்றிய பாடல்களைக் கொண்டது. அவரின் சரித்திரச் சுருக்கம் முதலில் தரப்பெற்றிருக்கிறது. viii. 1179/1917/I.

Q2

## 294.535 தலபுராணம்

அண்ணுசாமிப் பிள்ளை, சி. சிதம்பரம் (மொ. து.)

475. i. சிதம்பர மகாத்தியம் : திருந்திய இரண்டாம் பதிப்ப ii. வே. சுந்தரம் பிள்ளை, சிதம்பரம் ; நற்றமிழ் விளக் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. டிசம்பர், 1917 ; iv. உ.ப 91 ; v. 21×14 செ.மீ.; vii. 0-8-0 ; vii. இது சைவ புண்ணியத்தலமான தில்லை என்று அழைக்கப்படுகின்ற சிதம்பரத் தின் புனிதச் சிறப்பு வடமொழியில் உள்ளவாறு தமிழில்

மொழி பெயர்க்கப்பட்டு இருபத்நாறு அத்தியாயங்களாக எழுதப் பட்டுள்ளது. பதஞ்சலி, வியாக்கிரபாதர் முதலிய பெரியோர்கள் இறைவனுடைய திரு நடங்கண்டு தொண்டு செய்த வரலாறுகள் முதலியவற்றை விவரித்துக் கூறுகிறது; viii. 1047/1918/III.

Q2 : 38

அம்பலவாணக் கவிராயர், சீர்காழி

476. i. சிவமலைப் புராணம் : முதற் பதிப்பு ; ii. தி. அ. முத்துச் சாமிக் கோனார்; விவேக திவாகரன அச்சுக்கூடம், திருச்செங்கோடு; iii. ஜூன், 1918 ; iv. உ.ப.+செ.மூ.ப. 101 ; v. 21×14 செ.மீ.; vi. 1–4–0 ; vii. முருகப் பெருமான் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள சிவமலைப் புராணம் அம்பலவாணக் கவிராயர் அவர்களால் 14 சருக்கங்களையும், 497 பாடல்களையும் உடையதாகப் பாடப்பட்டுள்ளது. இது பழையகோட்டைப் பட்டக்காரர் திரு. ராவ்பகதூர் உத்தமக்காமிண்ட நல்லதம்பி சர்க் கரை மன்றாடியார் அவர்கள் விருப்பத்தின்படி திரு. தி.அ. முத்து சாமிக்கோனார் அவர்களால் பரிசோதித்து மேற்படி புராண வசனச் சுருக்கமும் எழுதிச் சேர்த்து, அச்சிடப் பட்டதாகத் தெரிகிறது. தல புராணத்திற்கு வேண்டிய அனைத்தும் இதன்கண் பொருந்தி அழகு செய்கின்றன. சிவமலைக்கருகில் அமைந்து அணி செய்வது பட்டாலியூர். அதன் பெருமை பற்றி அருணகிரிநாதர் தம் திருப்புகழிற் கூறியுள்ளார். இத்தலம் பற்றிய திருப்புகழும், நூலாசிரியர் வரலாறும் இதன்கண் அமைந்துள்ளன. இவ்வாசிரியர் சீகாழி அருணாசலக் கவிராயரின் புத்திரராவர். viii. 553/1918/IV.

Q2 : 38

ஆறுமுகஞ் சேர்வை, வீ., செம்பூர்

477. i. அருணாசல புராண வசனம் : முதற் பதிப்பு ; ii. எஸ். சிவசங்கர செட்டி, சென்னை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 212 ; v. 21×14 செ.மீ.; vi. 1–0–0 ; vii. திருவண்ணாமலையில் உள்ள சிவன் கோயி லின் பழமையான வரலாற்றை விளக்கும் கதைகள் அடங்கிய அருணாசல புராணத்தின் உரைநடை. இதற்கு மூலமாக அமைந் தவை எல்லப்ப நாவலர் ஆக்கிய செய்யுட் புராணமும், அதற்கு மழவை மகாலிங்கையர் எழுதிய பொழிப்புரையுமாகும் யாவரும் படிக்கத்தக்க எளிய நடை கொண்டது. viii. 1010/1916/IV.

Q2 : 38

காளியண்ணப் புலவர்

478. i. பூந்துறைப் புராணம் : முதற் பதிப்பு ; ii. தி. அ. முத்து சாமிக் கோனார், திருச்செங்கோடு ; விவேக திவாகரன் அச்சுக்

கூடம், திருச்செங்கோடு ; iii. நவம்பர், 1917 ; iv. உ.ப. 60; v. 20×15 செ.மீ.; vi. 0-4-0 ; vii. கொங்குமண்டலம் 24 நாட்டிற்கும் தலைமை பெற்ற பூந்துறை நாட்டின் மேல்கரை 32 கிராமங்களுக்கும் முதன்மையான ஊராகிய பூந்துறையின் சிறப்புப் பற்றி இந்நூல் விளக்குகிறது. நூலாசிரியர் வரலாறு முதலில் தரப்பட்டுள்ளது. இப்புராணம் மற்றைய தல புராணங் களைப் போலவே தெய்வீக மகிமைகளைச் சொல்வதோடு கொங்கு மண்டலத்தையும் அதில் குடியேறிய வேட்டுவர், வேளாளர் களுடைய சரித்திரத்தையும் கூறுகிறது; viii. 62/1918/I.

Q2 : 38

**குப்புசாமி நாயுடு, த., மதுரை**

479. i. சதுரகிரி மான்யம் : முதற் பதிப்பு ; ii. இ. ராம. குருசாமிக் கோனார், மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாச பிரஸ், மதுரை ; iii. செப்டம்பர், 1920 ; iv. செ.மூ.எ. 32 ; v. 13×11 செ.மீ.; vi. 0-0-6 ; vii. சிவபெருமான் வீற்றிருக்கின்ற சதுரகிரி மலையின் பெருமையினை இந்நூல் விளக்குகின்றது; viii. 22/1920/IV.

Q2 : 38

**குமாரசாமி குருக்களையா, சிவ. சு.**

i. சிதம்பர க்ஷேத்திர மகாத்மியம் (தொ. எ. 1404 பார்க்க) ii. சிவ. சு. குமாரசுவாமிக் குருக்களையா ; சைவப் பிரகாச அச்சியந்திர சாலை, தூத்துக்குடி ; iii. 1916 ; iv. செ.மூ.எ. 50; v... ; vi ; vii. சிவத்தலமாகிய சிதம்பரத்தின் பெருமையை விளக்குவது;விருத்தப் பாவினால் ஆகியது. நடராசப் பெருமானது அருட் செயல்களை விளக்குகிறது; viii. 44/1916/II.

Q2 : 38

**குமாரசாமி பண்டிதர், ஆ. க., திருப்பத்தூர்**

480. i. குடியேற்றநல்லூர் புராணம் : முதற் பதிப்பு; ii. ஆ. க குமாரசாமி பண்டிதர், திருப்பத்தூர் ; நேஷனல் அச்சுக் கூடம், திருப்பத்தூர்; iii. 1915 ; iv. செ.மூ.எ. 614; v. 21×14 செ.மீ. vi...... ..; vii. தென்னிந்தியாவில் குடியேற்றநல்லூர் என்னும் சிவ தலத்தின் முக்கியத்துவத்தை இந்நூல் விளக்கு கிறது. இது வடமொழி நூலினின்றும் தமிழில் மொழி பெயர்த்துத் தரப்பட்டுள்ளது. அங்கங்கே குறிப்புகளும் தரப் பட்டுள்ளன. அவ்வூர்க் கல்வெட்டில் கண்ட செய்திகளையும் புராணத்துள் தெரிவித்துள்ளார். இந் நூலாசிரியரின் ஆசிரியர் சச்சியானவந்த வள்ளலார் ஆதீனம் சிவசங்கர தேசிகர் இந் நூற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார்; viii. 353/1916/III.

Q2 : 38

**குமாரசுவாமி முதலியார், பழூர்**

481. i. திருத்தவத்துறைப் புராணம்: முதற் பதிப்பு; ii ஆ. சுப்பிரமணிய முதலியார், திருச்சி; வெட்னஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii செப்டம்பர், 1918; iv. செ.மூ.ப. 128; v. 21×14 செ.மீ.; vi ......; vii. இதில் சைவர்களுடைய புண்ணியத் தலமான திருத்தவத் துறை என்ற இடத்தின் வரலாறு தெளிவாகப் பாடப்பட்டுள் ளது; பதினெட்டுச் சருக்கங்களையும் எழுநூற்று அறுபத்தெட்டு செய்யுட்களையும் உடையது. இப்புத்தகம் திருத்தவத்துறை என்பது லால்குடி என வழங்கும் ஊராகும். லால்குடி அற நிலைய மேலாளர் கந்தசுவாமி அய்யர் பேருதவியால் இந் நூல் வெளியிடப்பட்டதாகத் தெரிகிறது. இனிய எளிய நடையில் அமைந்துள்ளது. viii. 157/1918/IV.

Q2: 38

**சதாசிவப் பண்டாரத்தார், தி. வை., கும்பகோணம்**

482. i. திருக்கோவலூர்ப் புராண வசனம்: முதற் பதிப்பு ii. அ. பாலசுப்பிரமணிய பிள்ளை, கும்பகோணம்; அலெக் ஸாண்டரா பிரஸ், கும்பகோணம்; iii. அக்டோபர், 1918; iv. உ.ப. 55; v. 21×14 செ.மீ.; vi. 0–10–0; vii. தென் ஆற்காடு மாவட்டத்தில் உள்ள திருக்கோயி லூரைப் பற்றிய தல வரலாறு இந்நூலில் அடங்கியுள்ளது. பார்க்கவ குலத்தாராகிய நந்த மன்னர், மலைய மன்னர், சுருதி மன்னர்களின் பூர்வ வரலாற்றையும் இந்நூலில் காணலாம். 'தெய்வீக ராஜபுராணம்' என்றும் இதற்கு ஒரு பெயர் உண்டு. viii. 383/1918/IV.

Q2: 38

**சுப்பிரமணிய ஐயர், தஞ்சாவூர் (தொ.து.)**

483. i. லவணபுரம் என்னும் உப்பூர்ப் புராண வசனம், ii. மீனாட்சி சுந்தரம் அய்யர், தேவகோட்டை; எஸ்டேட் பிரஸ், தேவகோட்டை; iii. அக்டோபர், 1918; iv. உ.ப. 48; v. 21+14 செ.மீ.; vi..... ..; vii. இஃது உப்பூரில் கோயில் கொண்டுள்ள வெயிலுகந்த விநாயகர் மீது புகழ்ந்து எழுதப் பெற்ற வசன நூல். தேவகோட்டை ஜமீன்தார் திரு. அருணாசலஞ் செட்டியார் அனுமதியால் தஞ்சாவூர் திரு. சதாவதானம் சுப்பிரமணிய அய்யர் இயற்றிய புராணச் செய்யுளுக்கிணங்க உரைநடையில் பெயர்த்தெழுதப்பட்டதாகத் தெரிய வருகின்றது. viii. 368/1918/III.

Q2: 38

**சுவாமிநாத தேசிகர், மு. (மொ.து.)**

484. i. குங்கும வன ஸ்தல புராண வசனம்: முதற் பதிப்பு; தியாகராச முதலியார் & இராமசாமி முதலியார், மஞ்சக்

கொல்லை ; ஸ்காட்டிஷ்பிராஞ்ச் பிரஸ், நாகை ; iii. ஜுன், 1917 ; iv. உ.ப. 20 ; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0 ; vii. இது வடமொழியினின்று தமிழாக்கம் செய்யப்பெற்றது. 'மஞ்சட் கொல்லை' என வழங்கும் குங்குமவனத்தினைப் பற்றிக் கூறும் தல புராணம். கருந்திட்டைக்குடி வி. சாமிநாத பிள்ளையவர்கள் இயற்றிய சிறப்புப் பாயிரம் இதில் உள்ளது; viii. 184/1917/III.

Q2 : 38

சொக்கலிங்கச் செட்டியார், ராம. சொ.

485. i. பெருந்தோட்டத்து அத்தீச்ர புராணம் : முதற் பதிப்பு ; ii. ராம. உ. ராமசாமி செட்டி, காரைக்குடி ; ஞானம்பிகா பிரிண்டிங் வொர்க்ஸ், காரைக்குடி, iii. செப்டம்பர், 1917, iv. செ.மூ.எ. 791 ; v. 21×14 செ.மீ.; vi. இலவசம் ; vii. சைவ யாத்திரீகத் தலமான பெருந்தோட்டத்து அத்தீச்சுர மென்னும் சிவதலத்தைப் பற்றிப் பாடப்பட்ட புராண பாடல் களைக் கொண்டது. இந்தத் தலம் திருவெண்காட்டிற்கு அண் மையில் உள்ளது. தேவக்கோட்டை வெ. ஆதி. மா. சிதம்பரச் செட்டியார் அவர்கள் தந்த சிறப்புப் பாயிரத்துடன் கூடியது; viii. 887/1918/II.

Q2 : 38

சொக்கலிங்க தேசிகர், எம்., பண்டாரவாடை

486. i. நீடான்மங்கலம் ஸ்ரீ கந்தர் கைங்கரிய விளக்கம் ; ii. சண்முகஞ் செட்டியார் : ஸ்ரீ கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. 1917 ; iv. செ.மூ.எ. 40; v. 14×11 செ.மீ.; vi... ....; vii. நீடான்மங்கலத் தலத்தின் தெய்விக வரலாறு உரைப்பது. இங்கே கந்தப் பெருமானுக்கு ஆலயம் அமைத்தது பற்றிய வரலாற்றுச் செய்திகள் விவரிக்கப் பட்டுள்ளன. பாடல்களிலும் வரலாற்றுக் குறிப்புகள் தெரிய வருகின்றன; viii. 748/1917/III.

Q2 : 38

சோமசுந்தர உடையார், வே., கடகம்

487. i. திருவீழிமிழலைத் தலபுராணம் : முதற் பதிப்பு ; ii. வே. சோமசுந்தர உடையார், கடகம் : லெக்ஷ்மி விலாஸ பிரஸ், கும்பகோணம் ; iii. 1916 ; iv. உ.ப. 26 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. திருவாவடுதுறை மகா வாதீனத்தைச் சேர்ந்த திருவீழிமிழலை என்னும் தலத்தின் சமயச் சிறப்பைக் குறித்து வசன நடையில் எழுதப்பட்டுள்ள நூல். இதில் தவஞ்சேர் படலம் என்னும் பகுதி மட்டும் உள்ளது; viii. 586/1916/III.

Q2 : 38

தியாகராய சாஸ்திரியார், பரூர்

488. i. வேங்கடேச மஹத்துவம்: முதற் பதிப்பு; ii. வ. செங்கையா செட்டி, திருப்பதி; ஸ்ரீ வெங்கடேச நிலைய முத்திராக்ஷரசாலை, திருப்பதி: iii. மார்ச், 1918; iv. உ.ப. 24; v. 22×14 செ.மீ.; vi. 0–2–0; vii. இந்நூலில் திருப்பதி மலையின்கண் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ வேங்கிடாசலபதியைப் பற்றியும், திருப்பதிமலையினைப் பற்றியும், தீர்த்தங்களைப் பற்றியும் விவரமாக விளக்கப்பட்டுள்ளன. இறுதியில் திருவேங்கடத்தில் பிரசித்தமாய் இருக்கும் தீர்த்தங்களின் விவரமும் சுவாமி புஷ்கரணியிலுள்ள ஒன்பது தீர்த்தங்களின் விவரமுந் தரப்பட்டுள்ளன; viii. 202/1918/II.

Q2: 38

489. i. திராவிட வேதத்திரட்டும் ஸ்தல மாண்மியச் சுருக்கமும்: திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. சதாசிவ செட்டியார், கயப்பாக்கம்: சிவரஹஸ்ய முத்ராலயம், சென்னை; iii. ஏப்ரல், 1917; iv. செ.மூ.ப. 549; v. 22×13 செ.மீ.; vi. 1–8–0; vii. இத்திரட்டில் ஒவ்வொரு பதிகங்களிலும் பெரும்பாலும் முதல் இரண்டாது இறுதித் திருப்பாட்டுகளையும், சிலவிடங்களில் தல மகிமை முதலியவற்றை விளக்கும் மற்றைய திருப்பாட்டுகளையும் சேர்த்து 274 தலங்கட்கும் மூவர் தேவாரப் பதிகங்களும் மற்றையவைந்தும் திரு முறைகளில் பெரும்பான்மையும் பலர் கூடி வழக்கமாக ஓதுக்கப்பட்டு வரும் திருப்பாட்டுகளும் சேர்க்கப்பட்டு சுமார் 3,000 திருப்பாடல்கள் அமைந்துள்ளன. இது சிவதல வரலாறு உரைக்கும் தொகுதியாகும்; viii. 414/1917/II.

Q2: 38

திருநாவுக்கரசு முதலியார்

490. i. திருப்போரூர்ப் பிரணவ சைலமாலை; முதற் பதிப்பு: ii. பொன்னுவேலு கிராமணியார், சென்னை: பென்ரோஸ் அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜூலை, 1917; iv. செ.மூ.எ. 3+100+1+1+20+5; v. 17×13 செ.மீ.; vi. இலவசம்; vii. திருப்போரூரில் விளங்கும் சுப்ரமணிய சுவாமி பேரில் பாடப்பெற்ற பக்திப் பாடல்கள் இவை. தியாக கைலாச நாதரிடம் அமர் பாலாம்பிகையம்மை மீது பாடப்பெற்ற பதிற்றந்தாதிப் பாடலும் உண்டு; viii. 347/1917/III.

Q2: 38

491. i. திருப்பதி வெங்கடாசலபதி க்ஷேத்திர ஸ்தல புராண மாஹாத்மிய வைபவம்: முதற் பதிப்பு; ii. கே. தேசிகாசாரியார், திருச்சானூர்: ஸ்ரீ வெங்கடேஸ்வர நிலைய முத்திராக்ஷரசாலை, திருப்பதி; iii. நவம்பர், 1917; iv. உ.ப. 24; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0; vii. திருப்பதி வெங்கடா

சபைதிக் கடவுளைப் பற்றியும், திருப்பதித் தலச் சிறப்பினைப் பற்றியும் விவரிக்கப்பட்டுள்ளன. இத்தலத்து நடைபெறும் திரு விழாக்களைப் பற்றியும் விவரிக்கப்பட்டிருக்கிறது. திருச்சானூர் அலர்மேலு மங்கையம்மன் பிரம்மவுத்ஸவக்கும்மி, வெங்கிடேஸ் வர சிங்காரக் கும்மி என இரண்டு கும்மிப்பாடல்களும் நூலி றுதியில் உள; viii. 932/1917/IV.

Q2: 38

492. i. திருவேங்கடஸ்தல புராண வைபவம்: முதற் பதிப்பு; ii. எஸ்.ஆர்.என். பிரஸ், திருப்பதி; iii. செப்டம்பர், 1920; iv. உ.ப. 8; v........; vi. 0–1–0; vii. திருப்பதி திருவேங்கட மலையின் ஸ்தலபுராண வரலாறு இந்நூலில் அடங்கியுள்ளது; viii. 13/1920/IV.

Q2:38

துரைசாமி பிள்ளை, கொ., திருவொற்றியூர்

493. i. திருத்தணிகைத் தல மான்மியமும் பாமாலையும்: திருந் திய இரண்டாம் பதிப்பு; ii. கே. செல்வரங்கம் அண்டு கோ., சென்னை. மநோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூலை, 1920; iv. செ.மூ.ப. 8; v. 22×14 செ.மீ.; vi. 0–1–0; vii. திருத்தணிகைமலையின் சிறப்பும், மஹத்துவ மும் இதில் கூறப்பட்டுள்ளன. மேற்படி தலத்தைப் பற்றிய பாமாலையொன்றும் இதன்கண் உண்டு; viii. 36/1920/III.

Q2: 38

பட்டாபிராம முதலியார், கொ., மயிலை

494. i. விஷ்ணு ஸ்தல மஞ்சரி; ii. கொ. பட்டாபிராம முதலியார், மயிலை, சென்னை; கிச்சினர் அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ. ப. 112; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. இந்தியாவிலுள்ள வைஷ்ணவ யாத்திரிகத் தலங்களைப் பற்றியவை. யாத்திரிகர்களுக்கென எழுதப்பட்டுள்ளது. ஒவ்வொரு தலத்தின் பிரபாவமும், மார்க்கமும், வசதிகளும் இதில் விளக்கப்பட்டுள்ளன. நூற்றெட்டுத் திருப்பதிகளின் மங்களாசாசன பாசுரத் திரட்டும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது; viii. 964/1916/I.

Q2: 38

முத்துவிஜயம் பிள்ளை, இராமேஸ்வரம் (மொ. து.)

495. i. சேது புராண வசனம்: மூன்றும் பதிப்பு; ii. கொ. செல்வ ரங்கம் அண்டு கோ., சென்னை: மனோன்மணி விலாச அச்சுக் கூடம், சென்னை; iii. 1920; iv. உ. ப. 360; v. 23×14 செ.மீ.; vi. 2–0–0; vii. திருவிராமீச்சரத்தின் பெருமை பற்றி நிரம்ப வழங்கிய தேசிகராற் செய்யப்பட்ட தல புராணத்தின்

உரைநடையாக்கமே இந்நூல். சருக்கங்களின் அகராதி, தீர்த்தங்களின் பெயர்ப் பட்டியல், திருவிராமீச்சரத் தேவாரப் பதிகங்கள், திருப்புகழ், தாயுமான சுவாமிகள் பாடிய மலைவளர் காதலி பதிகம் முதலியன இதன்கண் அடங்கியுள்ளன. திருவிராமேச்சர தல மான்மியச் சுருக்கமும், படவிளக்கங்களும் உண்டு; viii. 264/1920/I.

Q2 : 38

**வயித்தியலிங்க செட்டியார், நா.**

496. i. திருக்காஞ்சி ஸ்தல புராணம்: முதற் பாகம் ; ii. ஸ்ரீராமுலு செட்டி, சென்னை ; டைமெண்ட் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1920 ; iv. உ.ப. 71 ; v. 22×14 செ.மீ.; vi. ......; vii. திருக்காஞ்சியின் தல வரலாறு இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது; viii. 500/1920/IV.

Q2 : 38

**வேங்கடேச சாஸ்திரிகள் (மொ. து.)**

497. i. புவனகிரி புராண வசனம் : முதற் பதிப்பு ; ii. பு. வெ. சுப்பராய முதலியார், சென்னை ; சைவவித்தியாநுபாலன யந்திரசாலை, சென்னை ; iii. 1916 ; iv. உ.ப. 87 ; v. 14×11 செ.மீ.; vi..... ; vii. தென்ஆற்காடு ஜில்லா புவனகிரி என்னும் சிவதலத்தின் மகிமையை விளக்குவது. வடமொழிப் புராணத்தினின்று ஸ்ரீவேங்கடேச சாஸ்திரிகள் இதனை மொழி பெயர்த்துள்ளார்; viii. 668/1916/III.

Q2 : 38

**ஸ்ரீரங்கப்பிரகாஸ சுவாமிகள்**

498. i. திருப்பதி வெங்கடாசல ஸ்தல புராண மஹாத்துவம் : முதற் பதிப்பு ; ii. கே. சுந்தராச்சாரீ பிரதர்ஸ் : ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1915 ; iv. உ.ப. 32 ; v. 21×14 செ. மீ.; vi. 0–2–0 ; vii. திருப்பதிமலையின் புகழையும் புனிதத் தன்மையைப் பற்றியும் பெருமையாக இந்நூலில் எழுதப்பட்டுள்ளது. திருமால் வராக அவதாரம் எடுத்துத் திருப்பதியில் வந்து நின்றது ; கிரீடாசலத்தைக் கொண்டு வந்தது ; மலை தீர்த்தப் பிரபாவங்கள் ; பத்மாவதி விவாகம், அலர்மேலுமங்காபுரம் என்னும் திருச்சானூர் மஹாத்துவம், மஹந்து சரித்திரம் முதலியன இதன்கண் விளக்கப்பட்டுள்ளன; viii. 452/1916/IV.

Q2 : 38

499. i. ஸ்ரீரங்க மஹாத்மியம் : முதற் பதிப்பு ; ii. கோ. செல்லப்ப முதலியார், சென்னை ; ஜீவகாருண்ய விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1916 ; iv. உ. ப. 104 ; v. 15×13

செ.மீ.; vi. 0–5–0; vii. சீரங்கம் என்னும் தலத்தின் சிறப்பினையும் பெருமையையும் விளக்கும் நூல். பள்ளிகொண்ட அரங்கநாதன் பெருமையும், அந்தத் திருத்தலத்தின் மேன்மையும் ஆங்குள்ள தீர்த்தங்களின் மகிமைகளும் தொகுத்து விளக்கப்பட்டுள்ளன. 10 அத்தியாயங்களில் இத் தலப் பெருமையைப் புராண சரித்திரம் முதலியவற்றால் ஆசிரியர் விவரித்துள்ளார்; viii. 1022/1917/I.

Q2 : 38

## 294·536 விழாக்கள்

**சிதம்பர பிள்ளை, சித. நா., சென்னை**

500. i. மஹாமஹ தீர்த்த மாட்சிமை : திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. சித. நா. சிதம்பர பிள்ளை ; தமிழ்ச்சங்க அச்சியந்திரசாலை; மதுரை ; iii. அக்டோபர், 1920 ; iv. உ.ப. 16 ; v. 21×13 செ.மீ.; vi. 0–3–0 ; vii. குடந்தையில் பன்னிரண்டாண்டிற் கொருதடவை நடைபெறும் மகாமக மாட்சிமை பற்றி விளக்கும் புத்தகமாகும் இது; viii. 422/1920/IV.

Q2 : 457

**தெண்டபாணிக் குருக்கள், ஆ. சு., சம்போமஹாதேவி**

501. i. சம்போமஹாதேவி ஆருத்ரா தீர்த்த மஹோத்ஸவ சோபனப் பாடல் ; ii. ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகை ; iii. 1919 ; iv. செ.மூ. எ. 11 ; v. 15×11 செ. மீ.; vi. ........ ; vii. இதில் ஸ்ரீமத் பிரகந் நாயகி ஸமேத ஸ்ரீகைலாசநாத சிவ பெருமான் ஆருத்திரா தரிசனமருளிய சோபனப் பாடல்கள் அடங்கியுள்ளன. நாகப்பட்டினம் தாலூகாவில் செம்பியமாதை என வழங்கும் ஊரே சம்போமாதேவியாகும். ஆருத்ரோத்ஸவ கைங்கர்ய வரலாறும் முதற்கண் தரப்பட்டிருக்கிறது; viii. 238/1920/I.

Q2 : 457

502. i. பஞ்சம சகாப்த ப்ரதீபநம் ; ii. நா. பெ. ந. முத்து ராமய்யா ; கண்டனூர் ; சச்சிதாநந்த பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1919 ; iv. உ.ப.+செ.மூ.ப. 7 ; v. 21×14 செ.மீ.; vi. இலவசம் ; vii. கோவிலூர் மடாலயம் முத்திராமலிங்க ஞான தேசிகராதீனத்து அண்ணாமலை ஞான தேசிக சுவாமிகள் அவர்கள் நிறுவிய பிரம்ம வித்தியா பிரசாரண சபையின் ஐந்தாவது ஆண்டு விழாவினைப் பற்றிச் சிறப்பித்துப் பாடிய பாடல்களைத் தொகுத்து வெளியிடப்பெற்ற சிறு வெளியீடு; viii. 159/1919/II.

Q2 : 457

**வெங்கடராயர், எஸ். டி., சேலம்**

503. i. கோகுலாஷ்டமி : முதற் பதிப்பு ; ii. நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி ; iii. நவம்பர், 1919 ; iv. செ.மூ.ப. 36;

v. 20×14 செ. மீ.; vi. இலவசம்; vii. கண்ணன் பிறந்த நாளில் நெல்லையில் கொண்டாடப்படுகின்ற திருவிழாவினைப் பற்றி விளக்கும் பாடல்களும் சில விளக்கவுரைகளும் இந்நூலில் உள்ளன. பல்வேறு வகையான வர்ணமெட்டுகளில் அமைந்த பாடல்கள் இதன்கண் உள. இது கொல்லம் 1095–ம் ஆண்டு ஸித்தார்த்தி வருஷம் ஆவணி மாதத்தில் நிகழ்ந்த கோகுலாஷ்டமி ஆகிய ஜெனனோத்ஸவச் சிறப்பினை விளக்குவதாகும். திருநெல்வேலி திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் மடாலய அதிபதி பா. சிதம்பரநாத பிள்ளை இதற்குச் சாற்றுக் கவி பாடியுள்ளார். இவ்வாசிரியர் இதுபோன்ற பல இசைப் பாடல் நூல்களையும் "பராக்கிரம கேசரி" என்னும் ஒரு நாவலையும் எழுதியுள்ளார் என்று தெரிய வருகிறது; viii. 827/1919/IV.

Q2: 457

504. i. நவராத்திரி உச்சவ மாலை: முதற் பதிப்பு; ii. பு. ரா. அப்பாவைய பாதிரி, சேற்றூர்; ஸ்ரீராமாநுஜம் பிரஸ்; தென்காசி; iii. நவம்பர், 1917; iv. செ. மூ. ப. 21; v. 18×11 செ.மீ.; vi. 0–2–0; vii. இது திருக்குற்றாலத்தில் எழுந்தருளியிருக்கும் பரமஹம்ச பரிவ்ராஜகாசார்ய மௌனானந்த குரு சுவாமிகள் மடத்தில் நடந்த நவராத்திரி விழாவைப் பற்றிய நூல். தென்காசி ச. மாடசாமிப் பண்டாரம் இயற்றிய சாற்றிக் கவி இதில் உள்ளது. விருத்தப் பாடல்களும், கீர்த்தனைகளும் கலந்து வந்துள்ளன. சேற்றூர் சிங்கம்பட்டி சமத்தானம் திராவிட வித்துவான் பு. வி. அப்பாவைய பாரதி, தென்காசி சாமிசந்நிதித் தெரு மாடசாமிப் பண்டாரம் இருவரும் இதற்குச் சாற்றுக்கவிகள் பாடியுள்ளனர்; viii. 868/1917/IV.

Q2: 457

## 294·538 விரதங்கள்

### அரங்கசாமி நாயுடு, தி., காஞ்சிபுரம்

505. i. கேதாரேஸ்வர விரத மகிமை: முதற் பதிப்பு; ii. எஸ். துரைசாமி முதலியார், கீழ்க்கட்டளை; ஸ்ரீபாரதி அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர், 1920; iv. உ.ப. 32; v. 14×11 செ.மீ.; vi. 0–2–0; vii. முப்பத்திரண்டு பாடல்களும் அதற்குரிய விளக்கவுரைகளும் இந்நூலில் உள்ளன; viii. 27/1920/IV.

Q2: 433

### கிருஷ்ணசாமி முதலி, எஸ்., சென்னை

506. i. பதினாறு சோம வார விரதத்தின் வரலாறும் மகத்துவமும்: முதற் பதிப்பு; ii. எஸ். கிருஷ்ணசாமி முதலி, சென்னை; ஸ்ரீ நிகேதனம் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1919;

iv. உ.ப. 13; v. 14×11 செ.மீ.; vi. இலவசம்; vii. பதிறுறு சோம வார விரதத்தின் வரலாறும் மகத்துவமும் இந்நூலில் தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. viii. 934/1919/IV.

Q2: 433

**சிவப்பிரகாச தேசிக சுவாமிகள்.**

507. i. மஹாசிவராத்திரி மஹாத்மிய ரட்சணி: முதற் பதிப்பு; ii. ஜெயவிநாயக சிவப்பிரகாச பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1920; iv. செ·மு.ப. 12; v. 22×14 செ.மீ.; vi. இலவசம்; vii. மகாசிவராத்திரியின் சிறப்புப்பற்றி இதில் விளக்கப்பட்டுள்ளது. 'சிவப்பிரகாச விளக்க போதினி' என்னும் மஹாசிவராத்திரி மஹாத்மிய ரட்சணி' என்று இந்நூலின் பெயர் குறிக்கப்பட்டிருக்கிறது. viii. 725/1920/I.

Q2: 433

**சோமசம்பு சிவாச்சாரிய ஸ்வாமிகள்**

508. i. சிவராத்திரி நிர்ணயம்: முதற் பதிப்பு; ii. ஸத்யோஜாத சிவச்சாரியா; ஸ்ரீகோபால விலாஸ முத்ராக்ஷரசாலை, கும்பகோணம்; iii. ஏப்ரல், 1917; iv. உ.ப. 40; v. 23×14 செ.மீ.; vi. 0-10-0; vii. சிவராத்திரி நோன்பினைக் கைக்கொள்ள வேண்டி வற்புறுத்தும் நூல். இதன் பெரும் பகுதி கிரந்த எழுத்தில் உள்ளது. viii. 425/1917/II.

Q2: 433

**ராமானுஜ அய்யங்கார் டி. எஸ்., திருவொற்றியூர்**

509. i. வரலக்ஷ்மி விரதம்: முதற் பதிப்பு; ii டி. எஸ். ராமானுஜ அய்யங்கார், திருவொற்றியூர்; ஸ்ரீராமாநுஜம் அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஆகஸ்ட், 1920; iv. உ.ப. 8; v. 13×11 செ.மீ.; vi. 0-0-6; vii. வரலட்சுமி விரதத்தினைப் பற்றி இந்நூல் நன்கு விளக்குகின்றது. viii. 280/1920/IV.

Q2: 433

**ஜெகதீச அய்யர், பி. வி.**

510. i. இந்துக்களின் விரதமும் பண்டிகையும்–முதற் பாகம்: இரண்டாம் பதிப்பு; ii. பி. ஆர். ராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. செப்டெம்பர், 1918; iv. உ.ப. 173; v. 18×13 செ.மீ.; vi. 0-8-0; vii. இந்து மதத்தில் உள்ளோர் கடைப்பிடித்துவரும் விரதங்களைப்பற்றியும், கொண்டாடி வருகின்ற விழாக்களை [illegible] விநாயகச [illegible] நன்கு ஆசிரியர் இப்புத்தகத்தில் விளக்கியுள்ளார். [illegible]ரி, தீபா[illegible] தூர்த்தி, ஸ்கந்த ஸஷ்டி, நவராத்திரி, சிவராத்திரம் [illegible]பனி, கிருஷ்ண ஜயந்தி முதலிய விரதங்களு[illegible] பண்டிகைகளுமாக

இதன்கண் விவரிக்கப்பட்டுள்ளன. விநாயகர் பெருமை, அவரை வழிபடவேண்டிய முறை, அவரது திருவிளையாடல் முதலியன விரிவாகக் கூறப்பட்டுள்ளன. விநாயகர் முதலி யோரின் படங்களும் இதன்கண் உண்டு. viii. 868/1918/III.

Q2: 433

511. i. இந்து புண்ணிய கதைகள்; ii. ஆர். வேங்கடேஸ்வரர் கம்பெனி, சென்னை; ஆனந்த அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. உ.ப. 140; v. 19×13 செ.மீ.; vi. 0–8–0; vii. இந்துக்களின் உபவாசம், திருவிழா ஆகியவற்றின் தோற்ற மும் விளக்கமும் இந்நூலில் பரக்கக் காணலாம். தெய்வங் களை முன்னிட்டுச் செய்யப்படும் விரதங்கள் முதலியனவும் விளக்கப்பட்டுள்ளன. 24 அத்தியாயங்கள் கொண்டது விநாயக சதுர்த்தி, ஸ்கந்த ஸஷ்டி, ஏகாதசி முதலிய விரதங்களும் தீபாவளி, மாட்டுப்பொங்கல் போன்ற சிறப்பு விழாக்களும் குறித்த விளக்கங்களுடன் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 932/1916/I.

Q2: 433

512. i. இந்து புண்ணிய கதைகள்—இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. பி. ஆர். ராமய்யர் அண்டு கம்பெனி, சென்னை; iii. 1916; iv. உ.ப. 153; v. 19×13 செ.மீ.; vi. 0–12–0; vii. இந்து சமயத் தொடர்புடைய உண்ணு நோன்பு, விழா மற்றும் சமய நெறிகளை விளக்கும் நூலிது. இடையிடையே படங்கள் இடம் பெற்றுள்ளன. ஆசாரம், ஒழுக்கம், ஸ்நானம், பக்தி, ஸங்கராந்தி, தைபூசம், மாசிமகம், பங்குனி உத்தரம், வைகாசி விசாகம், வியாஸ பூஜை, ஆவணி மூலம், மஹாளயம், அன்னாபி ஷேகம், கார்த்திகை சோமவாரம், கார்த்திகை, ஆருத்ரா தரிசனம், ஆடிப்பூரம், கிரஹணம், அர்த்தோதயம்; மஹோ தயம் முதலியன தனித்தனி அத்தியாயங்களில் விவரிக்கப் பட்டுள்ளன. கனம் ஸர். பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் இதற்கு முகவுரை எழுதியுள்ளார். viii. 17/1917/I.

Q2: 433

## 294.551 சக்தி தோத்திரம்

**அன்னாளடியார்க்கடியன்**

513. i. திருக்கோவலூர் ஸ்ரீ பூங்கோவல் வல்லித்தாயார் ஸ்தோத் திரம்: முதற் பதிப்பு; ii. பி. என். லக்ஷ்மிநரசிம்மாச்சாரி, திருக்கோவிலூர்; கலாரத்னாகரம் அச்சுக் கூடம், சென்னை; iii. செப்டெ ii. எஸ். 8; iv. செ.மூ.எ. 32; v. 17×11 செ.மீ.; பிரஸ், ; vii. நடுநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றாகிய தி[illegible]விலூரில் விளங்கும் பூங்கோவல் வல்லித்

தாயாரைக் குறித்துப் பாடப்பெற்ற பாடல்களைக் கொண் டுள்ளது இந்நூல். viii. 609/1919/II.

Q25 : 417

. இலக்குமி தோத்திரம் : (தொ. எ. 1475 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. அ. மகாதேவ செட்டியார், அம்மாள்பேட்டை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1916 ; iv. செ.மூ.உ.எ. 7 ; vii. கொல்லாபுரத்து விளங்கும் இலக் குமி தேவியைக் குறித்த துதி. குறு முனிவராகிய அகத்தி யர் திருமகளை வணங்கிப் போற்றுவதாக இத்துதிப் பாடல் கள் அமைந்துள்ளன. காஞ்சிபுரம் இராமானந்தயோகி என் பாரின் உரையுடன் கூடியது. viii. 1011/1916/IV.

Q25 : 417

**கந்தசாமி முதலியார், டி.**

514. i. மயிலபாளையம் ஸ்ரீதண்டு மாரியம்மன் திருமகிமைத் தோத்திரப்பா : முதற் பதிப்பு ; ii. கந்தசாமி முதலியார், மயிலம் ; சத்தாரியா பிரஸ், திண்டிவனம் ; iii. பிப்ரவரி, 1928 ; iv. செ.மூ.எ. 5+11+1 ; v. 16×11 செ.மீ. ; vi. ............ ; vii. மயிலம்பாளையத்தில் கோயில் கொண் டுள்ள ஸ்ரீதண்டு மாரியம்மனின் திருமகிமையைப் புகழ்ந்து பாடிய தோத்திரப் பாக்களைக் கொண்டது. "தண்டு பொன் மேனி உமை பண்டு வன்மீகவுமை தண்டு நன்மாரி உமையே" என்னும் முடிவினைக் கொண்டு ஒவ்வொரு பாடலும் அமைந் துள்ளது. viii. 774/1919/I.

Q25 : 417

**கிருஷ்ணஸாமி நாயகர், ம.**

515. i. கிள்ளியூர் மாரியம்மன் பதிகம் : முதற் பதிப்பு ; ii. சி. எஸ். இராமஸாமி பிள்ளை, சுரைக்காயூர் உக்கடை ; ஸ்ரீகுஞ்சித சரண அச்சுக் கூடம், சிதம்பரம் ; iii. ஏப்ரல், 1921 ; iv. செ.மூ.எ. 18 ; v. 15×11 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இதில் கிள்ளியூரில் விளங்கும் மாரியம்மனைக் குறித்து எழுதப்பெற்ற துதிபாடல்கள் அடங்கியுள்ளன. இந்நூலாசிரியர் மாணாக்கர் சுரைக்காயூர் உக்கடை புவனேஸ்வரிதாஸ், சி. எஸ். ராமசாமி பிள்ளை, இந்நூலாசிரியரின் சகோதரர் திரு. ம. துரைசாமி நாயகர் என்கின்ற மதுரை வர்மா ஆகியோர் அளித்துள்ள சாத்துக் கவிகளுடன் கூடியது. viii. 336/ 1920/II.

Q25 : 417

**குஞானந்தா, ஸ்வாமி, தனியூர்**

516. i. திரிபுரசுந்தரிமாலை : முதற் பதிப்பு ; ii. கொ. செல்வரங் கம், சென்னை ; மநோன்மணி விலாச அச்சுக் கூடம்,

சென்னை ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. செ.மூ.எ. 16 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. உமாதேவியாகிய பார்வதியைப் புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். viii. 788/1918/III.

Q25: 417

517. i. மஹா கௌரி மாயூர சித்தர் காடான கூறை நாடெனுந் தனியூர் ஸ்ரீ சாந்த குணனந்த மணி சாந்தி சாந்து சாந்த மாலை : முதற் பதிப்பு ; ii. கொ. செல்வரங்கம் அண்டு கோ; மனோன்மணி விலாச அச்சுக் கூடம், சென்னை ; iii. ஜூலை; 1918 ; iv. செ.மூ.ப. 8 ; v. 13×12 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. மாயவரத்திற்கருகில் உள்ள கூறைநாட்டில் கோயில் கொண்டுள்ள சாந்தி சாந்து அம்பிகை மீது பாடப்பெற்ற பக்திப் பாக்களைக் கொண்டது இப்புத்தகம். ஸ்ரீ கௌரி மாயூரம் கூறைநாடு வாசியான அடைக்கல சுவாமிகள் என்னும் அறிவானந்த சுவாமிகள் இதற்குச் சாற்றுக்கவி பாடியுள் ளார். viiii 384/1918/III.

Q25 : 417

குமரகுருபர சுவாமிகள்

i. சகலகலா வல்லி மாலை என்னும் சரஸ்வதி தோத்திரம் : (தொ. எ. 1475 பார்க்க) : முதற் பதிப்பு ; ii. அ. மகாதேவ செட்டியார், அம்மாள்பேட்டை ; மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. 1916 ; iv. செ.மூ.உ.எ. 10 ; v; vi; vii. குமரகுருபரர் சரசுவதியைத் துதித்துப் பாடிய துதிப் பாடல். 'சகல கலா வல்லியே' எனப் பாடல்தோறும் கல்விக்கு இறைவியை விளித்துத் துதிக்கின்றார். காஞ்சீபுரம் இராமா நந்த யோகியார் இதற்கு உரை வரைந்துள்ளார். viii. 1011/ 1916/IV.

Q25 : 417

குமாரசுவாமிக் குருக்களையா, சிவ. சு.

i. உலகம்மண் பேரில் ஸ்தோத்திரம் (தொ. எ. 1404 பார்க்க) : ii. சிவ. சு. குமார சுவாமி குருக்களையா; சைவப் பிரகாச அச் சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. 1916 ; iv. செ.மூ.எ. 16 ; vii. அளகை முதுநகர் உலகம்மாள் பேரில் தோத்திரமாலை, இங்குக் குறித்த அளகை என்பது அழகிய வீரபாண்டிபுரம் என்னும் ஒட்டப்பிடாரம் ஆகும். viii. 44/1919/II.

Q25:417

கொங்கணர்

i. நவராத்திரி தோத்திர மாலை (தொ.எ. 1558) : முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, சென்னை; iii. செப்டம்பர், 1917 ;

iv. செ.மூ.எ. 31 ; vii. இது சதுரகிரியில் விளங்கும் ஆனந்த வல்லியம்மன் பற்றிய தோத்திர நூல். அம்மையின் பெருமை யையும் அவளுடைய பெருங்கருணையையும் விவரித்து உரைப்பது. viii. 29/1917/IV.

Q25:417

**கோவிந்தசாமி பிள்ளை, எஸ். கே., விழுதியூர்**

518. i. மாரியம்மன் பதிகம் : முதற் பதிப்பு ; ii. தி.சி.அ. வைத் திலிங்கம் பிள்ளை, விழுதியூர் ; சங்கநிதி விளக்க அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச் 1919 ; iv. செ.மூ.ப. 8 ; 21×14 செ.மீ. ; vi. 0–1–6 ; vii. இதில் மாரியம்மன் மீது புகழ்ந்து பாடப்பெற்ற பக்திப் பதிகம், காவடிச் சிந்து, ஆனந்தக் களிப்பு முதலியன அடங்கியுள்ளன. viii. 1206/1919/I.

Q25:417

**சாமிதாசன், வே.சி., சின்னையாபுரம்**

519. i. மகமாயி என்னும் மாரியம்மன் முளைப்பாட்டு ; ii. சாமி தாசன் ; சச்சிதானந்த் அச்சியந்திரசாலை, விருதுபட்டி ; iii. 1916 ; iv. செ.மூ.ப. 7 ; v. 22×14 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. மகாமாயி என்னும் மாரியம்மன் பேரில் தோத்திர மாலை ; பெண்கள் முளை வளர்த்து அம்மனை வழிபடும் சடங்கை விவரிப்பது. இவ்வாசிரியர் இயற்றிய பிற நூல்களின் பட்டியலும் இந்நூலிறுதியில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவை யாவன : திருச்செந்தூர் காவடிச் சிந்து, திருச்செந்தூர் இந்துஸ்தான் பஜனைக் கீர்த்தனம், இன்பரசக் கீர்த்தனப் பதங்கள், மாசித்திருநாள் வழிநடைத் தெம்மாங்கு, குரங் கணியூர் வழிநடைச் சிந்து, ஏறல் வழி நடைச் சிந்து, ஏறல் பேயோட்டும் சிந்து, பிரிவு காண்டம், முள்ளிச் செவல் தீக்கோள் சிந்து, மண்ணெண்ணெய்க் கப்பல் சிந்து, தாம்பிர நதி அபாயச் சிந்து, திருச்செந்தூர் வழிநடைச் சிந்து, கழுகு மலை வழிநடைச் சிந்து என்பனவாம். viii. 607/1916/III.

Q25:417

**சிதம்பர முதலி**

520. i. திருவம்பாவை : இரண்டாம் பதிப்பு ; ii. சி. வீராசாமி நாயுடு, ஆ. வீரபத்திர முதலியார் ; முரஹரி அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915 ; iv. செ.மூ.ப. 30 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–0–6 ; vii. காஞ்சிபுரத்தில் கோயில் கொண்டிருக்கும் காமாட்சியம்மையைத் துதிக்கும் தோத்திர மாலை. நூற்பெய ருக்கு ஏற்ப 'அம்பாவாய்' எனப் பாடல்களின் முடிவு அமைந்துள. இது பாவைப் பாட்டை நினைவூட்டுகிறது இதன் பிற்பகுதி அம்மானைப் பாடல் முறையில் அமைந்துளது. ஆயினும் அங்கங்கே பாடல் முடிவு 'அம்பாவாய்' என்றே உளது. viii. 68/1916/I.

Q25:417

**சின்னிய கவுண்டர்**

i. அம்மன் பதிகம் (தொ.எ. 601 பார்க்க) ; ii. இம்மானுவேல் அச்சுக்கூடம், கோயம்புத்தூர் ; iii. 1920 ; iv. செ.மூ.எ. 10 ; vii. அம்மன் பதிகமாக உள்ள இதனை 'உமையவள் தோத்திரப் பத்து' என ஆசிரியர் குறிப்பிடுகிறார். உமாதேவியின் பெருமைகளைச் சிறப்பித்துரைக்கும் துதிப் பாடல்களாகும் இவை. viii. 678/1920/IV.

Q25:417

**செய்கு செய்யிது முஹம்மது ஆலிம் சாகிபு, ஆ.செ.மு.**

521. i. சங்கனுபுரம் ஆற்றங்கரை நாச்சியார் பேரில் தோத்திர முனாஜாத்து : முதற் பதிப்பு ; ii. ஆ.செ.மு. செய்கு செய்யிது முகமது ஆலிம் சாகிப் ; ஸ்ரீ அபிராமி விலாசம் பிரஸ், திண்டுக்கல் ; iii. ஆகஸ்ட், 1917 ; iv. செ.மூ.ப. 8 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இது திருநெல்வேலி மாவட்டம் பேட்டை குளத்தூருக்குத் தென் மேற்கிலுள்ள சங்கனுபுரம் ஆற்றங்கரை நாச்சியார் பேரில் தோத்திர நூல். viii. 1145/1917/III.

Q25:417

522. i. **துர்க்கா, லெக்ஷ்மி, ஸரஸ்வதி, கிருஷ்ண அஷ்டோத்திரங்கள்-ஸ்தோத்திரங்கள்** ; ii. ஆர். சுப்பிரமணியய்யர், தஞ்சை ; கல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சை ; iii. 1919 ; iv. உ.ப.+செ.மூ.ப. 24 ; v. 14×11 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. இதில் துர்க்கா, லக்ஷ்மி, சரஸ்வதி, கிருஷ்ணன் ஆகியோர்பால் பாடப்பெற்ற அஷ்டோத்திரங்களும் ஸ்தோத்திரங்களும் அடங்கியுள்ளன. viii. 779/1920/III.

Q25:417

**நடேச பத்தர், தி. வெளிப்பாளையம்.**

523. i. மாரியம்மன் தோத்திரம் : முதற் பதிப்பு ; ii. தர்மலிங்கம் பிள்ளை நாகை, வெளிப் பாளயம் ; ஸ்காட்டிஷ் பிராஞ்சு பிரஸ், நாகை ; iii. 1916 ; iv. செ.மூ.ப. 16 ; v. 15×11 செ.மீ. ; vi. 0–0–3 ; vii. மாரியம்மன் தெய்வத்தின் மீது பக்தியுடன் பாடப் பெற்ற தோத்திரப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். அம்மனுக்குக் காவடி எடுக்கும் காலத்து எழுச்சியுடன் பக்திபரவசமாய்ப் பாடத்தக்கது. கண்ணி முறையிலும் பாடல்கள் உள. இறுதியில் பஞ்சரத்தினப் பாமாலை ஒன்றும் அமைந்துள்ளது. viii. 572/1916/IV.

Q25:417

**நாராயணசாமி பிள்ளை, வேலூர்.**

524. i. சரஸ்வதி தோத்திரம் அல்லது ஆயுத பூஜை : திருந்திய இரண்டாம் பதிப்பு ; ii. நாராயணசாமி பிள்ளை, வேலூர் ; கலைக்கியான முத்திராக்ஷர சாலை ; iii. அக்டோபர் 1920 ;

**நயினுக்கண்ணு முதலியார், குதம்பாக்கம் & முனுசாமி நாயகர், ஆயிரம்விளக்கு, சென்னை.**

612. i. சைவ சமய நித்ய கன்ம அனுட்டான விதி: முதற் பதிப்பு ; ii. கோ. இரா. கோபால் பிள்ளை, காணியம்பாக்கம் ; கணேச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1919 ; iv. செ.மூ.உ.ப. 40 ; v. 16×13 செ.மீ. ; vi. 0–2–0 ; vii. சைவ சித்தாந்த தத்துவப்படி அன்றாடம் செய்ய வேண்டிய இறை வணக்க முறைகள் இதில் விளக்கப் பட்டுள்ளன. விசுவாசமும், நியாமும் உடையவர்களாய், சமய தீக்ஷதர்களாயுமுள்ளவர்கள் தெரிந்து கொள்ளவேண்டிய பல செய்திகள் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. சென்னை இயற்றமிழ் ஆசிரியர் திரு. ப. தங்கவேலு முதலியார், சென்னை, போரூர் ஆறுமுக முதலியார், முதலியோர் இந்நூலுக்குச் சிறப்புப் பாயிரம் தந்துள்ளனர். viii. 210/1919/III.

Q23 : 4

## 294. 551 சைவம் : பொது

**காசிகாநந்த சுவாமிகள்**

613. i. கடாவையடக்குங் கட்டாரி: முதற் பதிப்பு ; ii. சச்சிதா நந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஏப்ரல், 1919 ; iv. உ.ப. 79 ; v. 22×14 செ.மீ.; vi. இலவசம் ; vii. சைவ சித்தாந்தத்தைப் பற்றிய மாறுபட்ட கொள்கை களுக்கு மறுப்புக் கூறுகின்ற கருத்துக்களையுடையதாகும் இந் நூல். கோவிலூர் மடாலயம் “ ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகள்” எழுதிய ‘ சூட்டுக்கோல்’ என்ற கட்டுரையின் மேல் “ கடா ” என்று முத்தையா பிள்ளை அவர்கள் ஒரு மறுப்பு வெளியிட் டார்கள். அம்மறுப்புக்கு மறுப்பாக, “கடாவையடக்குங் கட்டாரி ” என்ற தலைப்பில் மேற்படி சாமிகளால் இந்நால் வெளியிடப்பட்டது. viii. 1088/1919/I.

Q23

**குமாரசுவாமி தேசிகர், சிவ. சு., ஒட்டப்பிடாரம்**

614. i. பார்வதியம்மாள் திருக்கல்யாண மகிமை (ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருவுரு அஷ்ட பந்தன சதகமும்) முதற் பதிப்பு ; ii. சிவ. சு. குமாரசாமி தேசிகர், ஒட்டப் பிடாரம் ; சுப்ரமணிய விலாச அச்சியந்திரசாலை, தூத்துக் குடி ; iii. 1916 ; iv. செ.மூ.எ. 125 ; v. 16×10 செ.மீ; vi. 0–4–0 ; vii. பார்வதிக்கும் சிவனுக்கும் நடந்த திரு மண வைபவத்தை விளக்குவது. திருச்செந்தில் முருகனின் புகழ் பாடித் துதிக்கும் தோத்திரப்பாமாலையும் இதில் உண்டு.

தாலாட்டு, விளையாட்டு, ஊஞ்சல், நலுங்கு, கப்பற் பாட்டு என்னும் பாடல் வகைகளில் இது அமைந்துள்ளது. இத ஞேடு, "செந்திற் சித்துரு சதகம்" என்னும் நூலும் இதன்கண் உண்டு. viii. 974/1916/II.

Q23

615. i. நான்காவது சைவ மகாசங்கக் கட்டுரை; ii. சைவசபா, பாளையங்கோட்டை; பெத்தாச்சி பிரஸ், பாளையங்கோட்டை; iii. 1915; iv. உ.ப. 178; v. 21×14 செ. மீ.; vi. 0–12–0; vii. 1913–ல் தென்காசியில் நடை பெற்ற சைவ சித்தாந்த மகாநாட்டில், அறிஞர் பலர் ஆற்றிய ஆங்கிலம், தமிழ்ச் சொற்பொழிவுகள் அடங்கியிருக்கின்றன. சைவ சமயம் சம்பந்தமான கட்டுரைகளுடன், தமிழ் மொழி பற்றியும் சில கட்டுரைகள் உள்ளன. இவற்றுள் "தமிழரும் மலையாளரும்" "தமிழும் ஆங்கிலமும்" "வண்டமிழ் மொழியை வளர்க்குமாறெங்கனம்" என்பவை முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவை. viii. 690/1916/I.

Q23

முத்தையா பிள்ளை, பொ., தூத்துக்குடி

616. i. சூட்டுக்கோலால் மாட்டிக்கொண்ட ஸ்ரீமத் காசிகாநந்த சுவாமிகள் கட்டுரையின் மேல் கடா: முதற் பதிப்பு; ii. பொ. முத்தையா பிள்ளை, தூத்துக்குடி; சைவப்பிரகாச அச்சியந்திரசாலை, தூத்துக்குடி; iii. செப்டம்பர், 1918; iv. செ.மு.உ.ப. 20; v. 21×14 செ.மீ.; vi............; vii. கோவிலூர் மடத்தில் வசித்துவந்த ஸ்ரீமத் காசிகாநந்த சுவாமியர் ஸ்ரீமான் சொக்கலிங்கஞ் செட்டியார் அவர்கள் வெளியிட்ட துர்வையாச படலத்துக்கு மறுப்பாக எழுதிய நூல், "சூட்டுக்கோல்" அச்சூட்டுக்கோல், சைவ சமய நிந்தனை, சிவ சாத்திர நிந்தை, சிவனடியார் நிந்தை கள் மலிந்து முன்னொடுபின் முரணித் தம்மனம் போனவாறு எழுதப்பட்டிருக்கிறது என அம்மறுப்புக்கு மறுப்பாக எழுந்ததே இந்நூல். "சூட்டுக்கோல்" என்ற மறுப்பு நூலை எழுதித் தன் அறியாமையால் வசையிடை மாட்டிக்கொண்டாராகலின், சூட்டுக்கோலால் மாட்டிக்கொண்ட ஸ்ரீமத் காசிகாநந்த சுவாமிகள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளார். viii. 144/1918/IV.

Q23

வேதாசலம், சுவாமி

617. i. சைவ சமய பரிபாலனம்: திருத்திய பதிப்பு; ii. சுவாமி வேதாசலம்; டி. எம். அச்சுக் கூடம், பல்லாவரம்; iii. ஜனவரி, 1918; iv. உ.ப. 8; v. 18×12 செ.மீ.; vi. 0–2–0;

vii. சைவ சமயத்தைப் பற்றியும், அதன் பரிபாலனத்தைப் பற்றியும் இப்புத்தகத்தில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. viii. 317/1919/I.

Q23

## 294- 551 சிவபுராணம்

**சொக்கலிங்கஞ் செட்டியார், ராம. சொ., காரைக்குடி**

618. i. பார்க்கவ புராணமாகிய விநாயக புராணத்திலுள்ள துர்வையா சகப்படலம்: முதற் பதிப்பு ; ii. அரு. சோமசுந்தரஞ் செட்டியார், தேவ கோட்டை ; ஞானம்பிகா பிரிண்டிங் ஒர்க்ஸ், காரைக்குடி ; iii. அக்டோபர், 1917 ; iv. செ. மூ. உ.ப. 21 ; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii. இதில் பார்க்கவ புராணமாகிய விநாயக புராணத்திலுள்ள துர்வையாசகப் படலத்தின் உரைநடை பாடல்களும் இடையிடையே கொடுத்து விளக்கம் தரப்பெற்றிருக்கிறது. இந்நூலாசிரியர் மாணுக்கருளொருவரும், திருப்புத்தூரைச் சார்ந்த தம்பிபட்டி வேலுக் கவிராயர் பௌத்திரருமாகிய, சொ. வேலுச்சாமி கவிராயர் இயற்றிய சிறப்புப் பாயிரச் செய்யுட்களுடன் கூடியது. viii. 892/1918/II.

Q23 : 224

**பழனிமலை முதலியார் (தொ.து).**

619. i. கந்தபுராணத்திரட்டு: முதற் பதிப்பு ; ii. பாலகிருஷ்ணம் பிள்ளை, கொல்லங்கோடு ; பாரத பந்து பிரஸ், கொல்லங்கோடு ; iii. நவம்பர், 1918 ; iv. செ.மூ.உ.ப. 169 ; v. 21×14 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இதில் கந்தபுராணத்திரட்டு அமைந்துள்ளது. பல படலங்கள் கொண்டது. பாடல்களும், வசனமும் கலந்து கூறப்பட்டுள்ளது. பாடல்கள், கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் அருளிச் செய்ததிலிருந்தும் சம்பந்த சரணுலய சுவாமிகள் அருளிச் செய்ததிலிருந்தும் தெரிந்தெடுக்கப்பெற்றனவாம். உரைநடைப் பகுதி தெளிவுற அமைந்துள்ளது. இந்த உரைநடை, அக்காலத்திய புராணநடைப் போக்கிலிருந்தாலும், எளிய, இனிய சொல்லாட்சியுடன், பாத்திரங்களின் உணர்ச்சி புலப்படும் வகையில் அமைந்துளது. viii. 938/1919/III.

Q23 : 224

**பானுகவி, ம. தி., திருவோத்தூர்**

620. i. துலாக்காவேரி மாண்மியம்: முதற் பதிப்பு; ii. பூ. மூ. இராஜு முதலியார், சென்னை, அமெரிக்கன் டயமண்ட் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1917 ; iv. உ.ப. 74 ; v. 21×14 செ. மீ.; vi. 0–8–0 ; vii. புராணத்திலிருந்து எடுக்கப்பெற்ற கதையான இதில், துலாக் காவிரியின் சிறப்பு விளக்கப்பட்டுள்ளது. இது பதினெண் புராணங்களுள் ஒன்முன பிரம கைவர்த்த

புராணத்திலிருந்து எடுக்கப்பட்ட சரிதமாகும். காவேரி நதியின் மகிமை விவரிக்கப்பட்டிருக்கிறது. இந் நதியில் துலா மாதத்தில் (ஐப்பசி), நீராடுவதனுல் உளதாகும் புண்ணியப் பேறுகளையும் உரைக்கிறது. viii. 894/1917/IV.

Q23:224

## 294. 552 ஆரிய சமாஜம்

**தயானந்த சரஸ்வதி**

621. i. ஆரிய வைதீக அக்கினிஹோத்திரம்: முதற் பதிப்பு ; ii. எம். ஜே. ஷர்மா, மதுரை ; ஸ்ரீராமானுஜம் அச்சாபீஸ், மதுரை, iii. மே, 1919 ; iv. உ.ப. 16 ; v. 23×15 செ. மீ. ; vi. 0–1–0 ; vii. இது தயானந்த சரஸ்வதி சுவாமியால் வட மொழியில் எழுதப்பெற்றது. இதைத் தமிழாக்கம் செய்தவர், எம். ஜே. ஷர்மா. ஆரிய சமாஜத் தொண்டர்களுக்கென எழுதப் பெற்றது. viii. 544/1919/II.

Q29:M2

622. i. ஆரிய வைதீக அக்னிஹோத்திரம்: திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. எம். ஜே. ஷர்மா, மதுரை ; விக்டோரியா பிரஸ், மதுரை ; iii. 1919 ; iv. உ. ப 16 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–1–0; vii. இது ஓர் ஆரிய சமாஜக் கருத்தைப் பரப்பும் நூல் தயானந்த சரஸ்வதி வடமொழியில் எழுதியதன் தமிழாக்கம் இது. viii. 491/1920/I.

Q29 : M2

## 294. 554 வைணவ சமய நெறி

623. i. கோபீசந்தன முத்ரா துளஸி மாலா தாரண விதி: முதற் பதிப்பு ; ii. ஜீ. கே. சுப்பாச்சாரி, மதுரை ; சௌராஷ்ட்ரா அச்சியந்திரச்சாலை, மதுரை ; iii. பிப்ரவரி, 1920 ; iv. செ. மூ. ப. 24 ; v. 10×8 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. சௌராஷ்ட்டிர வைணவர்களுக்கான சிறு நூல். துளசிமாலை, சந்தனக் குழம்பு முதலியவை தரிக்கும் விதம் கூறப்பட்டுள்ளது. viii. 547/1920/I.

Q22:4

624. i. சூர்ண பரிபாலன ஸங்க்ரஹ படி: முதற் பதிப்பு ; ii. சி. சென்னகேசவலு நாயுடு, சென்னை ; ஸ்ரீநிகேதன் அச்சுக் கூடம், சென்னை ; iii. ஏப்ரல், 1917 ; iv. செ. மூ. ப. 39 ; v. 12×9 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. வைணவ சமயக் கோட்பாடுகளின்படி சவ அடக்கம் செய்யும் முறைகள் பற்றி விளக்கப் பட்டிருக்கிறது. இந்தச் சடங்கு காலத்தில் பாடவேண்டிய ஆழ்வார்களின் திருமொழிகளும் உடன் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 663/1917/II.

Q22:4

625. i. நித்தியானுட்டான விதி--திருவாராதனக் கிரமம் : முதற் பதிப்பு ; ii. ம. கொ. பட்டாபிராம முதலியார், சென்னை ; ஸ்ரீநிகேதன முத்திராக்ஷரசாலை, சென்னை ; iii. 1919 ; iv. உ.ப. 47 ; v. 18×12 செ. மீ.; vi. 0-5-0 ; vii. தென்கலைப் பிரிவைச் சார்ந்த வைணவ சமய பக்தர்கள் கைக்கொள்ளும் இறை வணக்க விதிகள் இதில் தரப்பட்டுள்ளன ; படவிளக்கங் களுடன் கூடியது. அதிகாலையில் கண்விழித்தல் தொடங்கி இரவில் நித்திரைக்குச் செல்வது வரையில் அனுசரிக்கவேண்டிய வழிபாட்டு முறைகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. சாலக்ராம மூர்த்தியின் வைபவங்களை, 'ஸ்ரீசாலக்ராம தத்வ தீபம்' என்னும் பகுதி விளக்குகிறது. viii. 401/1919/III.

Q22 : 4

## 294. 554 வைணவம் : துதி

**அரங்கசாமி நாயுடு, வி. கே.**

626. i. திருப்பதி வெங்கடேசபெருமாள் போற்றிமாலை : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. வி. கே. அரங்கசாமி நாயுடு, வேலூர்; பச்சையப்ப அச்சியந்திரசாலை, வேலூர் ; iii. ஜனவரி, 1919 ; iv. செ.மூ.எ. 1+100 ; v. 21×13 செ. மீ. ; vi. இலவசம் ; vii. திருப்பதியில் கோயில்கொண்டுள்ள ஸ்ரீவேங்கடாசலப் பெருமாள் மீது பாடப் பெற்ற பக்திப் பாடல்களைக் கொண்டது. பாடல்தோறும், 'போற்றி போற்றி' என்னும் வாழ்த்துச் சொற்களைக் கொண்டு முடியும் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் ஆகியது இந்நூல். தி. அமிலு நாயகர் என்பார் முன் பதிப்பித்த பிரதிக்கு இணங்க வெளியிடப்பட்டது. இதனை அச்சிட்ட நோக்கம், திருமால் பக்தர்கள் பாராயணம் செய்வதற் பொருட்டேயாகும். viii. 492/1919/I.

Q22 : 417

**அழகிய சிங்கவிராமானுஜதாசன், திருவெண்ணெய்நல்லூர்**

627. i. வைபவ தர்சனச் சந்திரிகை : முதற் பதிப்பு ; ii. டி. என். வெங்கடகிருஷ்ண பிள்ளை, திண்டிவனம், சத்தாரியா பிரஸ், திண்டிவனம் ; iii. ஜூன், 1920 ; iv. செ. மூ. எ. 2 ; v. 15×11 செ. மீ. ; vi. இலவசம் ; vii. இது, திண்டிவனம் பண்டரி ஆஷாடசுத்த ஏகாதசி மகோற்சவ வைபவ விளக்க நூல். viii. 58/1920/III.

Q22 : 417

628. i. ஆஞ்சநேயர் தோத்திர பாசுரம் : முதற் பதிப்பு ; ii. ஸ்ரீராமானுஜ அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மே., 1920 ; iv. செ.மூ.எ. 10 ; v. 17×11 செ. மீ. ; vi. 0-0-6 ; vii ஆஞ்சநேயரைப் போற்றிப் புகழ்ந்திடும் பக்தியுடன் கூடிய தோத்திரப் பாடல்களைக் கொண்டதாகும் இந்நூல். viii. 271/1920/IV.

Q22 : 417

ஶ்ரீராமச்சந்திரன், ஜி., கும்பகோணம்

629. i. ஶ்ரீராமாயணம்: திருத்திய ஐந்தாம் பதிப்பு; ii. ஜி. இராமச்சந்திரன், மாயவரம், மினர்வா பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1919; iv. செ. மூ. ப. 32; v. 8×7 செ. மீ.; vi. 0–1–0; viii. இதில் இராமனைத் துதித்தற்குரிய, அவனுடைய பெருமையைப் புலப்படுத்துதற்குரிய சொற்றொடர்கள் நிறைந்துள்ளன. சீதையுடன் கூடிய இராமர் படமொன்றும் இதன்கண் உண்டு. viii. 262/1919/II.

Q22: 417

630. i. கவிதை மஞ்சரி: முதற் பதிப்பு; ii. வீ..ஆ. குப்புவேல், திருநெல்வேலி; பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ், பாளையங்கோட்டை; iii. அக்டோபர், 1917; iv. செ. மூ. உ. ப. 16; v. 21×14 செ.மீ.; vi. இலவசம்; vii. இதில் திரிசிரபுரம் வீமபுரி விசிஷ்டாவைத சபையில் விளங்கும் கிருஷ்ணமூர்த்தியின்பேரில் பாடப்பெற்ற தோத்திரக் கவிதைகள் அடங்கியுள்ளன. இவை வேலூர் பு.க. ஶ்ரீனிவாசாரியார், சென்னை, ந. சுப்பிரமணிய ஐயர் முதலியவர்களால் பாடப்பெற்றனவாகும். viii. 126/1917/IV.

Q22: 417

கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், திருவல்லிக்கேணி, சென்னை.

631. i. பார்த்தசாரதி சுப்ரபாதம்: முதற் பதிப்பு; ii. கிருஷ்ணசுவாமி ஐயங்கார், திருவல்லிக்கேணி, சென்னை; சச்சிதானந்தம் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1919; iv. செ. மூ. ப. 15; v. 11×17 செ. மீ.; vi. 0–1–0; vii. சென்னை திருவல்லிக்கேணியில் விளங்கும் பார்த்தசாரதியைப் போற்றி எழுதப்பெற்ற துதிப்பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. அதிகாலையில் துயிலெழுப்பும் பாடலாகிய சுப்ரபாதம் என்னும் திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களாகும் இவை. வடமொழிக் கவிதையாகிய இந்நூல் தமிழ் எழுத்தில் தரப்பட்டிருக்கிறது. viii. 611/1919/III.

Q22: 417

குப்புராம், டி. எம்.

632. i. விஷ்ணுநாம ஸ்தோத்திரம்: முதற் பதிப்பு; ii. வி. கே. பொன்னுசாமி முதலி, வி. பி. தாமோதர முதலி, எ. எல். தெய்வசிகாமணிப் பிள்ளை, வேலூர்; இலச்சுமிவிலாச அச்சுக்கூடம், வேலூர்; iii. டிசம்பர், 1920; iv. உ. ப. 7; v. 10×8 செ. மீ.; vi. இலவசம்; vii. திருமாலின் பெயர்கள் நூற்றெட்டை இந்நூலில் விவரமாகக் காணலாம். தோத்திரத்திற்கு மிகவும் உபயோகமாக உள்ளது. திருமகள், கண்ணன் ஆகியோரது படங்களுடன் கூடியது. viii. 974/1920/IV.

Q22: 417

குலசேகராழ்வார்

633. i. முகுந்தமாலை: முதற் பதிப்பு; ii. த. இராமசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; ஸ்ரீலட்சுமி நாராயணவிலாச அச்சுக் கூடம், சென்னை; iii. அக்டோபர், 1918; iv. செ. மூ. எ. 1+40; v. 12×8 செ. மீ.; vi.......; vii. விஷ்ணுவின் மீது புகழ்ந்து பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டது இந் நூலாகும். வடமொழிப் பாடலாகிய இத்தோத்திர மாலையைத் தமிழ் எழுத்தில் அமைத்துத் தருகிறது இந்நூல். viii. 578;1919/I.

Q22: 417

கோபாலசாமி, அ. மு., மன்னார்குடி

634. i. இராஜமன்னார்குடி ராஜகோபால ஸ்வாமிபேரில் தோத்திரப் பாசுரமாலை; ii. அ. மு. கோபாலசாமி, மன்னார்குடி; சம்பக லக்ஷ்மி விலாச பிரஸ், மன்னார்குடி; iii. அக்டோபர், 1917, iv. செ. மூ. ப. 15; v. 14×11 செ. மீ.; vi. இலவசம்; vii. திருச்செண்பகாரண்யமென்னும், இராஜ மன்னார்குடியில் எழுந்தருளியிருக்கும் ராஜகோபால சுவாமியின்பேரில் பாடப் பெற்ற தோத்திரப் பாமாலை இதில் அடங்கியுள்ளது. தோத்தி ரம் கீர்த்தனை வடிவில் உள்ளது. ஆசிரியர், எஸ். ஐ. ஆர். போட்மெயிலில், மனைவியுடன் யாத்திரை சென்று மன்னார்குடி யில் பிரம்மோத்சவம் கண்டதும் பாடலில் கூறப்பட்டிருக்கிறது; viii. 608/1917/IV.

Q22: 417

சுந்தரகாந்தன், உத்தரபுரி

635. i. திருவேங்கடமாலை: முதற் பதிப்பு; ii. சுப்பையா, விருதுப்பட்டி சச்சிதானந்த அச்சியந்திரசாலை, விருதுப்பட்டி, iii. 1916; iv. செ.மூ.எ. 30+1; v. 16+10 செ.மீ.; vi. 0–0–6; vii. திருப்பதி ஸ்ரீனிவாசனின் பேரில் தோத்திரமாலை வெண்பா வினால் ஆகியது. முதலிரண்டு அடிகளில், வேங்கடத்தின் சிறப்புக்கூறி, பின்னிரண்டு அடிகளில், ஈசன் பெருமை யையும் தமது வேண்டுதல் விருப்பத்தையும் ஆசிரியர் தெரிவிக்கின்றார்; viii. 177/1916/II.

Q22: 417

சுப்பிரமணிய பாரதியார், சி.

636. i. கண்ணன் பாட்டு: முதற் பதிப்பு; ii. ப. சு. நெல்லையப்ப பிள்ளை; இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1917; iv. செ.மூ.ப. 46; v. 18+13 செ.மீ.; vi. 0–4–0; vii. இதில், கண்ணனைப் போற்றி எழுதப் பெற்ற பாடல்கள் அடங்கியுள்ளன. கண்ணனைத் தோழன், தாய் தந்தை, சேவகன், சீடன், சற்குரு, குழந்தை, காதலன்,

காதலி என்னும் நிலைகளில் பாவித்தும் பாடியுள்ளார். பதிப்பாசிரியர் நெல்லையப்ப பிள்ளையவர்கள் இந்நூலுக்கு எழுதியுள்ள சிறிய முகவுரையில் நூலாசிரியரின் ஏற்றத்தை உள்ளபடி மதிப்பிட்டுள்ளார். viii. 1089/1917/III.

Q22 : 417

637. i. கண்ணன் பாட்டு : திருத்திய பதிப்பு ; ii. சு. நெல்லையப்ப பிள்ளை, பரலி ; பிரிட்டிஷ் இந்தியா பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1919 ; iv. செ.மூ.ப. 54 ; v. 18×12 செ.மீ.; vi. 0–8–0; vii. பாரதியார் கண்ணன் பேரில் பாடிய பாடல்கள் அனைத்தையும் தொகுத்து இந்நூலில் வெளியிட்டுள்ளனர். பாடல்களுக்கு இசைக் குறிப்பும் தரப் பட்டிருக்கிறது. இப் பதிப்பிற்கு வ.வெ. சுப்பிரமணிய ஐயர் எழுதியுள்ள முன்னுரையும், பதிப்பாசிரியரின் முதற் பதிப்பு முகவுரையும், நூலையும், ஆசிரியரின் கவிதையாற்றலையும் நன்கு தெரிவிக்கின்றன. viii. 960/1919/IV.

Q22 : 417

தண்டபாணி சுவாமிகள்

638. i. திருவரங்கத்திருவாயிரம், திருமகளந்தாதி : முதற் பதிப்பு; ii. தி.மு. செந்தினயகம் பிள்ளை, திருவாமாத்தூர் ; இராமய்யர் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 1920 ; iv. செ.மூ.ப. 237; v. 24×17 செ.மீ.; vi. 2–0–0; vii. திருமாலைப் பற்றியும் மகாலட்சுமியைப் பற்றியும் எழுதப்பெற்ற ஆயிரம் பாடல்கள் இதில் இடம் பெற்றுள்ளன. திருவரங்கத் திருவாயிரம் என்னும் இந்நூற்பெயரானது, திருவரங்கத் தலத்தில் விளங்கும் ஸ்ரீமந் நாராயணனைக் குறித்து ஆயிரங் கவிகளையுடையது எனப் பொருளாம். இதன் கண், மாலை, பதிகம், பஞ்சகம், சதகம், சட்கம், அட்டகம், பத்து, வண்ணம், வகுப்பு முதலிய பற்பல பிரபந்த வகைகள் அமைந்துள்ளன. இதன்கண், நூலாசிரியரது நிழற்படமும், ஸ்ரீரங்கநாதரது திருஉருவப்படமும் உள்ளன. இந்நூலாசிரியர் குமாரர் செந்தினயகம் பிள்ளை சூளைப்பாக்கம் கேசவலு நாயுடு முதலியோர் இந்நூலுக்குச் சாற்றுக் கவிகள் தந்துள்ளனர். viii. 682/1920/I.

Q22 : 417

நாராயண அய்யர், தே. வே., ஆரணி

639. i. கோபாலநாமாமிருதம் : முதற் பதிப்பு ; ii. தே.வ. நாராயண ஐயர், ஆரணி ; அமெரிக்கன் ஆர்காட் மிஷன் அச்சுக்கூடம், ஆரணி ; iii. எப்ரல், 1917 ; iv. செ.மூ.எ. 24 ; v. 11×14 செ.மீ.; vi. 0–1–0 ; vii. கோபால கிருஷ்ணனைக் குறித்துப் பாடப்பெற்ற பாடல்கள் இவை. கேபபாலகிருஷ்ணனின்

னின் அவதார நிகழ்ச்சிகளை எடுத்துக்கூறிக் 'கோபாலா' என விளித்துப் போற்றும் முறையில் அமைந்தது. viii. 226/1917/II.

Q22 : 417

640 i. ராம நாமாமிருதம்: இரண்டாம் பதிப்பு ; ii. தெ.வ. நாராயண ஐயர், ஆரணி ; அமெரிக்கன் ஆற்காட் மிஷன் அச்சுக்கூடம், ஆரணி ; iii. 1916; iv. செ. மூ. எ. 21 ; v. 14×11 செ.மீ.; vi. 0–0–6 ; vii. இராமாயணத்தில் வரும் இராமனின் பிறப்பு, வளர்ப்பு, செய்கை, முதலியவை களை ஒட்டி எழுதப்பெற்ற துதிப்பாடல்கள் கொண்டது இந் நூல். இராமாயணத்து உளதாகும் ஆறுகாண்டச் செய்திகளையும் நாமாவளி முறைமையில் தருவது இந்நூல்; viii. 401/1917/II.

Q22 : 417

**நாராயணசாமி செட்டியார், பூ.தா.வே.**

641. i. பூண்டி அரசு கொண்ட பெருமாள் பேரில் போற்றிமாலை : முதற் பதிப்பு ; ii. பூ.தா.வே. நாராயணசாமி செட்டியார், சென்னை ; காமராஜர் அச்சுக்கூடம், சூளை, சென்னை ; iii. மார்ச், 1920 ; iv. செ.மூ.ப. 23 ; v. 22×13 செ.மீ.; vi. 0–2–0 ; vii. பூண்டியில் எழுந்தருளியிருக்கும் அரசு கொண்ட பெருமாள்பேரில் பாடப் பெற்ற போற்றிமாலை. இதனோடு, அலர்மேல்மங்கைபேரில் போற்றிமாலை, அனு மந்தராயர் பேரில் போற்றிமாலை என்பனவும் இந்நூலில் உள்ளன. viii. 324/1920/II.

Q22 : 417

**யாமுநாசார்யர்**

642. i. ஸ்தோத்ர ரத்நம்: முதற் பதிப்பு ; ii. எஸ். வாசுதேவா சார்யார், சென்னை ; கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை ; iii. அக்டோபர், 1918 ; iv. செ.மூ உ. ப. 230 ; v. 22×14 செ.மீ.; vi. 1–0–0 ; vii. ஸ்ரீயமுநாசாரியாரின் வரலாறு முதலில் உள்ளது. இவருடைய வடமொழி தோத்திரத்திற்கு உரை வகுத்தவர், வங்கிபுரம் வாசுதேவாசாரியார் ஆவார். இவர் தம் உரைக்குப் பெரியவாச்சான் பிள்ளை எழுதியிருக்கும் மணிப் பிரவாள வியாக்கியானமும், நிகமாந்த மகாதேசிகன் இயற்றி யிருக்கும் சமஸ்கிருத பாஷ்யமும் ஆதாரங்களாக அமைந் துள்ளன. viii. 610/1919/II.

Q22 : 417

**ரகுநந்தனன், ஸ்ரீரங்கம்**

643. i. ராமத்யானம்: திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii வி. சுந்தரம் பிள்ளை, வேலூர் ; பச்சையப்ப அச்சியந்திரசாலை வேலூர் ; iii. பிப்ரவரி, 1917 ; iv. உ. ப. 12 ; v. 11×

செ. மீ.; vi. இல்வசம்; vii. இராமபிரானைக் குறித்து எழுதப்பெற்ற நூலிது. "பூஜா ராமாயணம் என்னும் ஸ்ரீமத் ராமத்யானம்" என்பது இந்நூலின் முழுப்பெயர். இராம பிரானைத் தியானித்துப்பிரார்த்திக்கத் தக்க சில பகுதிகள் தொகுக்கப்பட்டுள்ளன. இதில் கூறப்பட்டுள்ளவை, வால்மீகி ராமாயணத்திலிருந்து எடுக்கப்பெற்றனவாம். உரைநடையாய் இருப்பதால் இது எல்லோருக்கும் பயன்படும் ஒரு நூலாகும். viii. 681/1917/I.

Q22 417

644. i. ராமர் தோத்திரமாலை: முதற் பதிப்பு; ii. பி. நாராயணசாமி பிள்ளை அண்டு பிரதர், சென்னை; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. மார்ச், 1918; iv. செ.மூ.எ. 30; v. 13×11 செ.மீ.; vi. 0–0–3; vii. இராமபிரானைப் புகழ்ந்து பாடப்பெற்ற 30 தோத்திரப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். பாடல்கள் சொற்சுவையும், பொருட் சுவையும் மிகுந்து காணப்படுகின்றன. ஒவ்வொரு பாடலும் "ராம ராம ராமனே" என்னும் முடிவினைப் பெற்றுள்ளது. viii. 1107/1918/III.

Q22 417

ராஜகோபால் தாசர், ப., குற்றாலம்

645. i. ஆதிகேசவமாலை: முதற் பதிப்பு; ii. ப. ராஜகோபால் தாசர், குற்றாலம்; ஆரியன் அச்சுக்கூடம், கும்பகோணம்; iii. செப்டம்பர், 1916; iv. செ.மூ.ப. 24; v. 21×13 செ.மீ.; vi. 0–1–6; vii. விஷ்ணுவை ஆதிகேசவராக வணங்கி, அவர்மீது பாடப்பெற்ற பக்திப் பாடல்களும், கீர்த்தனைகளும் திவ்விய நாமங்களும் அடங்கிய நூலாகும். 'என்னைக் காத்தருள் ஆதிகேசவனே' எனக் கேசவனைத் துதிக்கும் வேண்டற் பாக்கள் உள. கும்பகோணம் துரைசாமிப் பிள்ளை, வலங்கிமான் ராமானுஜ நாயுடு என்பார் இதற்கு சாற்றுக் கவிகள் பாடியுள்ளார். இதில் உள்ள கீர்த்தனைகள், ஹரி பஜனையில் சேர்ந்து பாடுவதற்கு உரியன. viii. 972/1916/III.

Q22: 417

லக்ஷ்மிநரசிம்மாசாரி, பிள்ளைப்பாக்கம்.—(மொ.து.)

646. i. தசாவதார ஸ்தோத்திரம்: முதற் பதிப்பு; ii. கார்டியன் அச்சுக்கூடம், சென்னை; iii. டிசம்பர், 1918; iv. செ.மூ. உ.ப. 35; v. 18×13 செ.மீ.; vi. 0–4–0; vii. விஷ்ணுவின் பத்து அவதாரங்களைப் பற்றிய செய்திகள் வடமொழியிலிருந்து தமிழுக்குப் பாடலாக மொழி பெயர்க்கப்பட்டு விளக்க உரைகளுடன் தரப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ நிகமாந்த மகாதேசிகன் அருளிச் செய்த வடமொழி நூலின் தமிழாக்கம் இந்நூல். தமிழ்ப்பாடங்களுக்குக் கருத்துரையும், குறிப்புரையும் சேர்க்கப்பட்

டிருக்கின்றன. வடமொழி சுலோகங்கள் கிரந்த எழுத்தில கொடுக்கப்பட்டுள்ளன. viii. 428/1919/I.

Q22: 417

647. i. ஸ்ரீயப்பதியின் திருத்தாள் விபவம்: முதற் பதிப்பு; ii. எம். ஆர். குமாரசாமி பிள்ளை, திருக்கோவிலூர்; புஷ்பால பாம்பா விலாச அச்சுக்கூடம், திருக்கோவிலூர்; iii. ஜூன், 1919; iv. செ.மூ.எ. 15; v. 8×12 செ.மீ.; vi இலவசம்; vii. திருக்கோவிலூரில் விளங்கும் திருமாலைப் பற்றிப் போற்றி எழுதப்பட்ட பாடல்கள் இவை. பாடல்கள்தோறும் இறைவனுடைய திருவடிப் பெருமை சிறப்பிக்கப்பட்டிருக்கிறது. viii. 149/1919/III-

Q22:417

லோகநாத முதலியார் ஷண்முகதாசன்

648. i. வரதராஜப் பெருமாள் மாலை; ii. லோகநாத முதலியார், வெண்ணெய்நல்லூர்; சரஸ்வதி விலாசம் பிரஸ், செங்கல்பட்டு; iii. எப்ரல், 1918; iv. செ.மு.எ. 5+30+1; v. 19×11 செ.மீ.; vi. இலவசம்; vii. மதுராந்தகம் தாலூகா, ஜமீன் சூணம்பேடு கிராமத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் வரதராஜப் பெருமாள்மீது பாடப்பெற்ற பக்திப்பாடல்களைக்கொண்டது இந்நூல். திரு. கன்னியப்ப முதலியார், அ.கி. கனகசபை முதலியார், ஆகியோர். தந்த சிறப்புப் பாயிரங்களுடன் கூடியது. viii. 543/1918/II,

Q22:417

விலக்ஷணானந்த சுவாமிகள், தேவாரநகரம்

649. i. வெங்கடேஸ்வர பகவான் ஸ்தோத்திர விலாசம்: முதற் பதிப்பு; ii. வித்யா சந்தானம் அச்சியந்திரசாலை, பாலக்காடு; iii. செப்டெம்பர், 1918; iv. செ.மூ.எ. 256; v. 19×11 செ.மீ.; vi ..... ; vii. திருப்பதி மலையில் கோயில் கொண்டுள்ள வெங்கடாசலபதியைப் புகழும் இருநூற்று ஐம்பத்தாறு தோத்திரப் பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். தலைமலை என்பது திருவேங்கட மலையைக் குறிப்பதாகும். எனவே, "தலைமலை வெங்கடேஸ்வரன்" என்றும் அழைக்கப்படுகின்றார். இம்மலையில் நிகழ்ந்த தெய்வ அற்புத நிகழ்ச்சிகள் பல குறிக்கப்பட்டுள்ளன. viii. 1077/1918/III.

Q22: 417

வெங்கடகிருஷ்ணையர், ந., குமாரபாளையம்

650. i. ரங்கநாத கீதாமிர்தம்: முதற் பதிப்பு; ii. சு. முத்துசாமிக் கவுண்டர், பொள்ளாச்சி; கோபால விலாசம்

அச்சியந்திரசாலை, பொள்ளாச்சி ; iii. ஜூன், 1920 ; iv. செ.மூ.ப. 34 ; v. 21×14 செ.மீ.; vi. 0–4–0 ; vii. திருவரங்கத்தில் விளங்கும் ரங்கநாத சுவாமியைப் போற்றிப் பாடப்பெற்ற துதிப் பாடல்கள் இதில் அடங்கியுள்ளன. இதற்குக் குமுணபுரி மணியம் கொ. வி.தி. இராமானுஜய்யர், மதுரைத் தமிழ்ச் சங்க அங்கத்தினர் எம். பழனிச்சாமிக் கவுண்டர் முதலியோர் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 279/1920/III.

Q22 : 417

651. i. வேங்கட பெருமாள் பாடல் : முதற் பதிப்பு ; ii. சி. ரங்கைய நாயுடு, சென்னை ; சுப்ரமணிய விலாசம் பிரஸ், சென்னை ; iii. செப்டெம்பர், 1917 ; iv. செ.மூ.ப. 8 ; v. 20×13 செ.மீ. ; vi. 0–1–0 ; vii. இதில் திருப்பதி வேங் கடேஸ்வரர் பாடலும், சிங்காரக்கும்மியும், திருச்சானூர் அலர் மேல் மங்கையம்மன் பிரம்மோற்சவக் கும்மியும் அடங்கியுள் ளன; viii. 1014/1917/III.

Q22:417

652. i. ஜீவதாரக பிர்ம மந்திரமும் ஆத்ம சங்க்ரஹ ராமாயணமும்; ii. எம்.எஸ். கணபதி நாயுடு, கோயில்பட்டி ; சைவ சமாஜம் பிரஸ், கோயில்பட்டி ; iii. 1919 ; iv. செ.மூ.ப. 7 ; v. 17×11 செ.மீ. ; vi......; vii. ஜீவதாரஹபிர்ம்ம மந்திர மும், ஆத்ம ஸங்க்ரஹ ராமாயணமும் இதில் அடங்கியுள்ளன. இது, தினசரிக் கடவுள் வழிபாட்டிற்கு மிகவும் உபயோகம் உள்ளதாக இருக்கும். இதில் உள்ள ஆத்ம ராமாயணம் "சுத்தப்ரம்ஹ பராத்பரராம், காலாத்மக பரமேஸ்வரராம்" எனத் தொடங்கிப் பாடப்பெறும் நாமாவளியாகும். viii. 396/ 1919/IV.

Q22 : 417

## 249. 554 வைணவ புராணம்

**நாராயணசாமி பிள்ளை, டி.பி.**

653. i. தசாவதாரம் : முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ணசாமி ஐயர், கும்பகோணம் ; கிருஷ்ண விலாச பிரஸ், கும்பகோணம் ; iii. ஏப்ரல், 1918 ; iv. உ. ப. 120 ; v. 16×11 செ.மீ. ; vi. 0–9–0 ; vii. திருமால் அவதரித்த பத்து அவதாரங்களைப் பற்றி மிகச் சிறப்பாகவும், சுருக்கமாக வும், ஆசிரியர் விளக்கியுள்ளார். பத்து அவதாரங்களைப் பற்றிக் கூறுவதால், இதற்குத் 'தசாவதாரம்' என்று பெயரிடப்பட்டி ருக்கிறது. கால அளவு வாய்ப்பாடு ஒன்று நூன் முகப்பில் தரப்பட்டுள்ளது. கிருஷ்ணவதாரப் பகுதியில் அரசர்களின் மரபுப் பட்டியல் ஒன்றுண்டு; viii. 340/1918/II.

Q22:22

**வராக நயினர்**

654. i. கைசிக மஹாத்மியம் முதற் பதிப்பு; ii. கே.பி. ஸ்ரீநிவாசாரியார், சென்னை; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. ஜனவரி, 1918; iv. செ.மூ.உ.எ. 25; v. 21×14 செ.மீ.; vi. வராகபுராணத்தில் கூறப்படும் திருமால் அடியாரான நம்பாடுவானை என்பவனைப் பற்றி இதில் கூறப்பட்டுள்ளது. கிரந்த நடையில், பல பகுதிகள் இடையிடையே உண்டு. அவற்றிற்கு நேரான உச்சரிப்புடன் தமிழிலும் அச்சுலோகங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஸ்ரீபாராசர பட்டர் என்பார் எழுதிய இதன் விளக்கமும் உடன் தரப்பட்டிருக்கிறது; viii. 471/1918/I.

Q22:22

## 294.554 வைணவம் : பொது

**கிருஷ்ணு, கோ. லா.நா.பா.**

655. i. ராமாநுமார் திருவிளையாடல்: முதற் பதிப்பு; ii. கோ.லா. நா.பா. கிருஷ்ணு, காவேரிபாக்கம்; ஸ்ரீலட்சுமி நாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. 1918; iv. உ.ப. 31; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0; vii. "ஸ்ரீராமாநுமார் திருவிளையாடல்" என்று இந்நூலுக்குப் பெயரிட்டிருப்பினும், ராமனது பிறப்பைப்பற்றிக் கூறும் பாலகாண்டத்துச் செய்திகள் மட்டுமே இதன்கண் பேசப்படுகின்றன. நூலாசிரியரால் எழுதப்பட்ட முகவுரையொன்றிதற்குண்டு; viii. 86/1918/IV.

Q22

**திருவரங்கம் ஆண்டான் ஸ்வாமி.**

656. i. துராக்ரஹ நிராக்ருதி: முதற் பதிப்பு; ii. அனங்கராச்சாரி, காஞ்சிபுரம்; ஸ்ரீநிவாச அச்சுக்கூடம், காஞ்சீபுரம்; iii. மே, 1916; iv. உ.ப. 23; v. 22×14 செ.மீ.; vi. 0–4–0; vii. திவான்பகதூர் டி.டி. ரங்காச்சாரியாரால் வெளியிடப்படுவரும் "வேதாந்த தீபிகா" என்ற மதச் சார்புள்ள மாதவெளியீட்டில் வந்த கட்டுரைக்கு மறுப்புத் தெரிவிக்கும் வகையில் "துராக்கிரஹ நிராக்ருதி" என்ற இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. வடகலை, தென்கலை என்பவை தொடர்பாகச் சில கருத்து வேற்றுமைகளை அடிப்படையாகக் கொண்டது. viii. 1063/1916/III.

Q22

657. i. வாக்கிய குருபரம்பரை ஸ்ரீவைணவ மங்கையர் வாழ்க்கைப் பாடு ஸத்ஸம் பரதாயதாள மாலிகை: முதற் பதிப்பு; ii. சி. சென்ன கேசவுலு நாயுடு, சென்னை; ஸ்ரீநிகேதன அச்சுக்கூடம், சென்னை; iii. 1917; iv. செ.மூ.ப. 21; v. 13×9

செ.மீ.; vi. 0–1–0; vii. வைணவ சமயப் பிரிவின் கொள்கைகள் இதில் விளக்கப்பட்டிருக்கின்றன. வைண வனுக்கு வாழ்க்கைப்பட்ட ஒரு பெண், அக் குடும்பத்தின் நடை முறையொழுங்குகளைத் தொகுத்து உரைக்கிருள். இதனால் வைணவ சமயத்தாரின் வாழ்வுமுறை புலனாகிறது. "சத்ஸம் ப்ரதாய தரளமாலிகை" என்னும் பகுதியில் நல்லொழுக்கமும், பக்தி மார்க்கமும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளன. இதில் உள்ள பாடல்கள் ஒவ்வொன்றும் 'அண்ணே' என்று விளித்துப் பேசுவதாக அமைந்துள்ளது; viii. 662/1917/II.

Q22

## 294. 555 ராமகிருஷ்ணர் இயக்கம்

**சொக்கலிங்கம் பிள்ளை, சென்னை (மொ.து.)**

658. i. பூரண சுகம்: முதற் பதிப்பு; ii. பு. கு. கந்தசாமிப் பிள்ளை; அமெரிக்கன் டயமண்ட் பிரஸ், சென்னை; iii. செப்டெம்பர், 1916; iv. உ.ப. 18; v. 18×13 செ.மீ.; vi. 0–1–6; vii. முறையான ஆரோக்கியத்தைப் பற்றியும், நல்ல சுகத்தைப் பற்றியும், சுவாமி அபேதாநந்தா என்பார் ஆங்கிலத்தில் பேசியதன் தமிழ் மொழி பெயர்ப்பு. இதனை மொழி பெயர்த்தவர் வ. சொக்கலிங்கம் பிள்ளை என்பவரா வார். இதனை லோகோபகாரிப் பத்திரிகையிலிருந்து எடுத்து வெளியிட்டவர் பு.கு. கந்தசாமிப் பிள்ளை ஆவார். வேதாந்த வித்யா மாலிகையின் முதல் மலராகும் இவ்வெளியீடு. viii. 967/1916/III.

△2xM36

**ராமகிருஷ்ண பரமஹம்சர்**

659. i. ராமகிருஷ்ண பரமஹம்ச தேவருடைய ஞானோபதேசங் கள்—250: முதற் பதிப்பு; ii. எஸ். நாராயண ரெட்டியார், வேலூர்; மினர்வா பிரஸ், சென்னை; iii. 1917; iv. உ.ப. 79; v. 18×13 செ.மீ.: vi. 0–6–0; vii. இந்நூலில் இராமகிருஷ்ண பரமஹம்சருடைய 250 நீதி மொழிகள் அடங் கியுள்ளன. இராமகிருஷ்ணரின் புகைப்படம் நூல் முதலில் உண்டு. இதன்கண் உள்ள பொன்மொழி ஒவ்வொன்றும் பொன்னெனப் போற்றுந்தகையது. எளிய முறையில் அமைந்து கற்பார்க்குக் கழிபேருவகையை யூட்டுவதாயுள்ளது இந்நூல். சுவாமிகள் ஞானோபதேசங்களைக் கொண்ட ஆங்கிலம், தமிழ் நூல்களையும் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார். மகேசகுமார சர்மா என்பார் 561 உபதேச மொழிகளைத் தமிழில் இவருக்கு முன் வெளிப்படுத்தியவராவார். இவர்தம் உபதேசங்கள் சாதி, மத, இன பேதமின்றி எல்லோருக்கும் ஒத்த நெறியைக் காட்டுகின்றன; viii. 1087/1918/I.

△2xM36

ஞான மார்க்கம் ஆகியவை குறித்துப் பதினெட்டு மந்திரங்கள் சொல்லப்பட்டுள்ளன. கர்ம, ஞானம், மார்க்கங்கள் இதன்கண் விவரிக்கப்பட்டுள்ளன. துவைத ஞானம், விசிஷ்டாத் வைத ஞானம், அதுவைத ஞானம் என்னும் மூவகை ஞானங்களை யும் தக்க உவமைகளால் விளக்கிக் கூறியுள்ளார். viii. 280/1919/III.

Q127 : 25

ராமநாத சாஸ்திரி, நா., பெலாஜூர். (மொ.து.)

679. i. உபநிஷத் பஞ்சகம் : முதற் பதிப்பு ; ii. ஆர். வைத்தியநாத ஐயர் ; ஸ்ரீவாணி பூஷணம் அச்சுக்கூடம், திருவல்லிக்கேணி, சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 52 ; v. 18×12 செ.மீ.; vi. 0–5–0 ; vii. ஐந்து உபநிஷத்துகள் வடமொழியிலிருந்து நேராகத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவையாவண: கர்ப்போபநிஷத, ஜாபாலி உபநிஷத், வாசுதேவோபநிஷத், யோகதத்வோபநிஷத், ஸந்யாஸோபநிஷத் என்பனவாம். இவை, பிறப்பு தொடங்கிப் படிப்படியாக சந்நியாசத்தின் தத்துவங்கள் வரையில் விளக்குவதால், இவை, நமக்கு ஒரு வாழ்க்கையியல் பாடமாகக் கருதத் தக்கனவாகும். viii. 145/1916/II.

Q1 : 24

ஸ்ரீநிவாச ஐயங்கார், சி.ஆர். (மொ.து.)

680. i. ஈஸ்வாஸ்யோபநிஷத், கேனோபநிஷத் : முதற் பதிப்பு ; ii. சி. ஆர். ஸ்ரீநிவாசய்யங்கார், சென்னை ; கமர்ஷியல் அச்சுக் கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1919 ; iv. உ.ப. 43+50 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. புகழ்பெற்ற இரண்டு உபநிஷதங்களைத் தமிழில் விளக்கி, இவற்றிற்கு மூன்றுவித வேதத் தத்துவமாகிய அத்வைத, விசிஷ்டாத்வைத, துவைத முறையில் கூறும் கருத்துரைகளைத் தந்து எழுதப்பட்டது, இந்நூல். viii. 964/1919/IV.

Q127 : 25

## 297 இசுலாம்

அஞ்சுமனே ரஹமத், மதுரை

681. i. நிபந்தனைகள் : முதற் பதிப்பு ; ii. பி. சையது ஷம்சுத்தீன் சாயபு, மதுரை; ஷம்ஸியா அச்சியந்திரசாலை, மதுரை ; iii. பிப்ரவரி, 1919; iv. உ.ப. 22 ; v. 21×14 செ. மீ.; vi.........; vii. முகமதியர்கள் மதுரையில் 1917ஆம் ஆண்டு மே 25ஆம் தேதியில் ஏற்படுத்திய சங்கத்தின் உறுப்பினர்கள், கொள்கைகள், விதிமுறைகள், நடவடிக்கைகள் முதலியனவற்றைத்

vi. 1-0-0; vii. சுவாமி விவேகாநந்தர் ஆற்றிய சொற்பொழிவுகள், யாவரும் எளிதில் புரியும் வண்ணம், மொழி பெயர்க்கப்பட்டு இந்நூலில் வெளியிடப்பட்டுள்ளன. ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளின் உபன்னியாசங்களாகிய 'ஞானத்திரட்டு' என்பது இந்நூலின் முழுப் பெயர். இதனை மொழி பெயர்த்தவர், 'தத்துவதரிசினி', 'ஞானதரிசினி' என்னும் நூல்களின் ஆசிரியராகிய வி. நடராஜ ஐயர் ஆவர். இதில் உள்ள இரண்டு பாகங்களிலும் முறையே பக்தியோகம், ஞானயோகம் என்பவை விவரிக்கப்பட்டுள்ளன; viii. 1130/1919/I.

△ 2xM63

664. i. பந்தமும், முக்தியும்: முதற் பதிப்பு; ii. ஸ்ரீராமகிருஷ்ண விவேகாநந்த வேதாந்த சங்கம், சிவகங்கை; ஸ்ரீகலா அச்சுக்கூடம், சிவகங்கை, iii. 1917; iv. உ.ப. 16; v. 14×11 செ.மீ.; vi. 0-1-0; vii. அமெரிக்காவில் விவேகாநந்த சுவாமிகள் ஆற்றிய சொற்பொழிவின் தமிழாக்கமே இது; viii. 656/1920/I.

△ 2xM63

665. i. மனிதனது உண்மை ஸ்வரூபம்: முதற் பதிப்பு; ii. தாம்ஸன் அண்டு கம்பெனி, சென்னை; மினர்வா அச்சுக்கூடம், சென்னை; iii. அக்டோபர், 1919; iv உ.ப. 65; v. 18×13 செ.மீ.; vi. 0-6-0; vii. இலண்டனில் சுவாமி விவேகாநந்தர் ஆங்கில மொழியில் பேசியதன் தமிழாக்கமே இது. இதற்கு மற்றோரிடத்தில் "யதார்த்த மனிதனும் சாயா மனிதனும்" என்ற பெயருமுண்டு. பல உபநிடதங்களிலிருந்து மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. விவேகாநந்த சுவாமிகளின் திருவுருவப் படமொன்றும் இதன்கண் இருக்கின்றது; viii. 428/1920/I.

△ 2xM63

666. i. முக்திநிலையும் கர்மயோக மார்க்கமும்: முதற் பதிப்பு; ii. ஆர். நாராயணசாமி ஐயர், சென்னை; பி. ஆர். ராம ஐயர் அச்சுக்கூடம், சென்னை; iii. 1916; iv. உ.ப. 33; v. 18×13 செ.மீ.; vi. 0-3-0; vii. சுவாமி விவேகாநந்தரின் சொற்பொழிவுகளிலிருந்து திரட்டி மொழி பெயர்க்கப்பட்டது. ஸ்ரீ சுவாமிகளுடைய அபிப்பிராயங்களை விடாமலும் ஜாக்கிரதையாகவும் எளிய நடையில் மொழிபெயர்க்க முயன்றுள்ளார் ஆசிரியர். கர்மாவின் தத்துவங்களை விளங்க உரைப்பது இந்நூல். ஸ்ரீ சுவாமிகளின் கருத்துக்களைத் திரட்டித் தமிழில் மொழிபெயர்த்தவர் ஆர். நாராயணசாமி ஐயர் ஆவார்; viii. 316/1916/II.

△ 2xM63

667. i. விவேகாநந்த சுவாமிகள் கடிதங்கள் : முதற் பாகம் ; ii. சுப்ரமணியசிவா, சென்னை ; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை; சென்னை ; iii. 1916 ; iv. உ.ப. 104 . v. 14×11 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. சுவாமி விவேகாநந்தர் இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்சு முதலிய நாடுகளில் யாத்திரை செய்து வருகையில், இந்தியாவிலுள்ள தமது மாணவர்களுக்கும் நண்பர்களுக்கும் எழுதிய கடிதம். இந்நூல் ஆங்கில மொழியினின்றும் மொழிபெயர்க்கப்பட்டது. மொழிபெயர்த்து வெளியிட்டவர் சுப்ரமணியசிவா என்பவர் ஆவர்; viii. 541/1916/II.

△2xM63

668. i. விவேகாநந்த ஸ்வாமிகளின் கடிதங்கள் : முதற் பதிப்பு ; ii. ஞானபானு காரியாலயம், மயிலாப்பூர், சென்னை ; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1916; iv. உ.ப. 104. v. 14×11 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. விவேகாநந்தர் அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி, பிரான்சு முதலிய நாடுகளைச் சுற்றிப் பார்த்தார். அவர் எங்கிருந்தபோதிலும், இந்தியாவிலுள்ள தமது மாணவர்களுக்கும், நண்பர்களுக்கும் அடிக்கடிக் கடிதம் எழுதி ஊக்குவித்துக்கொண்டிருந்தார். இந்நூலில் உள்ள கடிதங்கள், அவற்றில் ஒரு சில பாகங்களேயாகும். சுவாமிகளின் வாழ்க்கைச் சுருக்கமும் (1863 1902) முகவுரையில் கூறப்பட்டிருக்கிறது; viii. 1068/1917/III.

△2xM63

669. i. வேதாந்த ரகசியம் : முதற் பதிப்பு ; ii. சை. ந. பாலசுந்தரம் ; சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, கோமளீசுவரன் பேட்டை, சென்னை ; iii. ஆகஸ்ட், 1919 ; iv. உ. ப. 310 ; v. 18×13 செ.மீ. ; vi. 1-8-0 ; vii. இந்து சமயத்தை ஒட்டிய வேதாந்தத் தத்துவங்கள் இதில் விளக்கப்பட்டுள்ளன. விவேகாநந்த சுவாமிகளின் திருவுருவப் படத்துடன் கூடியது. டாக்டர் எஸ். சுப்ரமணிய ஐயர் அவர்கள் தந்த நூன்முகமும், அவர்தம் நிழற்படமும் இந்நூலுக்கணி செய்கின்றன. சுவாமிகளின் உரையைத் தமிழில் மொழிபெயர்த்தவர் சுப்ரமணிய சிவா என்பவராவார். ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளின் சரித்திரச் சுருக்கமும் இதில் தரப்பட்டிருக்கிறது. சுவாமிகள் அருளிய அநுபவ வேதாந்தம், வேதாந்த உண்மையை உணர விரும்புவோருக்குத் தெளிவான நன்னெறி காட்டுவதாகும்; viii. 1047/1919/III.

△2xM63

670. i. ஹிந்துமத வேதாந்தப் பிரசங்கம்: இரண்டாம் திருத்திய பதிப்பு ; ii. எஸ். நாராயண ரெட்டி, வேலூர் ; மினர்வா அச்சுக்கூடம், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப. 85 ; v. 16×12 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. அமெரிக்க தேசத்து சிகாகோ

நகரத்திற் கூடிய சர்வ மத மகா சபையில் சுவாமி விவேகாநந்தர் ஆற்றிய இந்துமத வேதாந்த சாரம். இஃது ஆங்கில மொழியி னின்றும் செய்யப்பட்ட மொழிபெயர்ப்பு நூல். 1893-ம் ஆண்டு செப்டம்பர் 11-ஆம் நாள் சுவாமிகளால் நிகழ்த்தப்பெற்றது. இதன் முடிவில், ஆத்ம ஞானம் அடைந்த ஜீவன் முத்தர் களால் அருளப்பட்ட பக்தி, ஞான வைராக்கியங்கள் நிறைந்த பாக்களும்; உபதேசங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இம்மொழி பெயர்ப்பு நூலின் ஆசிரியர், வேலூர், எஸ். நாராயண ரெட் டியார் ஆவார். viii. 194/1916/II.

△2xM63

## 294·592 புனித நூல்கள் ; பகவத் கீதை.

671. i. பகவத்கீதை : முதற் பதிப்பு ; ii. ச. ராம்தாஸ் நாயுடு ; கணேச அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர் 1916 ; iv. செ.மூ.ப. 14 ; v. 18×12 செ.மீ.; vi. இல்லை ; vii. பகவத் கீதையின் மூலமும், விளக்க உரைகளும் இதில் அடங்கியுள்ளன. 1892-ல் பண்டித லக்ஷ்மணாசாரியார் என்பார் சென்னை கோவிந்தப்ப நாயக்கர் பள்ளியில் எல்லோரும் அறியும் வண்ணம் சொற்பொழிவு செய்தனர். அதனை யாவரும் உணரும் வண்ணம், இவ்வாசிரியர், உபநிடத வாக்கிய விளக்கம் முதலியவற்றுடன் இந்நூல் வடிவில் யாத்துள்ளார். இதில், முதல் ஆறு அத்தியாயங்கள் அடங்கியுள்ளன. viii. 715/ 1916/IV.

R65,6

672. i. பகவத்கீதை: ஸம்பூர்ண ப்ரதம ஷஷ்டோத்யாயம் ii. செ. மு. வேலு முதலியார், சென்னை, கணேச அச்சுக் கூடம், சென்னை; iii. மார்ச், 1917 ; iv. செ.மூ. உ. ப. 391 ; v. 19×12 செ. மீ. ; vi. 1–4–0 ; vii. பகவத்கீதை நூலின் முதல் ஆறு அத்தியாயங்களைப் பற்றிய விளக்கமே இந்நூல். பரமஹம்ஸ சச்சிதாநந்த யோகீஸ்வரர் அவர்களின் புகைப்படமும், கடப்பையைச் சார்ந்த புஷ்பகிரியருகில் உள்ள கோயிலினையும், அருகில் ஓடும் பெண்ணையாற்றினையும் காட்டும் படமும் இதில் உண்டு. கீதை பிறந்த வரலாறு முதற்கண் விளக்கப்பெற்றிருக்கிறது. viii. 98/1917/II.

R65,6

673. i. பகவத்கீதை—மூலமும் உரையும் ; ii. கன்னையா நாயுடு ; ஸ்ரீலட்சுமி நாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1919 ; iv. செ.மூ.உ.ப. 184 ; v. 22×14 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இதில் பகவத்கீதையின் மூலமும் உரையும் தரப்பட்டுள்ளன. 18 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு விளக்கப் பட்டுள்ளது. இந்நூலின் ஆரம்பத்தில் ஸ்ரீபகவத்கீதா மகத்துவச் சுருக்கமும், பாயிரப் பகுதியும் அடங்கியுள்ளன.

'பரமார்த்த தரிசனமென்னு நாமத்திதனை' என்று பாயிரத்துள் காணப்படுவதால், இதற்குப் 'பரமார்த்த தரிசனம்' என ஒரு பெயர் உண்டு என்பது போதரும். விருத்தக் கவிதைகளில், நூல் அமைந்துள்ளது. தெளிவான பொழிப்புரையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 255/1919/II.

R65,6

674. i. பகவத்கீதை வசனம்: முதற் பதிப்பு; ii. துரைசாமி முதலியார், சென்னை; அமெரிக்கன் டயமண்ட் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1919; iv உ.ப. 199; v. 13×9 செ.மீ.; vi. 0–8–0; vii. கிருஷ்ண பரமாத்மா அருளிச் செய்த பகவத்கீதை உரைநடையில் விளக்கப்பட்டுள்ளது. பாரதப் போரின் தொடக்கத்தில், இருதிறப் படைகளையும் கண்டு கலக்கமுற்ற அருச்சுனனுக்குக் கண்ணன் திருவாய் மலர்ந்தருளியதாக வழங்கப்படும் கீதையின் சாரமே ஈண்டு தரப்பட்டுள்ளது. viii. 1135/1919/I.

R65,6

675. i. பகவத்கீதை வசனம்: திருத்திய ஐந்தாம் பதிப்பு; ii. கொ. செல்வரங்கம்மாள் அண்டு கோ., சென்னை; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1919; iv. உ.ப. 192; v. 22×15 செ.மீ.: vi. 1–4–0; vii. வடமொழி மூலத்திற்கியையச் சங்கரபாஷியார்த்தத்தை அனுசரித்துத் தமிழாக்கம் செய்யப்பெற்றது. நூல் வெளியிடும் உரிமையை, தஞ்சை, ந. கோவிந்தசாமிப் பிள்ளையவர்களிடமிருந்து பெற்று வெளியிடப்பெற்றது. பகவத்கீதையின் கருத்தை உரைநடையில் தெளிவுற விளக்குகிறது. 'பகவத்கீதா மான்மிய சங்கிரகம்' என்னும் ஒரு பகுதியும் நூலின் முதற்கண் உளது. கண்ணன் கொண்ட 'விசுவ ரூபம்' படம் ஒன்று முதலில் தரப்பட்டிருக்கிறது. viii. 656/1919/III.

R65,5

## 294·592 உபநிடதம்

குப்புஸ்வாமி, வி., தஞ்சாவூர் (மொ.து.)

i. அமிருத பிந்தூபநிடதம் (தொ. எ. 676 பார்க்க); ii. ஸ்ரீவித்யா விநோதினி முத்திராசாலை, தஞ்சாவூர்; iii. 1919; iv. செ.மூ.எ. 29; v. ......; vi....; vii. இதில், யசுர குலத்தின் சாரமாகிய அமிருத பிந்தூப நிடதம் கூறப்பட்டுள்ளது. viii. 284/1920/I.

Q11 : 24

676. i. கைவல்யோபநிடதம் (அமிருத பந்தூபநிடதம் முதலியன); ii. ஸ்ரீவித்யா விநோதினி முத்திராசாலை, தஞ்சாவூர்; iii. 1917; iv. செ.மூ.எ. 42; v. 16×12 செ.மீ.; vi. 0–5–0;

vii. அதர்வ வேதத்தின் சாரமாகிய கைவல்யோபநிடதம் இதன்கண் விளக்கப்படுகிறது. இதனால், 'அதர்வ வேதிய கைவல்யோபநிடதம்' என்றும் குறிக்கப்பட்டிருக்கிறது. viii. 284/1920/I.

Q11 : 24

i. சுகரகசியோபநிடதம் (தொ. எ. 676 பார்க்க) ; ii. ஸ்ரீவித்யா விநோதினி முத்ராசாலை, தஞ்சாவூர் ; iii. 1919 ; iv. செ.மூ.எ. 62 ; v. ...... ; vi. ...... ; vii. யசுர் வேதத தின் சாரமாகிய சுகரகசியோபநிடதம் இதன்கண் சொல்லப் படுகிறது. viii. 284/1920/I.

Q11 : 24

i. ஸ்கந்தோபநிடதம் (தொ. எ. 676 பார்க்க) ; ii. ஸ்ரீவித்யா விநோதினி முத்ராசாலை, தஞ்சாவூர் ; iii. 1919 ; iv. செ.மூ.எ. 12 ; v. ...... ; vi. ...... ; vii. யசுர்வேதத் தைத் தழுவிய ஸ்கந்தோப நிடதம் இதில் விவரித்துக் கூறப் பட்டுள்ளது. viii. 284/1920/I.

Q11 : 24

குமரகுருதாச சுவாமிகள், பாம்பன்

677. i. தகராலய ரகசிய மூலமும், சதானந்த சகாரமென்னுமுரை யும்; முதற் பதிப்பு ; ii. வைஜயந்தி அச்சுக்கூடம், சென்னை & பிரசிடென்சி அச்சுக்கூடம் ; iii. 1916 ; iv. செ.மூ.உ.எ. 117; v. 22×14 செ.மீ. ; vi. 2–8–0 ; vii. சதானந்த சாகரம் என்று சொல்லப்படும் உபநிஷத்தின் தத்துவம் இதில் விளக்கப்பட்டுள்ளது. இது, இரண்டு பெரும் பகுப்புகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதலாங் காண்டத்தில், நூல் வரலாற் றியல், பிண்டதகர வித்தையியல், அண்டதகர வித்தையியல், இரண்டாங் காண்டத்தில், ஐயமருத்தருளியல், தோத்திரவியல், முடிபியல் என்றவாறு பிரித்து விளக்கப்பட்டுள்ளது. இதுவும், 'பரிபூரணானந்த போதம்' என்பதும், அவர்கள் அருளிய பிரமாண நூல்களுள் சிறந்தனவாம். சுவாமிகளின் தத்துவக் கொள்கைகள் குறித்து, ச. சசிதாநந்தம் பிள்ளையவர்கள் தாம் எழுதியுள்ள முன்னுரையில், நன்கு விளக்கியுள்ளார். ஆசிரியர் இந்நூலை 30—12—1896-ல் எழுதி முற்றுவித்தனர். இதற்கு உரை விளக்கம் எழுதினரும் மூலநூல் ஆசிரியரே. viii. 769/1917/II.

Q1 : 24

பாலசுப்ரமணிய பிரம்ம ஸ்வாமிகள்

678. i. ஈசாவாஸ்யோபநிஷத்சார சங்கிரகம் : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. க. நாராயணசாமி நாயுடவர்கள் ; ஆர்ஃபனேஜ் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜுன், 1919 ; iv. செ.மூ.உ.ப. 12; v. 14×11 செ.மீ. ; vi. இலவசம் ; vii. இதில் கர்ம மார்க்கம்,

ஞான மார்க்கம் ஆகியவை குறித்துப் பதினெட்டு மந்திரங்கள் சொல்லப்பட்டுள்ளன. கர்ம, ஞானம், மார்க்கங்கள் இதன்கண் விவரிக்கப்பட்டுள்ளன. துவைத ஞானம், விசிஷ்டாத் வைத ஞானம், அதுவைத ஞானம் என்னும் மூவகை ஞானங்களை யும் தக்க உவமைகளால் விளக்கிக் கூறியுள்ளார். viii. 280/ 1919/III.

Q127 : 25

ராமநாத சாஸ்திரி, நா., பெலாகூர். (மொ.பெ.)

679. i. உபநிஷத் பஞ்சகம் : முதற் பதிப்பு ; ii. ஆர். வைத்தியநாத ஐயர் ; ஸ்ரீவாணி பூஷணம் அச்சுக்கூடம், திருவல்லிக்கேணி, சென்னை ; iii. 1915 ; iv. உ.ப. 52 ; v. 18×12 செ.மீ.; vi. 0–5–0 ; vii. ஐந்து உபநிஷத்துகள் வடமொழியிலிருந்து நேராகத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவையாவன: கர்ப்போபநிஷத், ஜாபாலி உபநிஷத், வாசுதேவோபநிஷத், யோகதத்வோபநிஷத், ஸந்யாஸோபநிஷத் என்பனவாம். இவை, பிறப்பு தொடங்கிப் படிப்படியாக சந்நியாசத்தின் தத்துவங்கள் வரையில் விளக்குவதால், இவை, நமக்கு ஒரு வாழ்க்கையியல் பாடமாகக் கருதத் தக்கனவாகும். viii. 145/1916/II.

Q1 : 24

ஸ்ரீநிவாச ஐயங்கார், சி.ஆர். (மொ.து.)

680. i. ஈஸ்வாஸ்யோபநிஷத், கேனோபநிஷத் : முதற் பதிப்பு ; ii. சி. ஆர். ஸ்ரீநிவாசய்யங்கார், சென்னை ; கமர்ஷியல் அச்சுக் கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1919 ; iv. உ.ப. 43+50 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. புகழ்பெற்ற இரண்டு உபநிஷதங்களைத் தமிழில் விளக்கி, இவற்றிற்கு மூன்றுவித வேதத் தத்துவமாகிய அத்வைத, விசிஷ்டாத்வைத, துவைத முறையில் கூறும் கருத்துரைகளைத் தந்து எழுதப்பட்டது, இந்நூல். viii. 964/1919/IV.

Q127 : 25

## 297 இசுலாம்

அஞ்சுமனே ரஹமத், மதுரை

681. i. நிபந்தனைகள் : முதற் பதிப்பு ; ii. பி. சையது ஷம்சுத்தீன் சாயபு, மதுரை; ஷம்ஸியா அச்சியந்திரசாலை, மதுரை ; iii. பிப்ரவரி, 1919; iv. உ.ப. 22 ; v. 21×14 செ. மீ.; vi.......... ; vii. முகமதியர்கள் மதுரையில் 1917ஆம் ஆண்டு மே 25ஆம் தேதியில் ஏற்படுத்திய சங்கத்தின் உறுப்பினர்கள், கொள்கைகள், விதிமுறைகள், நடவடிக்கைகள் முதலியனவற்றைத்

தெற்றென விளக்கக்கூடிய புத்தகம். இச்சங்கத்தின் பெயர், நோக்கங்கள், முதலியனவற்றைக் குறித்து ஆறு அத்தியாயங்களில் 94 நிபந்தனைகள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 632/1919/I.

Q7

682. i. ஈதே மீலாதேநபவிய்யா எனும் நாயகமவர்கள் பிறந்த தினக் கொண்டாட்டம்: முதற் பதிப்பு; ii. பாரதி பிரஸ், மன்னார்குடி; iii. அக்டோபர், 1917; iv. உ.ப. 8; v. 22×14 செ.மீ.; vi. இலவசம்; vii. நபிநாயகமவர்களின் பிறந்ததினம் கொண்டாடப்பட்டதைப்பற்றி இதில் கூறப்பட்டுள்ளன விழாக் குழுவினரின் வரவு-செலவு கணக்கு இறுதியில் தரப்பட்டுள்ளது. இது கூத்தாநல்லூர் சின்னப்பள்ளி வாயலில் நிகழ்ந்த விழாவைப் பற்றியதாகும். viii. 465/1917/IV.

Q7

செய்யது முகையத்தின் புலவர், மேலப்பாளையம்

i. குணங்குடிப் பதிகம் (தொ. எ. 720 பார்க்க); ii. செய்யது முகையத்தின் புலவர், மேலப்பாளையம்; ஸ்ரீவாணி விலாசம் பிரஸ், திருநெல்வேலி; iii. 1916; iv. செ.மூ.எ. 2+10; v........; vi..........; vii. இது குணங்குடி மஸ்தான் சாகிபுவின்மேல் பாடப்பட்ட துதிப்பாடல்களை உடையது; ஆசிரிய விருத்தப்பாவால் ஆகியது. viii. 92/1916/III.

Q7

683. i. நாச்சியார் கோவில் முஸ்லிம் சங்க முதற்கமலம்: முதற் பதிப்பு; ii. செயலாளர், முஸ்லீம் சங்கம், நாச்சியார் கோயில்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1920; iv. உ.ப. 205; v. 19×13 செ.மீ.; vi. 0–8–0; vii. 1919-ம் ஆண்டில் முஸ்லீம் சங்கத்தார் 35,200 நோட்டீஸ்கள் கொண்ட 20 இதழ்கள் பிரசுரித்து வெளியிட்டுள்ளார்கள். அதில் சொல்லப்பெற்றிருந்த செய்திகளின் தொகுப்பே இந் நூல். viii. 1009/1920/III.

Q7

நூர்முகையதீன் சாகிபு, உ.மு.கா., அபிராமம்

684. i. ஓர் சங்காபிமானியின் போலி நற்போதனைக்கு மறுப்பு; ii. உ. மு. கா. நூர்முகையதீன் சாஹிப், அபிராமம்; ஷம்ஸியா பிரஸ், மதுரை; iii. நவம்பர், 1919; iv. உ.ப. 13; v. 21×14 செ.மீ.; vi.... .... ; vii. முகமதிய மதத்தைப்பற்றிய தவறான மதப் பிரச்சாரம் ஒருவர் செய்ததை மறுத்து எழுதப்பட்ட புத்தகமாகும் இது. அபிராமத்தில் உள்ள "மல்ப உல்லகராத் முஸ்லீம் தர்மசபை" பற்றிய நடைமுறை நிகழ்ச்சிகள் குறித்து எழுதப்பட்ட புத்தகம்.

நடுவு நிலையாக நின்று உணரவேண்டும் என்னும் கருத்துப் பட சில நீதியுரைகளை இறுதியில் கொடுத்துள்ளார். viii. 900/1919/IV.

Q7

**முஹம்மது இபுருகிம் சாஹிபு**

685. i. மரண விளக்கம் மனதைத் துலக்கும்: முதற் பதிப்பு; ii. இட்டா. பார்த்தசாரதி நாயுடு, சென்னை; சக்கரவர்த்தி அச்சுக்கூடம், சென்னை; iii. 1915; iv. செ.மூ.ப. 36; v. 22×14 செ.மீ.; vi. 0–1–0; vii. உலக வாழ்க்கையானது நிலையானதன்று என்றும் யாவருக்கும் மரணம் நிச்சயம் என்றும் விளக்குகிறது. ஒருவர் செய்யும் நன்மை தீமைகளுக்கு ஏற்ற வண்ணம் பலன் அனுபவிப்பார் என்றும் எடுத்துக்காட்டுகிறது. viii. 47/1916/I.

Q7

**முஹம்மது இபுருகிம் சாஹிபு, மா., அன்னஞ்சி**

686. i. கோஷா அலங்காரம்: முதற் பதிப்பு; ii. கே. எஸ். எம். அப்துர் ரஹ்மான் ஸாஹிபு; முஹம்மதிய நேசன் அச்சுயந்திர சாலை, பள்ளப்பட்டி; iii. ஜூலை, 1918; iv. செ.மூ.ப. 16; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0; vii. முகமதிய மதத்தில் உள்ள பெண்கள் பர்தா அணிகின்ற வழக்கத்தைப் பற்றியது. அதாவது கோஷா அலங்காரத்தைப் பற்றிய பாடல்கள் இப்புத்தகத்தில் அடங்கியுள்ளன. கோஷா முறையின் அவசியமும் நடைமுறையில் உள்ள சில சீர் கேடுகளும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. பள்ளப்பட்டி என்னும் வள்ளல் நகரில வசிக்கும் ஆங்கில வித்தியா போதகாசிரியரும் செந்தமிழ்ப் பிரசங்க வித்துவானுமாகிய கே. எஸ். எம். அப்துர்ரஹ்மான் சாகிபு அவர்கள் இதற்குச் சாத்துக் கவி ஒன்று அளித்துள்ளார்கள். viii. 219/1918/IV.

Q7

**வைத்தியலிங்க செட்டியார்**

687. i. அல்லாசாமி பண்டிகை ஆனந்தநாகன் பாட்டு: முதற் பதிப்பு; ii. ஸன் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. செப்டம்பர் 1920; iv. உ.ப. 10; v. 20×12 செ.மீ.; vi. 0–1–0; vii. மொஹரம் பண்டிகையை முன்னிட்டு நடக்கும் விருந்தினைப் பற்றிப் புகழும் பாடல்களைக் கொண்டதாகும் இந்நூல். viii. 161/1920/IV.

Q7

ஷெய்கு செய்யிது முஹம்மது ஆலிமில் காதிரிய்யல் ஜலாலிய்யி சாகிபு, ஆ. செ. மு.

i. மரணத்தின் நினைப்பு மோக்ஷத்தின் அழைப்பு (தொ. எ. 733 பார்க்க); ii. ஆ.செ.மு. ஷெய்கு செய்யிது முஹம்மது ஆலிமில் காதிரிய்யல் ஜலாலிய்யி சாகிபு; சுப்பிரமணிய விலாசம் பிரஸ், சாத்தூர்; iii. 1916; iv. செ.மூ.எ. 90; v..........; vi..........; vii. மரணம் உலகில் தவிர்க்க முடியாதது என்பதனை எடுத்துக்காட்டும் முகத்தான் உலகத்தின் நிலையாமைகளைக் காட்டி, மோக்ஷத்தின் பெருமையை வெளியிடுவது. viii. 265/1916/III.

Q7

ஷைக்கு மீரான் முஹியத்தீன் ஆலிம் ஸாஹிப்

688. i. லிலாவுல் இஸ்லாம் புஸ்தகம்—முதல் வால்யூம்; முதற் பதிப்பு; ii. முஹம்மதியா பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1914; iv. உ. ப. 238; v. 21×14 செ.மீ.; vi. 1–0–0; vii. இந்நூல் வெளியிடப்பட்ட காலத்தில் (1914) வட இந்தியாவில் ஆரியசமாஜமென்று ஒரு கூட்டத்தினரும், காசியான் என்ற மற்றொரு கூட்டத்தினரும் இஸ்லாமைப்பற்றிப் பலவாறு பேசிவந்ததைக் கண்டிக்கும் வகையில் அமைந்தது இந்நூல். பிழை திருத்தப் பட்டியல் ஒன்றும் உண்டு. பிற மதத்தார் கொள்கைகளினும் சுத்த சத்திய இஸ்லாம் மார்க்கத்தின் சிறப்புக்களைத் தொகுத்துக் கூறுவது. viii. 1156/1917/III.

Q7

## 297-2 இஸ்லாமிய கொள்கை விளக்கம்

அகம்மது மகுதி மவுலானா

689. i. முசீபத்து விலக்கல் முனாஜாத்து: மூன்றும் பதிப்பு; ii. முகம்மது அப்துல்லா சாய்பு; எஸ்டேட் பிரஸ், தேவகோட்டை; iii. ஏப்ரல், 1918; iv. செ. மூ. ப. 24; v. 22×14 செ.மீ.; vi. 0–3–0; vii. இஃது இஸ்லாமிய மத போதனையைப்பற்றி வெளியிடப்பட்ட சிறு புத்தகமாகும். இதில் துன்புறுங்கால் அல்லாவிடம் சொல்லவேண்டிய பக்தி நெறியினைப் பற்றியும் பிரார்த்தனையைப் பற்றியும் கூறப் பட்டுள்ளன. viii. 580/1918/III.

Q 7: 3

**அம்ஜத் இப்ருகிம் சாஹிபு, ஆ. மு., கூத்தாநல்லூர்**

690. i. குல்ஸாரெ ஜன்னத்: முதற் பதிப்பு; ii. சம்பகலெட்சுமி விலாச பிரஸ், மன்னார்குடி; iii. செப்டெம்பர், 1920; iv. உ.ப. 8; v. 22×15 செ.மீ.; vi........; vii. இஸ்லாம் மதப்பழக்கங்களை விளக்கும் புத்தகம் இந்நூல் viii. 227/1920/IV.

Q 7: 3

**காதர் முகைய்யதீன் புலவர், திருநெல்வேலிப்பேட்டை**

691. i. நவஹீஹத்துல் மூமினீன் மாலை: திருந்திய இரண்டாம் பதிப்பு; ii. எம். எ. சாகுல் அமீது லப்பை, சென்னை; ஷாஹுல் ஹமீதிய்யா அச்சியந்திர சாலை, சென்னை; iii, ஜனவரி, 1920; iv. செ.மூ.ப. 308; v. 22×14 செ.மீ.; vi. 1-8-0; vii. இதில் இஸ்லாம் சமயக் கொள்கைகளை வலியுறுத்தி எழுதப்பெற்ற பாடல்கள் அடங்கியுள்ளன. அச்சிற் பதிப்பித்த வரலாறு காதர் பாட்சாப் புலவரால் பாடல் வடிவில் தரப்பட்டுள்ளது. மேல் விசாரம் முத்து லெப்பை டீப் சாயபு, மேற்படி காதர்பாட்சாப் புலவர் முதலியோர் தந்த சாற்றுக் கவிகளுடன் கூடியது. மெஞ்ஞானக் குறவஞ்சி, ஆனந்த களிப்பு வகைகளிலும் பாடல்கள் அமைந்துள. viii. 295/1920/II.

Q 7: 3

**குதுபுல் ஆலம் ஹலாத்து பீர்முகம்மது சாகிபு ஒலியுல்லா, தற்கலை**

692. i. ம. அரிபத்து மாலை பொழிப்புரை: முதற் பதிப்பு; ii. எம். எ. ஷேக் மதார் சாயபு, சென்னை; மதாரிய்யாப் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1917; iv. செ.மூ.உ.எ. 611; v. 22×14 செ.மீ.; vi. 1-8-0; vii. அறம், பொருள், இன்பம் ஆகியவற்றைப் பற்றிய இஸ்லாமிய கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன. பொருட்பால், அருட்பால், காமத்துப்பால் என மூன்று பெரும் பகுப்பாக அமைந்தது; 611 பாடல்கள் கொண்டது. இதற்குச் செவ்வல் மாநகரம் எம்.எ. நெயினா முகம்மதுப் பாவலர் எழுதியுள்ள பொழிப் புரையும் தரப்பட்டிருக்கிறது. இஸ்லாமியர் சமய ஒழுக்கங்கள் வகுத்துக் கூறப்பட்டுள்ளன. viii. 602/1917/IV.

Q 7: 3

**நெயினா முகம்மதுப் பாவலர், எம். ஏ., செவ்வல்மாநகரம்**

693. i. ஒசியத்தென்னும் பொன்னரியா மாலை வசன காவியம்: முதற் பதிப்பு; ii. எம். எ. ஷேக் மதார் சாகிப், சென்னை; மதாரிய்யாப் பிரஸ், சென்னை; iii. நவம்பர், 1917;

iv. உ. ப. 121 ; v. 22×14 செ. மீ. ; vi. 1-4-0 ; vii. இந் நூலில் இஸ்லாமிய சமயக் குருவான முகம்மது அவர்களின் கொள்கைகளைப்பற்றிய விளக்கங்கள் உள்ளன. பர்தா முறை மிகவும் வற்புறுத்திக் கூறப்பட்டுள்ளது. நபிகள் நாயகத்தின் வரலாறும் இடையிடையே காணப்படுகின்றது. இது 400 வருஷங்களுக்கு முன் வாழ்ந்த மின்னு நூறுத்தீன் புலவர் பாடிய செய்யுள் நூலைப் பின்பற்றி எழுதப்பட்ட வசன நூலாகும். இப் புலவரின் சரித்திரச் சுருக்கத்தைப் பீடிகைப் பகுதியில் விவரித்துள்ளார். இவ்வாசிரியரின் பிற நூல்கள் 'ஞான மணி மாலை தாற்பரிய உரை, முகம்மதியப் புலவர்கள் ஜீவிய சரித்திரம், ம அரி யத்து மாலை பொழிப்புரை', முதலியனவாம். viii. 772/1817/IV.

Q7 : 3

நைனு முகம்மது சாகிப்

694. i. ஸஜ்ருஷ்ஷுப் பானி வஷ்ஷைபா அன் இர்த்தி காபில் கிபா : முதற் பதிப்பு ; ii. நைனு முகம்மது சாகிப் ; மு. அ. பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ. ப. 16 ; v. . . . . . ; vi. 0-2-0 ; vii. புறங்கூறுதலின் அநேக தன்மைகளைக் கூறி அவைகளை விலக்கும் வழியினையும் ஆசிரியர் இந் நூலின்கண் விளக்குகிறார். viii. 672/1916/II.

Q7 : 3

பிரிஞ்சி அஹமதிப்னு முகம்மது சாகிபு

695. i. நவீன வாசகத் திரட்டு : முதற் பதிப்பு ; ii. பி. அ. முகம் மது சாகிபு, வலங்கைமான் ; லெக்ஷ்மி விலாச அச்சுக்கூடம், கும்பகோணம் ; iii. ஜனவரி, 1918 ; iv. உ.ப.+செ. மூ. ப. 40 ; v. 21×13 செ. மீ. ; vi. 0-4-0 ; vii. இஸ்லாம் சமயத்தின் சிறப்புப் பற்றியும் முகமது நபியின் விளக்கங் களின் தன்மை பற்றியும் கூறப்பட்டிருக்கின்றன. viii. 558/1918/I.

Q7:3

மதார் ஸாஹிபு ஆலிம்

696. i. ஷரீஅத் துலக்கம் பித அத் விலக்கம் என்னும் பறுலு மாலை : முதற் பதிப்பு ; ii. கொ. கி. கிதர் முஹம்மது ருவுத்தர் ; முஹம்மதிய நேசன் அச்சியந்திரசாலை ; iii. எப்ரல் 1918 ; iv. உ. ப. 1+132 ; v. 16×13 செ. மீ. ; vi. 0-3-0 ; vii. இந்நூலில் இஸ்லாமிய மதத்தின் முக்கியமான கொள்கை களைப் பற்றியும், விதிமுறைகளைப் பற்றியும் விளக்கமாகப் பாடல்களால் புனைந்து கூறப்பட்டிருக்கின்றன. மாதம்

பன்னிரெண்டிலும் வரும் சிறிய பெரிய கொடிய நச்சுகளின் விவரமும் இந்நூலின் இறுதியில் தரப்பட்டுள்ளது. இந்நூலுக்கு ஷரீஅத் துலக்கம் பித அத் விலக்கம் என்னும் ஒரு பெயரும் உண்டு. viii. 42/1918/III.

Q7:3

**முஸ்தபா**

697. i. முஸ்தபா அவர்களின் வஷியத்தின் போதனை: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. அ. பி. நபிஜு மகமது, கொழும்பு; அஷ்டலக்ஷ்மி விலாசம் பிரஸ், மதுரை; iii. அக்டோபர், 1917; iv. உ. ப. 8; v. 14×11 செ. மீ.; vi. ......; vii. இதில் இஸ்லாமிய பெரியாரான முகம்மது அவர்களின் கொள்கைகள் சில விளக்கப்பட்டுள்ளன. viii. 660/1917/IV.

Q7:3

**முஸ்தபா லெப்பை, எஸ்.எம்.**

698. i. பிஸ் பாஹுஸ்ஸாஹ் பீ. தொளலீஹின்னிகாஹ்; ii. எஸ். எம். முஸ்தபா லெப்பை, சென்னை; றிவாயத்துல் இஸ்லாம் பிரஸ், சென்னை; iii. 1915; iv. உ. ப. 215; v. 22×15 செ. மீ.; vi. 1-0-0; vii. இஸ்லாமிய சமயத்தாரின் விவாக முறையை இந்நூலின்கண் காணலாம். மற்றும் அவர்களிடையே நடைபெறும் வாழ்க்கை நடைமுறைகளை நன்கு விளக்குவது. தொழுகை விவரங்கள், வியாதிகளைப் போக்கும் வைத்திய முறைகள் முதலியனவும் இதில் விவரிக்கப் பட்டுள்ளன. இது இஸ்லாமிய மக்களின் சமூகப் பழக்க வழக்கங்களைத் தெரிவதற்கேற்றதொரு கருவி நூலாம். viii. 818/1916/I.

Q7:3

**முகம்மது அப்துல் காலக் சாயபு, மதுரை**

699. i. நல்வழி விளக்கம்: முதற் பதிப்பு; ii. முஹம்மதியன் அச்சியந்திரச்சாலை, மதுரை; iii. நவம்பர், 1918; iv. உ.ப. 12; v. 22×14 செ. மீ.; vi. ......; vii. முகம்மதிய மதத்தில் உள்ள நல்ல கொள்கைகளை மக்கள் கைக்கொண்டொழுக வேண்டிய முறையினை இந்நூல் எடுத்தியம்புகின்றது. viii. 551/1918/IV.

Q7:3

**முஹம்மது இபுருஹீம் ஸாஹிபு, மா. கா.**

700. i. ஷரீஅத்தின் தர்பார்: இரண்டாம் பதிப்பு; ii. கே. எஸ். எம். அப்துர் ரஹ்மான் ஸாஹிபு; முஹம்மதிய நேசன் அச்சு யந்திரசாலை, பள்ளப்பட்டி; iii. ஆகஸ்ட், 1918; iv. செ. மூ. எ. 62; v. 20×14 செ. மீ.; vi. 0-1-3;

vii. முகமதியர்கள் வட்டிக்குப் பணம் கடன் கொடுக்கும் பழக்கத்தைக் கண்டித்து எழுதப்பட்ட புகழ்பெற்ற பாடல்களைக் கொண்டது இப்புத்தகம். இஸ்லாமிய சமய ஒழுக்கங்களை விளக்கும் நூல். viii. 218/1918/IV.

Q7:3

•

**ஷைகு மீறன் முஹ்யித்தீன் ஸாஹிபு**

701. i. அஹ்காமுல் இஸ்லாம் ஹனபிய்யா: முதற் பதிப்பு; ii. ஷைகுமீறன் முகய்தீன் ஸாயபு, சென்னை; முஹம்மதிய் யாப் பிரஸ், சென்னை; iii. மே, 1917; iv. உ. ப.+செ. மூ. ப. 76+38; v. 21×14 செ. மீ.; vi. 0–5–0; vii. இஸ் லாம் சமய அனபி பிரிவினரின் சமயக்கொள்கைகள் இதில் விளக்கப்பட்டுள்ளன; viii. 1153/1917/III.

Q7:3

702. i. அஹ்காமுல் இஸ்லாம் ஷாபியிய்யா: முதற் பதிப்பு; ii. ஷைகு மீறன் முகய்தீன் சாகிபு, சென்னை; முஹம்மதிய் யாப் பிரஸ், சென்னை; iii. மே, 1917; iv. உ. ப.+செ.மூ.ப. 52+38; v. 21×14 செ. மீ.; vi. 0–5–0; vii. இதில் இஸ்லாம் சமயத்தின் 'சபி' பிரிவினரின் சமயக் கோட்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன. viii. 1154/1917/III.

Q7:3

703. i. இஸ்லாத்தின் மகிமை: முதற் பதிப்பு; ii. முஹம் மதிய்யாப் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1917; iv. உ. ப. 40; v. 21×14 செ. மீ.; vi. 0–5–0; vii. இஸ்லாம் சம யத்தின் கொள்கைகள் இதில் விளக்கப்பட்டுள்ளன. இச்சமயத் தின் மேன்மை உலகில் எவ்வாறு உள்ளது என்று தெளிவாக விளக்கி உரைக்கிறது இந்நூல். viii. 1157/1917/III.

Q7:3

704. i. பிக்ஹுல் அக்பரின் தர்ஜுமா: முதற் பதிப்பு; ii. ஷைகு மீரான் முகயிதீன் சாயபு, சென்னை; முகமதிய்யாப் பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1917; iv. உ. ப.+செ. மூ. ப. 56; v. 22×14 செ. மீ.; vi. 0–6–0; vii. இந்நூல் 'பிக்ஹுல் அக்பர்' என்ற நூலின் மொழி பெயர்ப்பு. இத்துடன் மற் றும் பல இஸ்லாமிய சமயக் கொள்கைகளை விளக்கும் நூல் களின் தமிழாக்கமும் இதில் இடம் பெற்றுள்ளன. viii. 1152/1917/III.

Q7:3

705. i. யாஸீன் சூறத்தின் தர்ஜுமா: முதற் பதிப்பு; ii. ஷைகு மீறன் முகிய்தீன் சாயபு, முதற் பதிப்பு; முஹமதிய்யா பிரஸ், சென்னை; iii. 1917; iv. உ. ப.+செ.மூ.ப. 2ப்

**கோகலே, கோபாலகிருஷ்ண**

801. i. வைஸ்ராய் சபை 1902-ம் வருட வரவு-செலவுப் பேச்சு; முதற் பதிப்பு; ii. விக்டோரியா பிரஸ், திருவாரூர்; iii. ஏப்ரல், 1918; iv. உ.ப. 42; v. 18×11 செ. மீ.; vi. 0-4-0; vii. 1902-ம் வருட வைஸ்ராய் சபையின் வரவு செலவுக் கணக்குகளைப்பற்றிய சொற்பொழிவுகள் இதில் மொழிபெயர்த்துக் கொடுக்கப்பட்டுள்ளன. கோகலே இந்திய மக்களின் நம்பிக்கைக்கும் மதிப்பிற்கும் உரியவராக விளங்கிய பெரியார் ஆவார். இவர் 1902-ம் ஆண்டு மார்ச் மாதம் 26-ம் தேதி புதன்கிழமையன்று, லார்டு கர்சன் பிரபுவின் தலைமையில் வைஸ்ராயின் சட்ட நிரூபண சபையில் பேசிய பேச்சே, இந்நூலில் தரப் பட்டிருக்கிறது. viii. 546/1919/I.

W:44

**சுப்ரமணிய பாரதியார், சி. (தொ. து.)**

802. i. பாரத ஜன சபை: இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. சுதேசமித்திரன் பிரஸ், சென்னை; சுதேசமித்திரன் பிராஞ்ச் அச்சுக்கூடம், சென்னை; iii. ஆகஸ்ட், 1920; iv. உ.ப. 190; v. 22×14 செ. மீ.; vi. 1-0-0; vii. இதில், இந்திய தேசிய காங்கிரஸ் மகா சபையின் சரித்திரமும், பல்வேறு இடங்களில் கூடி நிறைவேற்றிய தீர்மானங்களும், பல தலைவர்களின் சொற்பொழிவுச் சுருக்கமும் தரப்பட்டுள்ளன. இதில் தரப் பட்டுள்ள செய்திகளைத் தொகுத்து மொழிபெயர்த்து அமைத்தவர் சி. சுப்ரமணிய பாரதியாராவார். viii. 808/1920/III.

W:44

**சேஷய்யங்கார், எம். எஸ்., மதுரை**

803. i. இந்தியாவின் அரசியல்: முதற் பாகம்; ii. தமிழ்ச் சங்க முத்திரசாலை, மதுரை; 1916; iv. உ.ப. 50; v. 14×11 செ.மீ.; vi. 0-4-0; vii. ஆங்கிலம் கல்லாதவர்களும், கிராம வாசிகளும், எளிதில் நமது அரசாட்சி நெறியைத் தெரிந்து கொள்வதற்காக இப்புத்தகம் எழுதப்பட்டது. இங்கிலாந்திலுள்ள மகாமந்திர சபை முதல், இந்தியக் கிராமங்களில் காணப்படும் கிராம உத்யோகஸ்தர்கள் வரை எழுதப்பட்டிருக்கிறது. தவிரவும் பொது நிதி, பொதுச் செலவு, கல்வி, விவசாயம், முதலியவைகளையும் எடுத்துரைத்துள்ளார். viii. 282/1916/IV.

W:44

804. i. நமது ராஜீய நோக்கங்கள்: முதற் பதிப்பு; ii. சீ. ஆர். ஸ்ரீனிவாச ஐயங்கார்; சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை; iii. 1916; iv. உ.ப. 94; v. 22×14 செ.மீ.; vi. 0-6-0; vii. 1915-ம் வருடம் டிசம்பர் மாதம் பம்பாயில் நடந்த அகில இந்திய தேசிய காங்கிரஸ் மகாநாட்டிலும், அகில இந்திய முஸ்லிம் லீக் மகாநாட்டிலும் அரசியல் தலைவர் பலர் ஆற்றிய சொற்பொழிவுகளின் தமிழாக்கம். நமது மக்களின் கடமை

யுணர்ச்சி, அரசாங்கத்தார் மக்களிடம் நம்பிக்கை வைத்து பல உரிமைகளை நல்காமை முதலியன குறித்தும், தேசத்தின் பொருளாதாரம் முதலிய பிற நிலைமைகளைக் குறித்தும், சுதேச அன்பர்கள் பலர் வெளியிட்ட கருத்துக்களடங்கிய நூல். viii. 216/1916/III.

W:44

805. i. பாரத ஜன சபை—முதல் பாகம் : முதற் பதிப்பு ; ii. சுதேசமித்திரன், சென்னை ; சுதேசமித்திரன் பவர் அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1918 ; iv. உ.ப. 188 ; v. 22×14 செ.மீ.; vi. 1-0-0 ; vii. பிற்காலத்தில் காங்கிரஸ் மகாசபையென வழங்கப்பட்ட பாரத ஜன சபையின் ஆரம்ப கால வரலாறும் அதன் முக்கிய தலைவர்களின் சொற்பொழிவுகளின் சுருக்கமும் இதில் அடங்கியுள்ளன. காங்கிரஸ் மகாசபையின் தொடக்க கால வரலாற்றை விளக்கமாக அறிய உதவுவது இந்நூல். viii. 4/1919/II.

W:44

806. i. மாண்டேகுச்சேம்ஸ் போர்டு பிரபுக்கள் பிரிட்டிஷ் ராஜாங்கத்தாருக்கு அனுப்பியிருக்கிற பிரேரணைகளின் கருத்தும், லட்சியமும் முதற் பதிப்பு ; ii. ஆக்ஸ்போர்டு யூனிவர்சிடி பிரஸ், சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. நவம்பர், 1918 ; iv. உ.ப. 47 ; v. 18×13 செ.மீ.; vi. 0-1-0 ; vii. இந்திய அரசியலில் செய்யவேண்டிய சீர்திருத்தங் குறித்து மாண்டேகு மந்திரியும், செம்ஸ்போர்டு இராஜப் பிரதிநிதியும், பிரிட்டிஷ் அரசினர்க்கு அனுப்பிய பிரேரணைகளின் கருத்தும், குறிக்கோளும் இதில் அடங்கியுள்ளன. viii. 865/1919/I.

W:44

807. i. முஸ்லீம் லீக் மகாசபை பத்தாவது வருஷக் கூட்டம்—1917 : முதற் பதிப்பு ; ii. சுதேசமித்திரன், சென்னை ; சுதேசமித்திரன் பவர் அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜனவரி, 19 8 ; iv. உ.ப. 59 ; v. 23×14 செ.மீ.; vi. 0-6-0 ; vii. கல்கத்தாவில் 1917-ம் ஆண்டு டிசம்பர் 30-ம் நாளன்று கூடிய முஸ்லீம் லீக் மகாசபையின் பத்தாவது ஆண்டுக் கூட்டத்தில் வரவேற்புக் குழுத் தலைவரும் பிறரும் ஆற்றிய சொற்பொழிவு இது. ஜனாப் முகம்மது அலி, ஷௌகத் அலி இவர்களின் படம் முதலில் உள்ளது. வேறு இருவர் படங்களும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 734/1918/I.

W:44

**ராஜகோபாலன், கி., திருவுறந்தை**

808. i. நம்முடைய கடமைகள் : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. கி. ராஜகோபாலன், திருச்சிராப்பள்ளி; டாட்சன் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. 1916 ; iv. உ.ப. 66 ; v. 19×13

செ.மீ.; vi. 0–3–0 ; vii. இந்நூலாசிரியர், ஆங்கிலேயர் அரசாங்க அமைப்புப்பற்றியும், முதல் உலகப் போரில் ஜெர்மனி மற்ற நாட்டவர்க்கு இழைத்த கொடுமைகளைப் பற்றியும் விளக்குகிறார். ஐந்தாம் ஜார்ஜ் மன்னர், மனைவி, மக்கள் இவர்களைக் கொண்ட புகைப்படம் ஒன்றும் உண்டு. இது, நாட்டு நடப்பை, சாதாரண மக்களும் அறிந்துகொள்ள உதவியானது. viii. 834/1917/I.

W:44

ரெங்கசாமி, ஏ., மதுரை (மொ.து.)

809. i. "குற்றுயிராய்க் கிடக்கிறது"; ii .நேஷனல் ஹோம் ரூல் லீக், மதுரை ; பத்மாலயா பிரஸ், மதுரை ; iii. ஏப்ரல், 1920 ; iv. உ.ப. 6 ; v. 21×13 செ.மீ.; vi. இலவசம் ; vii. அன்னி பெசண்ட் அம்மையார் ஆங்கிலத்தில் வரைந்ததின் தமிழாக்கம் இச்சிறு வெளியீடு. இந்தியா விடுதலை பெறவேண்டும் என்பது இக்கட்டுரையில் வற்புறுத்திக் கூறப்பட்டுள்ளது. viii. 371/1920/II.

W:44

விசுவநாத ஐயர், கே. (மொ.து.)

810. i. காங்கிரஸ் லீக் கோரிக்கைகளும் அதிகாரி வர்க்கத்தின் தவறும்: முதற் பதிப்பு ; ii. சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை ; iii. பிப்ரவரி, 1918 ; iv. உ.ப. 80 ; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. ஆங்கிலேய ஆட்சிக் காலத்தில் அதிகார வர்க்கத்தினர் செய்த தவறுகள் பற்றியும், அவற்றைத் தவிர்க்க வேண்டிக் காங்கிரஸ் கட்சியும் முஸ்லீம் லீகும் விடுத்த கோரிக்கைகளையும் விளக்கிக் கூறுகிறது இந்நூல். ஸர். டின்ஷா எடுல்ஜி வாச்சா முதலிய பதின்மரால் எழுதப்பட்ட பல அரசியல் கருத்துக்களைக்கொண்ட புத்தகம். சுதேசமித்திரன் உதவியாசிரியர் கே. விசுவநாதய்யர் என்பாரால் தமிழில் மொழிபெயர்க்கப் பெற்றது. இது, இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் நம் நாட்டில் நிலவியிருந்த தேச நிலைமை, அரசியல் நிலைமை, மக்கள் நிலைமை முதலியவற்றை விளக்குவதாகும். viii. 733/1918/I.

W:44

811. i. முஸ்லீம் லீக்கின் விசேஷக் கூட்டம்: முதற் பதிப்பு ; ii. சுதேசமித்திரன், சென்னை ; சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை ; iii. செப்டெம்பர், 1918 ; iv. உ.ப. 62 ; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0 ; vii. 1918-ம் ஆண்டு ஆகஸ்ட் 31 ஆம் நாள் 'மாண்ட்—போர்டு' ரிப்போர்ட்டை ஆலோசிக்கப் பம்பாயில் நடந்த முஸ்லீம் லீக் கட்சியின் சிறப்புக் கூட்டத்தினைப்பற்றி விளக்குகிறது. நூல் அட்டையில், தலைவரான மாமூத் பாத் ராஜா சாகிப்பின் படம் ஒன்று உள்ளது. viii. 8/1919/II.

W:44

812. i. ராஜசேவையும் இந்தியரும் : முதற் பதிப்பு ; ii. திருமதி வி. பாலம்மாள் ; ஸ்ரீனிவாசவரதாசாரி அண்டு கோ., சென்னை; iii. அக்டோபர், 1917 ; iv. உ.ப. 320 ; v. 21×14 செ. மீ.; vi. 2-0-0 ; vii. இந்நூலில், அந்நாளைய பப்ளிக் சர்வீஸ் கமிஷன் உறுப்பினரான அப்துா ரகீமின் மறுப்புரையின் மொழிபெயர்ப்பு அடங்கியுள்ளது. அந்நாளில், ஆங்கிலேயர் ஐ. சி. எஸ். தேர்வு விதிகள் வகுத்ததைக் கண்டித்து, அரசியல் நிர்வாகம் விவரித்துக் கூறப்பட்டுள்ளது. நூலிறுதியில் பழம்பெரும் தேச பக்தர் தாதாபாய் நௌரோஜியின் வாழ்க்கைக் குறிப்புத் தரப் பட்டுள்ளது. 'இந்து' நாளிதழின் ஆசிரியர், எஸ். கஸ்தூரிரங்க ஐயங்கார் முன்னுரை எழுதியுள்ளார். viii. 614/1917/IV.

W:44

## 330 பொருளாதாரம்

**சிதம்பர முதலியார், கே.**

813. i. 1913-14-ம் வருஷத்திய வரவு செலவு திட்டம் : முதற் பதிப்பு ; ii. இந்தியா பிரின்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. ஜூலை, 1919 ; iv. உ.ப. 32 ; v. 22×14 செ. மீ.; vi. இலவசம் ; vii. சென்னை மாநிலச் சட்டமன்ற மேலவையில் சொற்பொழி வாற்றப்பட்ட 1913-14-ம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தைப் பற்றிய குறிப்புக்கள் இப்புத்தகத்தில் அடங்கியுள்ளன. இதன் ஆசிரியர், தென்மாகாண நிலச்சுவான்தார்களின் பிரதிநிதியாகச் சென்னை சட்டசபையில் எழு ஆண்டு பதவி வகித்தவர். வரவு செலவுத் திட்ட விவாதங்களில் அவர் செய்த சொற்பொழிவுகளின் தொகுப்பே இந்நூல். viii. 309/1919/IV.

X

## 338·0954 தொழில் முறை

**நெல்லையப்ப முதலியார், எம். ஏ.**

814. i. வர்த்தக யுக்தி : முதற் பதிப்பு ; ii. எம். ஏ. நெல்லையப்ப முதலியார், சென்னை ; சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1916 ; iv. உ. ப. 29; v. 21×14 செ. மீ.; vi. 0-4-0 ; vii. வாணிகம் பற்றிய பல கருத்துக்கள் இதில் விளக்கப்பட்டுள் ளன. வாணிகத்துக்குத் தேவையான அறிவு, அனுபவம் ஆகியவை குறிப்பாகக் கூறப்பட்டுள்ளன. 'வர்த்தகமும் தற்கால மும்', 'யார் வர்த்தகம் செய்யவேண்டும்' என்பவை போன்ற 37 தலைப்புகளில் விளக்கங்கள் உள்ளன. viii. 255/1917/IV.

X

815. i. வர்த்தகயுக்தி : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. அமிர்தம் அண்டு கோ., சென்னை ; கார்டியன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1920 ; iv. உ.ப. 48 ; v. 19×13 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. . . . . . . . . . . . . ; viii. 135/1920/II.

X

**மகிதீன் சாயபு, டீ. என். பீ., தஞ்சாவூர்**

816. i. அப்பியாசக் கைத்தொழில் போதினி: முதற் பாகம் ; ii. சிட்டி பிரிண்டிங் அச்சுக்கூடம், தஞ்சாவூர் ; iii. 1920 ; iv. உ. ப. 111 ; v. 16×11 செ.மீ. ; vi. 2–8–0; vii. கைத் தொழில் பற்றிய விளக்கங்கள், பட விளக்கங்களுடன் தரப்பட்டுள்ளன. ஆசிரியர் செய்து பழகிய, அனுபவ பூர்வமாக தெரிந்த செய்திகளைக் கொண்டு தொகுத்து எழுதப்பெற்றது. viii. 265/1920/I.

X

**மாளவியா, மதன் மோகன்**

817. i. இந்தியக் கைத்தொழில் சிறப்பு: முதற் பதிப்பு; ii. வி. பாலம் மாள், சென்னை ; சீனிவாச வரதாச்சாரி அண்டு கம்பெனி, சென்னை ; iii. ஜனவரி, 1919; iv. உ.ப. 198 ; v. 19×12 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. இந்நூல், இந்தியக் கைத்தொழில் விசாரணைச் சங்கத்தின் அங்கத்தினருள் ஒருவராகிய, ஸ்ரீமான் பண்டித மதன் மோகன் மாளவியா அவர்கள் எழுதியுள்ள தனிக் குறிப்பின் மொழிபெயர்ப்பாகும். இராவ்பகதூர் டி. அரங்காச்சாரியார் எழுதிய அணிந்துரையுடன் கூடியது. இந்தியக் கைத் தொழில் கமிஷன் விசாரணை முடிவின் சுருக்கமும் இதன்கண் அடங்கியுள்ளது. மதன்மோகன் மாளவியா அவர்கள் நிழற் படம் நூலின் முகப்பை அணி செய்கிறது. viii. 823/1919/I.

X

818. i. இந்தியாவின் தொழில்கள்: முதற் பதிப்பு ; ii. சுதேச மித்திரன், சென்னை ; சுதேசமித்திரன் பவர் பிரஸ், சென்னை ; iii. மார்ச், 1919 ; iv. உ.ப. 152+29 ; v. 21×14 செ: மீ. ; vi. 1–0–0 ; vii. இந்நூலில் தொழில் அபிவிருத்திக் கமிஷனுடைய சிபார்சுகளும், அக்கமிஷன் அறிக்கையின் மேல், கனம் மாளவியா எழுதிய சிறப்புரையும் அடங்கியுள்ளன. இதனை மொழிபெயர்த்தவர் 'சுதேசமித்திரன்' உதவி ஆசிரியராகயிருந்த கே. விசுவநாத ஐயர் ஆவார். viii. 5/1919/II.

X

## 347·54 இஸ்லாமியச் சட்டம்

**முகைதீன் சுல்தான் சாகிப்**

819. i. இஸ்லாமியா மார்க்கச் சட்டம் ; ii. எஸ். எம். முஸ்தபா லெப்பை, சென்னை ; நிவாத்துல் இஸ்லாம் அச்சுக்கூடம், சென்னை ; iii. ; 1915 ; iv. செ.மு.உ.ப. 76 ; v. 21×14

செ.மீ. ; vi. 0-8-0 ; vii. இஸ்லாம் சமயத்தின் சட்டதிட்டங்கள் விளக்கப்பட்டுள்ளன. 'தக்க சுறூத்து' என வழங்கும் ஸாலத்துல் அற்கான் மாலை என்னும் பாடல் நூலும் இதில் உள்ளது. viii. 817/1916/I.

Z(Q7)

## 347.6 இந்துச் சட்டம்

**சுந்தரம் முதலியார், வி.**

820. i. சோழிய வேளாள மரபார் விவகார ஆசார சட்டம் ; ii. சோழிய வேளாள மரபு தரும சங்கம், தொண்டை மண்டலம் ; மகாலட்சுமி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1915 ; iv. செ.மு.உ.ப. 2+52 ; v. 20×13 செ.மீ. ; vi. 0-2-0 ; vii தொண்டைமண்டலம் சோழிய வேளாள மரபார், தாங்கள் நடந்துகொள்வதற்காக ஏற்படுத்திக்கொண்ட விவகார ஆசாரச் சட்டங்களின் தொகுப்பு. இச்சட்டம், தொண்டை மண்டலத்தைச் சார்ந்த சில கிராமங்களிலும், சென்னைப்பட்டணத்திலும் வசிக்கும் சோழிய வேளாள மரபை மாத்திரம் அனுசரித்தவையாயிருக்கும். 1913-ம் ஆண்டு திருவொற்றியூரில் கூடிய மகாநாட்டில் வாசித்து, அச்சில் பதிப்பிக்கத் தீர்மானித்தபடி அச்சிடப்பட்டது. மேலும் இந்தியாவின் காட்சியும், அதில் அரசாட்சி செய்த தமிழ்நாட்டரசர்களின் மாட்சியும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. வேளாளர் உற்பத்தி, அவர்க்குரிய தசாங்கம், தரும நெறிகள் முதலியனவும், வேளாளர் குலாசார விதிகளும் விளக்கப்பட்டுள்ளன. viii. 729/1916/I.

Z(Q2)

821. i. இராஜாங்கத் துவேஷ சட்ட மசோதாக்கள் : முதற் பதிப்பு ; ii. சுதேசமித்திரன், சென்னை; சுதேசமித்திரன் பவர் அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1919 ; iv. உ.ப. 68; v. 16×11 செ.மீ. ; vi. 0-4-0 ; vii. 1919-ம் ஆண்டு வாக்கில் இம்ப்பீரியல் சட்ட மன்றத்தில் கொண்டு வரப்பட்ட இராஜத் துவேஷ (ரௌலட்) சட்ட மசோதாவினைப் பற்றியது இந்நூல். இதற்கு, சேலம் வழக்கறிஞர், சி. ராஜகோபாலாச்சாரியார். முகவுரை எழுதியுள்ளார். viii. 11/1919/II,

Z(Q2)

**மகாலிங்க ஐயர், எஸ்., கும்பகோணம்**

822. i. நிலத் தீர்வை நிர்ணயம்: முதற் பதிப்பு ; ii. டி. கிருஷ்ணஸ்வாமி ஐயர், கும்பகோணம் ; ஸ்ரீ கிருஷ்ணவிலாசம் பிரஸ், கும்பகோணம் ; iii. மே, 1920 ; iv உ.ப. 160 ; v. 18×13 செ.மீ. ; vi. 0-12-0 ; vii. சென்னை இராஜதானியில் நிலத் தீர்வை நிர்ணயம் சம்பந்தமான பல செய்திகள் இதன்கண் கூறப்பட்டுள்ளன. ராவ்பகதூர் வி. கே. இராமானுஜாசாரியா

ரவர்கள் எழுதிய நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு. சென்னை உயர்நீதிமன்றம் வக்கீல், ராவ்பகதூர் ரெங்காச்சாரியார் எழுதிய முன்னுரையுடன் கூடியது. viii. 598/1920/II.

Z (Q2)

## 359·4 கடற் சுரங்கங்கள்

**வைத்தியநாத ஐயர், ஜீ.**

823. i. கடற் சுரங்கங்கள்; ii. ஜீ. வைத்தியநாத ஐயர், திருச்சிராப்பள்ளி; வெட்னெஸ்டே ரிவியூ பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. 1916; iv. உ.ப. 8; v. 18×11 செ.மீ.; vi. 0–0–6; vii. கடற் சுரங்கங்களைப் பற்றி இந்நூல் விவரிக்கின்றது. கடற் சுரங்கங்கள் மூலம் எதிரிகளின் கப்பல்களை நாசமாக்கும் விதங்கள் இதில் விவரிக்கப்பட்டுள்ளன. யுத்தத்தில் ஜப்பானியரும், ஜெர்மானியரும் கப்பல்களை நாசப்படுத்தி உயிர்ச்சேதம், பொருட்சேதம் விளைவித்ததையும் எடுத்துக்காட்டியுள்ளார். யுத்த காலத்தில் கடலில் சேதமுண்டாக்கும் நாசகாரிகளின் தன்மைகளையும், அதனால் நிகழும் இழப்புக்களையும் எடுத்துக்காட்டி விவரிக்கிறது. இந்நூல். viii. 133/1916/III.

D,5254

## 370 கல்வி பொது

**சிவஸ்வாமி, கெ. ஜி.**

824. i. சுதேசக் கல்வி: முதற் பதிப்பு; ii. கெ. ஜி. சிவஸ்வாமி, ஸ்ரீ வைகுண்டம்; ஸ்ரீகான வித்யா பிரஸ், ஸ்ரீவைகுண்டம்; iii. பிப்ரவரி, 1918; iv. உ.ப. 12; v. 14×12 செ.மீ.; vi. ......; vii. இக்காலத்துக்குத் தேவையான கல்வியின் சிறப்புப் பற்றி இதில் விளக்கப்பட்டுள்ளது. தாய்மொழி மூலம் கல்வி கற்பிக்கப்பட வேண்டும் என்றும், தொழிற் கல்வியை முக்கியமாக அபிவிருத்தி செய்ய வேண்டும் என்றும் காரண காரிய முறையில் எழுதப்பட்ட சிறு வெளியீடு. நாட்டுப் பற்று, மொழிப் பற்றின் அவசியம் நன்கு வலியுறுத்தப்பட்டுள்ளது. viii. 894/1918/I.

T

**நாராயணராயர், ஆர்.**

825. i. பாலர் இசை-3; ii. ஆர். நாராயணராயர், ஆழ்வார் திருநகரி; ஸ்ரீகான வித்யா அச்சியந்திரசாலை, பெருங்குளம்; iii. ஜனவரி, 1917; iv. செ.மூ.ப. 12+16; v. 14×11 செ.மீ.; vi......; vii. கிருஷ்ணபகவானைப் புகழ்ந்தும், சுவாமி விவேகானந்தரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கியும் பாடப்பெற்ற பாடல்களைக்கொண்ட நூல். (இரண்டு பாகங்களைக் கொண்டது). தென்திருப்பேரை தேவஸ்தானம் ஜோசியர் கவி பிச்சுவய்யங்கார் பாடிய சாற்றுக் கவிகள் இதில் உள்ளன. viii. 309/1917/I.

T

**பிராஞ்சபே, ஆர் பி.**

826. i. தேசியக் கல்வி நிகழ்ச்சிக்கோர் கண்டனம்; ii. வைத்ய நாத சுவாமி அய்யர், முடிகொண்டான்; ஸ்ரீவித்யா பிரஸ், கும்பகோணம்; iii. ஜூலை, 1918; iv. உ.ப. 11; v. 22×14 செ.மீ.; vi. 0–2–0; vii. தேசிய கல்வி நிகழ்ச்சியினை எதிர்த்து எழுதப்பட்ட ஒரு கண்டனப் புத்தகமாகும் இது. இஃதொரு மொழிபெயர்ப்பு நூல். பிராஞ்சபேயின் இக் கட்டுரையை மொழிபெயர்த்தவர், முடிகொண்டான் ஆர். வைத்தியநாத ஐயராவார். காசி இந்து பல்கலைக் கழகத் துணை வேந்தர் சர். பி. எஸ். சிவசாமி ஐயர் எழுதிய நூன்முகத்துடன் கூடியது. மொழிபெயர்ப்பாசிரியரும் இதற்கு முகவுரை வரைந்துள்ளார். தேசியக் கல்வி என்னும் பேரால் ஆங்கிலக் கல்வியினால் விளைந்தன அனைத்தும் தீமையே என்பதை வலியுறுத்தும் நோக்கத்துடன் எழுந்ததே இந்நூல்.' viii. 475/1918/III.

T

**பெஸண்ட், அன்னி**

827. i. சுதேசக் கல்வியும் அன்னி பெஸண்ட் அம்மையாரும்; ii. சன் ஆப் இந்தியா லிமிடெட், சென்னை; பிரிட்டிஸ் இந்தியா பிரஸ், சென்னை; iii. 1918; iv. உ.ப. 16; v. 18×13 செ.மீ.; vi. 0–1–0; vii. சுதேசக் கல்வியால் உண்டாகும் நன்மைகளை எடுத்துக் கூறி, அதை மக்கள் கட்டாயம் கடைப் பிடிக்க வேண்டும் என்று வற்புறுத்தித் திருமதி அன்னி பெசண்ட் அம்மையார் அவர்கள் குடந்தைக் கூட்டமொன்றில் கூறியதை அச்சிட்டு இச் சிறு புத்தகமாக வெளியிட்டுள்ளார்கள். 'சுய ஆட்சிப் பிரசுர வரிசை'யில் இது நான்காவதாகும். viii. 1095/1918/III.

T

828. i. க்ஷத்திரிய வித்தியாசாலை ரிசர்வ் பண்டின் வருஷாந்திர வரவு-செலவு; ii. அருணோதயம் பிரஸ், தூத்துக்குடி; iii. ஆகஸ்ட், 1916; iv. உ.ப. 4; v. 31×21 செ.மீ.; vi. இலவசம்; vii. தூத்துக்குடியில் வாணிகம் செய்யும் விருதுப் பட்டி நாடார்கள் நடத்தி வருகிற "க்ஷத்திரிய வித்தியாசாலை ரிசர்வ் பண்டின் வருஷாந்திர வரவு-செலவுத் திட்டத்தினை" விளக்குகின்ற பிரசுரம். viii. 1040/1916/III.

T

## 371.3 போதனாமுறை

**கார்டன், சி.**

829. i. குழந்தையும் அதன் கல்விப் பயிற்சியும்: முதற் பதிப்பு; ii. மாக்மில்லன் அண்ட் கமபெனி, சென்னை; எஸ். பி. சி; கே. பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1919; iv. உ.ப. 200; v. 18×13 செ.மீ.; vi. 0–12–0; vii. குழந்தை

களுடைய மன நிலை பற்றியும், அவர்களுக்குக் கல்விப் பயிற்சி அளிப்பதற்கான நடவடிக்கைகள் பற்றியும், அதற்குரிய ஆசிரியர்களுக்கான விளக்கங்கள் பற்றியும், இந்நூலில் விளக்கமாகக் காணலாம். முகவுரைப் பகுதியில் 'கிண்டர் கார்ட்டன்' என்னும் பயிற்றுவிக்கும் முறை பற்றிய செவ்விய விளக்கம் தரப்பட்டிருக்கிறது. நூலுள் 16 அத்தியாயங்களில் இம்முறை பற்றிய விளக்கப் பாடங்கள் படங்களுடன் விவரிக்கப்பட்டுள்ளன; viii. 582/1919/IV. T: 3

கோபாலசாமி நாயுடு, டி. எ., திருப்பணி வட்டாரம்(மொ.து.)

830. i. குழந்தைகளைப் பழக்கும் முறையில் ஜாக்கிரதை பெற்றிருக்க வேண்டிய சுருக்க விஷயங்கள் : முதற் பதிப்பு ; ii. டி. எ. கோபாலசுவாமி நாயுடு, திருப்பணி வட்டாரம், தஞ்சாவூர் மாவட்டம் ; பிரம்மவித்தியா அச்சுக்கூடம், பேரளம், திருமியச்சூர் ; iii. 1919 ; iv. உ.ப. 53 ; v. 18×12 செ.மீ. ; vi. 0–3–0 ; vii. இதில், இந்திய அரசு அதிகாரி ஒருவரால் எழுதப்பெற்று, ஒரு பத்திரிகையில் வெளியான செய்திகள் அடங்கியுள்ளன. உடையாரிலும், குவாலியரிலும் உள்ள பெற்றோர், உபாத்தியாயர்கள் சங்கத்தால் பிரசுரிக்கப்பட்டது. viii. 441/1920/II.

T: 3

சற்குண நாடார், ஜே. ஆர்.

831. i. எண், இடவேலை : முதற் பதிப்பு ; ii. இ. எஸ். சற்குணர், சேலம் ; சரஸ்வதி விலாசப் பிரஸ், சேலம் ; iii. மே, 1919 ; iv. உ.ப. 17 ; v. 17×13 செ.மீ. ; vi. ...... ; vii. இந்நூல் முதல் வகுப்பு ஆசிரியர்களுக்குப் பயன்படுமாறு எழுதப்பட்டது. பாலர்களுக்குக் கணக்குக் கற்பித்தலுக்குரிய எளிய முறைகளை இந்நூல் விளக்குகிறது; viii. 513/1919/II.

T: 3

832. i. சித்திரப் பாடம் : முதற் பதிப்பு ; ii. ஜோசப் ஐயர், செய்ண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி; iii. நவம்பர், 1916; iv. உ.ப. 18 ; v. 22×14 செ.மீ. ; vi. ....; vii. கல்வியினைச் சித்திரங்கள் மூலமாக விளக்குவதால் உண்டாகின்ற நன்மையினை, ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் உள்ளவர்களுக்கு நன்கு புரியும் முறையில் விளக்கியுள்ளார். கற்பிக்கும் ஆசிரியர்க்கு வழிகாட்டியான புத்தகம்; viii. 804/1916/IV.

T: 3

## 371. 426 கைத்தொழிற் பயிற்சி

எக்லுஸ்வாமி, எஸ்.

833. i. வித்யாமுறைக் கைப்பழக்கம் அல்லது கை, கண் பயிற்சி : முதற் பதிப்பு ; ii. வி. எஸ். வெங்கட்ராமன், சென்னை ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1918 ; iv. உ.ப. 68 ;

v. 22×14 செ.மீ. ; vi. 0–8–0 ; vii. வித்யாமுறைக் கைப் பழக்கமும், கை—கண் பயிற்சி, பேப்பர்—அட்டை வேலைகள் ஆகியவைகளைப் பற்றிய முழு விவரமும், பள்ளி மாணவர்கள் எளிதில் புரியும் வண்ணம், ஆசிரியரால் விளக்கப்பட்டுள்ளது. ஆசிரியர்களுக்கு வேண்டிய குறிப்புகள் முகவுரையில் தரப்பட்டுள்ளன. இவ்வாசிரியர், மாணவர் பொருட்டு எழுதிய பிற நூல்களின் விவரங்களும் இறுதியில் தரப்பட்டுள்ளன; viii. 867/1919/I.

T

## 372.3 இயற்கைப் பாடம்

**கோவிந்தசாமி ராவ், இ., மதுரை**

834. i. இயற்கைப் பொருள் பாடம்: திருத்திய பதிப்பு ; ii. இ. எம் கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை ; எக்சல்சியர் பிரஸ், மதுரை ; iii. ஜனவரி, 1919 ; iv. உ.ப. 100 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. தொடக்கப் பள்ளி மாணவர்களுக்கான இயற்கைப் பாடப் புத்தகம். பட விளக்கங்களுடன் கூடியது. இதில், தாவர வர்க்கம், பிராணி வர்க்கம், தாது வர்க்கம் என்பனவற்றைக் குறித்த விளக்கங்கள் உள. வினு விடை முறையிலும், பொருளைப் பகுத்துப் பலபடியாக விளக்கும் முறையிலும் எளிமைப்படுத்தி உரைக்கப்பட்டிருக்கின்றன; viii. 837/1919/I.

LM

835. i. இயற்கைப் பொருள் பாடம்: புதிய பதிப்பு ; ii. இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை ; எக்சல்சியர் பிரஸ், மதுரை ; iii. ஆகஸ்ட், 1919 ; iv. உ.ப. 100 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. ஆரம்பப் பள்ளி மாணவர்களுக்கான இயற்கைப் பாடப் புத்தகம், முகவுரையில், இதைக் கற்பிப்பதற்கான விளக்கவுரை அமைந்துள்ளது. பாடங்களும், வினுக்களும், அதற்குரிய விடைகளும் நன்கு அமைந்துள்ளன. பட விளக்கங்களும் இடை இடையே தரப்பட்டுள்ளன. தாவர வர்க்கம், பிராணி வர்க்கம், தாது வர்க்கம் என்னும் உயிர்ப்பொருள், உயிரல் பொருள் இரண்டின் இயல்புகளையும் விளக்குகின்றது; viii. 355/1919/IV.

LM

**தியாகராஜ ஐயர், என்.**

836. இயற்கைப் பொருட் பாடம்: முதலாம் வாசக புத்தகம் ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. 1919 ; iv. உ.ப. 92 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–4–0 ; vii. தொடக்கப்பள்ளி மாணவ, மாணவிகளுக்கான இயற்கைப் பொருட் பாடப் புத்தகமாகும் இது. பட

விளக்கங்களுடன் அமைந்துள்ளது. தாவரங்களைக் குறித்தும் விலங்குகளைக் குறித்தும், பல பாடங்கள் உள. நிலத்தின் இயல்பு பற்றியும் சில பாடங்கள் அமைந்துள்ளன; viii 586/1919/IV.

LM

**நாராயணசாமி ஐயர், வி. கே.**

**837.** i. இயற்கைப் பொருட் பாடம்—வால்யூம்-I : ஆறாம் பதிப்பு ; ii. எஸ். சிவராம ஐயர் அண்டு சன்ஸ், திருச்சிராப்பள்ளி ; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ.ப. 210 ; v. 19×13 செ.மீ. ; vi. 1–4–0 ; vii. இயற்கை பொருட் பாடங்களை மாணவர்களுக்குக் கற்பிப்பதற்கு ஏற்ற நூல். இதில், தாவர நூல், பிராணி நூல், உடலோம்பல் ஆகியவை பற்றி விவரிக்கப்பட்டுள்ளன. படங்கள் மூலம் செய்திகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன; viii. 247/1916/IV.

LM

**838.** i. இயற்கைப் பொருட் பாடம்—வால்யூம்-II : ஐந்தாம் பதிப்பு ; ii. எஸ். சிவராம ஐயர் அண்டு சன்ஸ், திருச்சிராப்பள்ளி; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. டிசம்பர், 1916 ; iv. உ.ப. 334 ; v. 18×13 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. பள்ளி மாணவ மாணவிகளுக்கான இயற்கைப் பாடப் புத்தகம். பௌதிகம், ரசாயனம், உயிர்நூல், இயற்கை ஆகியவை பற்றிய பாடங்களும், பட விளக்கங்களும் உள. ஒவ்வொரு அதிகாரத்தின் கடைசியிலும், எளிய பல பயிற்சிகளும் இடம்பெற்றுள்ளன; viii. 940/1916/IV.

LM

**839.** i. இயற்கைப் பொருட் பாடம்—வால்யூம்-I : திருத்திய ஏழாம் பதிப்பு ; ii. எஸ். சிவராம ஐயர் அண்டு சன்ஸ், திருச்சிராப்பள்ளி ; இந்தியா பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை ; iii. 1918 ; iv. உ.ப. 192+129+220 ; v. 18×13 செ.மீ. ; vi. 1–8–0 ; vii. இது, உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்கான அறிவியல் பாட நூல். இதில் தாவர இயல், விலங்கியல், மனித உடலியல் ஆகியவை இடம் பெற்றுள்ளன. ஏற்ற படங்களும் அமைக்கப்பட்டுள்ளன; viii. 17/1919/II.

LM

# 400 மொழி இயல்

## 428·64–ஆங்கிலம்–தமிழ் : பாடப் புத்தகம்

**இருஷ்ணசுவாமி ஐயர், வீ. எஸ்.**

**840.** i. அபிநவ ஆங்கில போதினி—இரண்டாவது வால்யூம் : இரண்டாம் பதிப்பு ; ii. வீ. ஆர். கே. சாமி அண்டு சன்ஸ், திருச்சிராப்பள்ளி ; செய்ண்ட் ஜோசப்ஸ் இண்டஸ்ட்ரியல் ஸ்கூல் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஏப்ரல், 1920 ; iv. உ.ப. 116 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. பொதுவாக இது மாணவர்களுக்கென எழுதப்பட்டது. இலக்கணக் குறிப்புகள் விரிவாகத் தரப்பட்டுள்ளன. ஆங்கில மொழி பெயர்ப்பும் உடன் உண்டு; viii. 624/1920/II.

P31,9

## 431–சொல்மாலை

**841.** i. நாலுபாஷை ஒக்காபலரி; ii. கந்தசாமி முதலியார், கொண்ணூர் ; அப்பர் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1918 ; iv. உ.ப. 59 ; v. 18×11 செ.மீ. ; vi. 0–5–0 ; vii. தமிழ், தெலுங்கு, ஆங்கிலம், இந்துஸ்தானி ஆகிய நான்கு மொழிகளின் வார்த்தைகள் கற்பவர்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும்படியாக எழுதப்பட்ட புத்தகமாகும் இது. பொது வகையாகவும், வண்ணங்களின் பெயர், தானியங்களின் பெயர், முதலியனவாகவும், தனித்தனித் தொகுதியாக, இது அமைக்கப்பட்டிருக்கிறது; viii. 309/1919/I.

P: 4h

## 491. 48 ஹிந்தி பாடப் புத்தகம்

**842.** i. முதல் ஹிந்தி வாசக புஸ்தகம்: திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. சென்னை ஹிந்தி சாஹித்திய ஸம்மேளனப் பிரசாரக் காரியாலயத்தார், சென்னை ; இந்தியா அச்சுயந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1920 ; iv. உ.ப. 34 ; v. 18×12 செ.மீ.; vi. 0–2–6 ; vii. இந்தி மொழியில் வெளியான முதற் புத்தகத்திற்கான தமிழ் மொழி பெயர்ப்பு நூல் இது. இந்தி கற்பதை எளிதாக்க, இந்நூல் ஆக்கப் பெற்றது; viii. 906/1920/II.

P152,9

## 494·81104 தமிழ் மொழி பற்றிய கட்டுரைகள்

**கந்தசாமி கவிராயர் மு.ரா., மதுரை**

843. i. வியாசத்திரட்டு: இரண்டாம் பாகம்; ii. இ.மா. கோபால கிருஷ்ணக் கோன், மதுரை; மதுரை தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை; iii. எப்ரல், 1917; iv. உ.ப. 77; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. இந்நூலில் பதினொரு கட்டுரைகள் உள்ளன. இக்கட்டுரைகள் பெரும்பாலும் எல்லாச் சமயத்தினருக்கும் ஒப்பச் சொல்லுந் தன்மையன. இன்டர்மீடியட் வகுப்புத் தமிழ்ப் பாடநூலாக இருந்தது; viii. 399/1917/II.

P31x

**கலியாணசுந்தர முதலியார், திரு. வி.**

844. i. தேசபக்தாமிர்தம்: முதற் பதிப்பு; ii. திரு. வி. கலியாணசுந்தர முதலியார், சென்னை; பிரிட்டிஷ் இந்தியா அச்சுக்கூடம், சென்னை; iii. ஜூன், 1919; iv. உ.ப. 256; v. 18×13 செ.மீ.; vi. 1–0–0; vii. இந்நூலில், சமயப் பெருமை, தமிழ் மொழி மாண்பு, ஒழுக்கம், பரோபகாரம், தாழ்ந்த வகுப்பார் முன்னேற்றம், பெண்மக்கள் உரிமை, தொழிலாளர் இயக்கம் முதலியவை பற்றி விளக்கப்பட்டுள்ளன. 'தேசபக்தன்' தினப்பதிப்பில், ஆசிரியர் எழுதி வந்த கட்டுரைகளின் ஒரு தொகுப்பு. எனவே 'தேசபக்தாமிர்தம்' என்னும் பெயர் சூட்டியுள்ளார். இவ்வரிசையில் இது முதல் மலராகும். இது, மாணாக்கர் பொருட்டாக வெளியிடப் பெற்றது. தமிழ் மொழி பற்றி ஆசிரியர் கொண்டுள்ள கருத்துக்களை முன்னுரையில் தெளிவுற விளக்கியுள்ளார். இதில் உள்ள கட்டுரைகள் எல்லாம் கருத்துக் களஞ்சியங்களாகவுள. கட்டுரைகள் வெளிவந்த நாளும், அவ்வவற்றின் ஈற்றில் குறிக்கப்பட்டிருக்கிறது. நூலிறுதியில், 'அரசியற் பாக்கள்' என்னும் தலைப்பில், ஆசிரியர் தாம் பாடிய பாடல்கள் சிலவற்றையும் சேர்த்துள்ளார்; viii. 192/1919/III.

P31x

**சின்னத்தம்பி, எல்., மதுரை.**

845. i. சச்சிதாநந்தம்: இரண்டாம் பாகம்: முதற் பதிப்பு; ii. சே. நமசிவாயம் பிள்ளை, மதுரை; சூரியோதயம் பிரஸ், மதுரை; iii. செப்டெம்பர், 1917; iv. உ.ப. 31; v. 20×14 செ.மீ.; vi. 1–0–0; vii. இந்நூலில், சமயம், ஒழுக்கம் முதலியன பற்றிய ஏழு கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. இவ்வகை வெளியீட்டில், இது இரண்டாம் பாகமாகும். இதில், மெஸ்மரிசம், சுகாதாரம், ஒழுக்கம், ஜீவகாருண்யம், மானஸ வைத்தியம் முதலிய பொருள்கள் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 353/1917/IV.

P31x

பூர்ணலிங்கம் பிள்ளை, எம்.எஸ்.

846. i. நவராத்திரிப் பிரசங்கங்கள்: முதற் பதிப்பு; ii. ஆர். வெங்கடாசலம் அண்டு கம்பெனி, சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. மே, 1917; iv. உ.ப. 80; v. 19×13 செ.மீ.; vi. 0–5–0; vii. பற்பல தலைப்புக்களைக் கொண்டு எழுதப்பெற்ற கட்டுரைகள், கதைகளின் தொகுப்பு இது. ஒன்பது இரவென்று பிரித்து, ஒவ்வொரு இரவிற்கும் புதுமையான ஒரு சொற்பொழிவு அடங்கியது. நவராத்திரி விடுமுறையில் பதின்மர் குழுமி ஒருவர் தலைமை வகிக்க ஏனைய ஒன்பதின்மரும், ஒவ்வொரு பொருள் பற்றிப் பேசியதாகக் கற்பித்துக் கொண்டு, ஆசிரியரால் வரையப்பெற்ற சொற்பொழிவுக் கட்டுரைகள் கொண்ட நூல். இவரால் விவரிக்கப்பட்ட செய்திகளாவன இந்தியரின் ராஜ பக்தி, நம் குறைகள், அமைப்புப்படியே மணம், வாழ்க்கைத் தொல்லைகள், விருத்தி நம்பிக்கை, ஜப்பானியர், அசரீரி, தற்கொலை, பெண்களின் உரிமைகள்; viii. 713/1917/II.

P31x

வைத்தியநாத சுவாமி, ஏ.

847. i. ஸமரஸம் என்றால் என்ன?: ii. விக்டோரியா அச்சு யந்திரசாலை, திருவாரூர்; iii. 1919; iv. உ.ப. 4; v. 22×14 செ.மீ.; vi........, vii. சமரசம் என்பதைப்பற்றி நன்கு விளக்கி, அதன் இன்றியமையாமையும், இதன்கண் வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது; viii. 331/1920/I.

P31

ஜகவீரபாண்டியன், கவிராஜ்

848. i. தமிழர் வீரம்: முதற் பதிப்பு; ii. ஜகவீரபாண்டியன், ஒட்டநத்தம்; வேலாயுதம் பிரிண்டிங் பிரஸ், தூத்துக்குடி; iii. ஜூலை, 1918; iv. உ.ப. 16; v. 21×14 செ.மீ.; vi. 0–6–0; vii. 'தமிழர் வீரம்' என்னும் இப்புத்தகத்தில், தமிழ்நாட்டின் தன்மையும், அதிலிருந்து செங்கோல் செலுத்திய, வெண்குடை வேந்தராகிய சேர, சோழ, பாண்டியர்களுடைய வன்மையும், தமிழ் முதுமக்கள் தம் அரசர் பால் வைத்திருந்த அன்பின் மிகுதியும், அரசர்கள் தங்கள் குடி மக்கள் மீது வைத்திருந்த அருளின் மிகுதியும், பண்டைநாள் முதலே தமிழர் வீரத்திலும், நாகரிகத்திலும் சிறந்திருந்தனர் என்ற உண்மையும், ஒரு பெண்மணி தன் அருமை மிக்க ஒரு மகனையும் செருமுகம் நோக்கிச் செல்க என்றேவிய திண்மையும், நம் பெரு மரபில் தோன்றிய அம்முதுமகள் வீரங்குறித்து உரையாடிய தீரமும், பிறவும் அடங்கியிருக்கின்றன. 19—6—1915-ல், திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் கூடியபேரவையில் செய்த சொற்பொழிவு இது. ஒழுக்கம்,

சாந்தம், கம்பர் கவித்திறம் என்ற தலைப்புக்களையுடைய கட்டுரைகள் அச்சிலிருப்பதாகத் தெரிய வருகிறது; viii. 632/1918/III.

P31

•

## 494·8112 எழுத்து-சொல் இலக்கணம்

மெய்கண்ட தேவருரைமுகமாணுக்கன், செப்பறை.

849. i. தொல்காப்பியச் சண்முக விருத்தி மறுப்பின் முதற் பகுதியாகிய பாயிர விருத்தி மறுப்பு முதற் பதிப்பு; ii. சா. பெரியசாமிப் பிள்ளை, ஆரூர்; சிவரகசிய முத்திராலயம், சென்னை; iii. 1916; iv. உ.ப. 202; v. 21×14 செ.மீ.; vi. 1–0–0; vii, இது, தொல்காப்பிய நூலுக்குச் சோழவந்தான் அரசஞ் சண்முகனார் எழுதிய உரையைக் கண்டிக்கும் வகையில் அமைந்த நூல். பிழை திருத்தப்பட்டியல் ஒன்று நூல் முதலில் உண்டு. முந்திய உரையாசிரியர்களின் கருத்துக்களையும் எடுத்துக்காட்டி விளக்கம் தருகிறது. viii. 786/1917/II.

P31,Dr1,15

## 494·8112 யாப்பு

அப்துல் காதிறு ராவுத்தர்., எம்.கே.எம், சோதுகுடி

850. i. இலக்கியங் கண்டதற்கு இலக்கணமியம்பல்: முதற் பதிப்பு; ii. எம்.கே.எம். அப்துல் காதிறு ராவுத்தர், சோதுகுடி; தமிழ்ச் சங்க முத்திரா சாலை, மதுரை; iii. நவம்பர், 1918; iv. செ.சு.ப. 15; v. 21×14 செ.மீ.; vi. 0–1–0; vii. "இலக்கியங் கண்டதற்கு இலக்கணமியம்பல்" என்ற இந்த விவாதத்திற்குரிய ஆராய்ச்சிக் கட்டுரையில், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், முதலியோர் படைத்த வெண்பாக்களில் இலக்கணப்பிழை இல்லை என்பதை ஆசிரியர் வலியுறுத்தியுள்ளார். ஐந்திணை ஐம்பது முதலிய பழந்தமிழ் நூல்களிலிருந்து மேற்கோள்காட்டி நிறுவுகின்றனர்; viii. 683/1918/IV

P31,J: 2

கலியாணசுந்தர யதீந்திரர்

851. i. செய்யுளிலக்கணம்: திருத்திய மூன்றும் பதிப்பு; ii. கோ. லோகநாத முதலியார், சென்னை; மனோன்மணி விலாச அச்சுக் கூடம், சென்னை; iii. மே. 1917; iv. உ. ப. 71; v. 22×14 செ. மீ.; vi. 0–8–0; vii. இந்நூலில், தமிழ்ச் செய்யுள்

இலக்கணத்தின் விதிகளும், கொள்கைகளும் விளக்கப்பட்டுள்ளன. பல பேராசிரியர்களும், அறிஞர்களும் தத்தம் கருத்தை இதில் வெளியிட்டுள்ளனர். இந்நூல், உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல், பாட்டியல் என நான்கு இயல்களாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளது. பாட்டியற் பகுதியில் பிள்ளைத் தமிழ், கலம்பகம் முதலிய பிரபந்தங்களின் இயல்புகள் விவரிக்கப்பட்டுள்ளன; viii. 390/1917/III.

P31,J : 2

## 494·8114 நிகண்டு

**சுப்ரமண்ய பாரதி, வை.**

852. i. பொருட்டொகை நிகண்டு ; ii. சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர், மதுரை ; தமிழ்ச் சங்க முத்திராசாலை, மதுரை ; iii. மே, 1920 ; iv. செ. மூ. எ. 1,000 ; v. 21×14 செ. மீ.; vi. 0-6-0 ; vii. இதில் கண்ட பொருட்டொகைகளெல்லாம், பெரும்பாலும் பேச்கோதியென்று முன்பதிப்பித்திருக்கிற பிரதியிலுள்ளனவாகவிருக்கின்றன. பிங்கல நிகண்டிலுஞ் சூடாமணி நிகண்டிலுமில்லாத பொருட்டொகைகள் சில இதில் அடங்கியுள்ளனவாதலின், இது, கற்போர்க்குப் பெரும் பயனுடையதாக இருக்கும் என்பதில் ஐயமின்று. ஒரு பொருள், இருபொருள் முதலாக நூறு பொருள்கள்வரை இந்நிகண்டில் தரப்பட்டுள்ளன; viii. 673/1920/II. P31,J : 4

**திவாகர முனிவர்**

853. i. சேந்தன் திவாகரம் : மூல பாடம் : திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. கொ. லோகநாத முதலியார், சென்னை ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. 1917 ; iv. உ. ப. 175 ; v. 21×14 செ.மீ.; vi. 0–12–0 ; vii. தமிழ் வார்த்தைகளுக்கு ஈடான வேறு வார்த்தைகள் தொகுத்துத் தரப்பட்டிருக்கின்றன. தெய்வப் பெயர்த் தொகுதி முதலாகப் பன்னிரண்டு தொகுதிகளைத் தன்னகத்துக் கொண்டது. சென்னைக் கல்விச் சங்கத்துத் தலைமைப் புலமை நடாத்திய தாண்டவராய முதலியாரவர்கள் பதிப்பித்த பத்துத் தொகுதிகளின் மூலத்தோடு, மேற்படி சங்க புலவர்கள் பதிப்பித்த மற்ற இரண்டு தொகுதிகளின் மூலத்தையும் ஒன்றுகச் சேர்த்து வெளியிடப்பட்ட புத்தகமாகும் இது; viii. 436/1918/I.

P31,D : 4x1,1,1

854. i. சேந்தன் திவாகரம் : முதலாவது தெய்வப் பெயர்த் தொகுதி : திருத்திய மூன்றும் பதிப்பு ; ii. கொ. செல்வரங்கம் கம்பெனியார், சென்னை ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1918 ; iv. உ. ப. 21 : v. 13×11 செ.மீ.; vi. 0–0–6 ; viii. vii......; 783/1918/III

P31,D : 4x1,1,1

855. i. சேந்தன் திவாகரம் : தெய்வப் பெயர்த் தொகுதி ; ii பி. நாராயணசாமி பிள்ளை அண்டு பிரதர்ஸ், சென்னை; நற்றமிழ் விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. செப்டம்பர், 1920 ; iv. உ. ப. 23 ; v. 13×11 செ.மீ.; vi. 0–1–0 ; vii. . . . ; viii. 337/1920/IV. P31, D: 4x1,1,1

மஞ்சிகன்

856. i. மஞ்சிகன் ஐந்திணைச் சிறு நிகண்டு : முதற் பதிப்பு ; ii. தி. பொன்னுசாமி முதலியார், மாகறல் ; வைதிக சைவ அச்சுக்கூடம், சென்னை ; iii. மே, 1918 ; iv செ.மூ.எ. 122 ; v. 13×11 செ.மீ.; vi. 0–2–0 ; vii. இந்நூலில், பெரும் பான்மை, மூலிகையின் பெயரும். சிறுபான்மை மரம், செடி, கொடிகளின் பெயரும், பிறவற்றின் பெயரும் கூறப்பட்டுள்ளன. இதுகாறும் வெளிவராத மிகப்பழைய நிகண்டு இது. இதனுள் தற்காலம் வெளிவந்துள்ள பல நிகண்டுகள், அகராதிகள் ஆகியவற்றில் காணக்கூடாத பல சொற்கள் இருக்கின்றன. viii. 754/1918/II.

P31,J: 4

மண்டல புருடன்

857. i. சூடாமணி நிகண்டு—மூலமும் உரையும் : முதற் பதிப்பு ; ii. எ. முத்துவடிவேலு முதலி, சென்னை ; பூமகள் விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. பிப்ரவரி, 1919 ; iv. செ.மூ.எ. 8+1,195+1 ; v. 21×13 செ.மீ.; vi. 2–0–0 ; vii. இந் நிகண்டில் பத்து வகைப் பெயர்த் தொகுதிகள் அடங்கியுள்ளன. இதற்குப் பொருளதிகாரப் பட்டியல் ஒன்றும் தரப்பட்டுள்ளன மண்டல புருடரைப் பற்றிய சிறு குறிப்புடன் பல்பெயர்க் கூட்டத் தொரு பெயர்த் தொகுதி பற்றியும் கூறப்பட்டுள்ளது. பின்வரும் இரு பகுதிகளும் சேர்த்துப் பன்னிரண்டு தொகுதிகள் இந் நிகண்டில் உள. பன்னிரண்டாம் தொகுதிக்கு, பா. கணேச முதலியார் புதுக்கியும், திருத்தியும், விளக்கியும் சேர்த்துக் கொடுத்த உரை அமைந்துள்ளது. viii. 978/1920/I.

P31,D: 4x5,1

## 494·8115 இலக்கணம் : பாடப் புத்தகம்

சற்குணம், எஸ். டி., சென்னை

858. i. இலக்கண ஆக்கம் : முதற் பதிப்பு ; ii. எஸ்.டி. சற்குணம், சென்னை ; பிரிட்டிஷ் இந்தியா பிரஸ், சென்னை ; iii. ஜூன் 1918 ; iv. உ. ப. 90 ; v. 18×13 செ.மீ.; vi. 0–6–0 vii. உயர்தர தொடக்கப் பாடசாலை, உயர்நிலைப்பள்ளி மாணவர் களுக்குரிய தமிழ் இலக்கணம் முழுவதையும், ஆசிரியர் நான்கு

பாகங்களாகப் பிரித்து, அவைகளைப் பற்றிய பயிற்சிகளும், பாடங்களும், விளக்கங்களும் கொடுத்துள்ளார். ஆசிரியரின் ஆங்கில தமிழ் உரையுடன் கூடியது. viii. 161/1918/III.

P31,J : 2

**செல்வக்கேசவராய முதலியார், தி. (தொ. து.)**

**859.** i. பஞ்சலட்சணம் : திருத்திய பதிப்பு ; ii. சி. க. அ. சங்கத்தார், பெரம்பூர், சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. உ. ப. 64 ; v. 19×13 செ. மீ.; vi. 0–5–0 ; vii. இதில் தமிழ் மொழியின்கண் உள்ள எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங் களையும் தெளிவாக விளக்கியுள்ளார், ஆசிரியர். மாதவ சிவஞான யோகிகளது திரு உருவப்படம் இந்நூலிற் கணியெனத் திகழ்கின்றது. 1903 ஆம் ஆண்டு அச்சிட்ட நூலில் சில நீக்கியும், சேர்த்தும் புதுமுறையில் அமைக்கப்பெற்றுள்ள தாகும் இந்நூல். viii. 700/1918/III.

P31,J : 2

**860.** i. **தமிழ் இலக்கணச் சுருக்கம்**—இரண்டாம் புத்தகம் : முதற் பதிப்பு ; ii. தி கிறிஸ்டியன் லிட்டரேச்சர் சொசைட்டி பார் இந்தியா, சென்னை : சி. எல். எஸ். பிரஸ், சென்னை ; iii. 1916 ; iv. உ. ப. 218 ; v. 18×13 செ.மீ.; vi. 0–10–0 ; vii. உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்கென எழுதப்பட்ட தமிழ் இலக்கண நூல். எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், தொடர் மொழியதிகாரம் என்னும் மூன்று பெரும்பகுதிகள் கொண்டது. தக்க எடுத்துக்காட்டுகளுடன் இலக்கணச் செய்திகள் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன. இலக்கணக் குறியீடுகளுக்கு நேரான ஆங்கிலக் குறியீடுகளும் அங்கங்கே கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 83/1916/II.

P31,J . 2

**861.** i. **தமிழ் இலக்கணம்** : திருத்திய பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கோ., சென்னை ; ii. எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1920 ; iv. உ. ப. 48 ; v. 18×12 செ.மீ.; vi. 0–3–0 ; vii. சிறந்த வித்வான்களால் நன்கு பரிசோதிக்கப் பெற்ற தமிழ் இலக்கணம். ஐந்தாம் வகுப்பிற்கு ஏற்றபடி எழுதப் பெற்றது. எழுத்தியல், சொல் லியல், புணரியல், சொற்றொடரியல் ஆகிய நான்கு இயல் களில், மொழியின் இயல்பு விளக்கப்பட்டுள்ளது. viii. 913/1920/IV.

P31,J : 2

**நமச்சிவாய முதலியார், கா.**

862. i. சிற்றிலக்கணம்–II : திருத்திய பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ் சென்னை ; iii. 1915 ; iv. உ. ப. 68 ; v. 18×13 செ.மீ.; vi. 0–2–0 ; vii. 'பொது மத்திய முறை' என்னும் சிறந்த போதனை முறையைப் பின்பற்றி இச்சிறு இலக்கண நூல் இயற்றப்பட்டுள்ளது. பட்டிகை முறையில் பல செய்திகளும் எடுத்துக் காட்டுகளும் விளக்கப்பட்டுள்ளன. viii. 835/1916/II.

P31,J : 2

863. i. சிற்றிலக்கணம்–III : திருத்திய பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. உ. ப. 88 ; v. 18×12 செ.மீ.; vi. 0–4–6 ; vii. இரண்டாம் படிவ மாணக்கர்களுக்கான தமிழ் இலக்கணப் புத்தகம். அடிப்படை இலக்கணம் அனைத்தும் இதில் காணலாம். தன்மை ஒருமை வினைமுதல், பிறவினை வரை எடுத்து, அட்டவணையாகத் தொகுத்து வெளியிட்டுள்ள முறை, மாணவர்க்குப் பெரிதும் பயன்படுவது. பொது மத்திய முறையை அனுசரித்து விளக்கமாக எழுதப்பட்டுள்ள நூல். 236 விதிகளில் எழுத்து, சொல், சொற்றொடர் இலக்கணங்களை விவரிக்கிறது. viii. 53/1918/IV.

P31,J : 2

864. i. சொற்றொடர் ஆக்கம் : திருத்திய பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1918 ; iv. உ.ப. 112 ; v. 18×13 செ.மீ. ; vi. 0–6–0 ; vii. ஆரம்ப, உயர்தரப் பள்ளிகளுக்குப் பயன்படத்தக்க தமிழ்ப் பயிற்சி நூல். இதில் வாக்கிய அமைதிகள் நிறுத்தற் குறிகள், கதை எழுதல், கடிதம் எழுதுதல் ஆகியனவ பற்றி விளக்கப்பட்டுள்ளன. viii. 419/1918/I.

P31,J : 2

**மகாலிங்க ஐயர், மழவை**

865. i. இலக்கணச் சுருக்கம் : திருத்திய பத்தாம் பதிப்பு ; ii. தாம்சன் கம்பெனியார், சென்னை ; மினர்வா அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூலை, 1918 ; iv. உ.ப. 108 ; v. 19×13 செ.மீ.; vi. 0–3–0 ; vii. உயர்நிலைப்பள்ளி மாணக்கர்களுக்கேற்ற முறையில் அமைந்த தமிழ் இலக்கணம். ஆங்காங்கே ஆங்கிலக் குறிப்புக்களும் காணப்படுகின்றன. இந்நூலாசிரியராகிய மழவை மகாலிங்க ஐயர், திருத்தணிகை, கல்விக்கடல், சரவணப்பெருமாள் ஐயரது மாணவர், பெரிய புராணத்தில் முதல் 900 செய்யுட்களுக்கும், அருணசலப் புராணத்திற்கும்

உரையெழுதியுள்ளார். மழவைச் சிங்கார சதகம் முதலிய பல நூல்களின் ஆசிரியர்; சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தலைமைத் தமிழ்ப் பண்டிதர். வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் மேற்பார்வையில் இந்நூல் பதிப்பிக்கப்பெற்றது. viii. 680/1918/III.

P31,J : 2

**ராஜா, எம்.சி.**

866. i. இலக்கணப் பாடங்கள் : முதற் பதிப்பு ; ii. பென்ரோஸ் அண்டு கோ., சென்னை ; நூர்ஜகான் பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1917 ; iv. உ.ப. 48 ; v. 19×13 செ.மீ.; vi. 0–4–0 ; vii. இந்நூல் ஆரம்பப் பள்ளிச் சிறுவர்களுக்கு எளிய முறையில் இலக்கணம் சொல்லித்தரும் நோக்குடன் எழுதப்பெற்றது. படங்கள் இடையிடையே உள்ளன. ஒவ்வொரு படப்பகுதிக்கும் தக்க அப்பியாசங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 63/1917/III.

P31,J : 2

## 494·81186 பாடப் புத்தகங்கள்

**அனவரத விநாயகம் பிள்ளை, எஸ்.**

867. i. வாசக பாடத் திரட்டு—சீரிஸ் 2 : திருத்திய பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1917 ; iv. உ.ப. 154 ; v. 19×13 செ.மீ.; vi. 0–8–0 ; vii. பள்ளி மாணவர்களுக்கான தமிழ்ப் பாட நூல். வசனநடைக் கட்டுரைகளும், கவிதைகளும் இதில் உள்ளன. பொருளடக்கப் பகுதியில், பாடப் பெயர்கள், தமிழோடு ஆங்கிலத்திலும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 637/1917/III.

P31,9

868. i. வாசக பாடத்திரட்டு : திருத்திய பதிப்பு ; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்., சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1918 ; iv. செ.மூ.உ.ப. 135 ; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0 ; vii. உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்கான தமிழ்ப் பாடப் புத்தகம். இதில், 17 உரைநடைப் பகுதிகளும், மூன்று செய்யுட் பகுதிகளும் உள்ளன. இது, மூன்றாவது பகுதியாகும். உரைநடைப் பாடங்கள் நல்லொழுக்கத்தைப் போதிக்கும் நற்றகுதியுடையனவாக அமைந்துள்ளன. எளிய நடையில், அரிய, பெரிய செய்திகள் அழகுற எடுத்துக்காட்டப் பட்டுள்ளன. செய்யுட் பாடத்திரட்டிற்கு அரும்பத உரையும் தரப்பட்டிருக்கிறது. viii. 55/1918/IV.

P31,9

869. i. ஆறும் வாசக புத்தகம்: திருத்திய பதிப்பு; ii. மாக மில்லன் அண்டு கோ., சென்னை; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. ஜூலை, 1919; iv. செ.மூ.உ.ப. 120; v. 18×12 செ.மீ.; vi. 0–7–0; vii. இரண்டாம் படிவ மாணவர்களுக் கான தமிழ்ப்பாட நூல். படங்களுடன் கூடியது. முதற் பகுதி, உரைநடைப் பாடத்தில் 17 பாடங்கள் உள. இரண்டாம் பகுதி, செய்யுட் பாடத்தில், நல்வழி, நீதிநெறி விளக்கம், இராம நாடகம் என்னும் நூல்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட பாடற் பகுதிகள் உள. viii. 722/1919/III.

P31,9

870. i. ஆனந்த முதற் பாட புத்தகம்: முதற் பதிப்பு; ii. ஆர். வெங்கடேஸ்வர் அண்டு கம்பெனி, சென்னை; ஆனந்தா பிரஸ், சென்னை; iii. மார்ச், 1918; iv. உ.ப. 61; v. 18×12 செ.மீ.; vi. 0–2–6; vii. ஆரம்ப வகுப்புச் சிறுர்களுக்கான தமிழ்ப்பாட நூல். போதனைக் குறிப்புக்களை நூன் முகத்துக் கொண்டுள்ளது. பொருளடக்கப் பகுதியில், பாடத் தலைப்புக்கள் தமிழிலும், ஆங்கிலத்திலும் தரப்பட்டுள்ளன. நூலிறுதியில் உள்ள நான்காம் பாகத்தில் இலக்கணச் செய்திகளும், வசனநடை எழுதுதற்கான தொடக்கப் பயிற்சிகளும் இடம் பெற்றுள்ளன. viii. 1106/1918/I.

P31,9

871. i. இன்டர்மீடியட் தமிழ்ப் பாட புத்தகம்: 1918: பாகம்: 1: முதற் பதிப்பு; ii. எஸ். கிருஷ்ணமாசாரியார், சென்னை; iii. கணேசா அச்சுக்கூடம், சென்னை; iv. 1916; v. செ.மூ.உ.ப. 126+52+28; v. 22×14 செ.மீ.; vi. 2–0–0; vii. 1918-ம் வருடம், சென்னைப் பல்கலைக் கழகத்தில் இன்டர்மீடியட் வகுப்பிற்கெனத் தொகுக்கப்பட்ட நூல். முதற் பாகமாக, வில்லிபாரதத்திலே வாரணவதச் சருக்கமும், திருக்கருவை வெண்பா அந்தாதி நூலும், நன்னூற் பாயிரமும், உரையுடன் தரப்பட்டுள்ளன. viii. 644/1916/III.

P31,9

872. i. இன்டர்மீடியட் பரீட்சை, 1918—தமிழ்பாடப் புத்தகம்: முதற் பதிப்பு; ii. சென்னைப் பல்கலைக் கழகத்தார்; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1916; iv. செ.மூ.ப. 12; v. 21×14 செ.மீ.; vi. 0–2–0; vii. 1918-ம் ஆண்டிற்கான சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ச் செய்யுள் பாடப்புத்தகம் நாலடியார் பாடல் 54, இதில் தேர்ந்து தரப்பட்டுள. அரும்பத விளக்கம், பாடல்களை அடுத்துக் கொடுக்கப்பட்டிருக் கிறது. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைக் குறித்தும், நாலடியாரைக் குறித்தும், பொது விளக்கங்கள் தரப்பட்டிருக் கின்றன. viii. 858/1916/III.

P31,9

**873.** i. **இன்டர்மீடியட் பரீட்சை, 1918**—நாலடியார்: முதற் பதிப்பு; ii. **எஸ். கிருஷ்ணமாசாரியார்**, சென்னை; கணேசா பிரஸ்; சென்னை; iii. செப்டம்பர், 1917; iv. செ.மு.உ.எ. 53; v. 22×14 செ.மீ.; vi. 0–6–0; vii. 1918-ம் வருட சென்னைப் பல்கலைக் கழக இன்டர்மீடியட் பரீட்சைக்கான தமிழ்ப் பாட நூலின் உரை நூல். பாடல்களின் முதற்குறிப்பை மட்டும் கொடுத்து, அவ்வப் பாடல்களுக்கு உரிய உரை விளக்கத்தையும் வரைந்துள்ளார். viii. 15/1917/IV.

P31,9

**இராமானுஜாசாரியார், ம.வீ., கும்பகோணம் (தொ.து.)**

**874.** i. **செய்யுட்டிரட்டும், உரைநடைத் திரட்டும்**: முதற் பாகம்; இரண்டாம் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ., சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. ஏப்ரல், 1918; iv. செ.மு.உ.ப. 116; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0; vii. உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்குரிய தமிழ்ப்பாட நூல். இதில் உரைநடைத் திரட்டும், செய்யுட்டிரட்டும் அமைந்துள்ளன. டாக்டர் உ.வே. சாமிநாத ஐயரவர்கள் அளித்த நற்சாட்சிப் பத்திரத்துடன் கூடியது. viii. 451/1918/II.

P31,9

**875.** i. **செய்யுட்டிரட்டும், உரைநடைத் திரட்டும்**: இரண்டாம் பாகம்; முதற் பதிப்பு; ii. லாங்மன்ஸ் கிரீன் அண்டு கோ., சென்னை; கபாலி பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1918; iv. உ.ப. 136; v. 19×13 செ.மீ.; vi. 0–9–0; vii. உயர் நிலைப் பள்ளி மாணாக்கர்களுக்கான தமிழ் உரைநடைப் பாடம்; செய்யுள் பகுதியுடன் கூடியது. இஃது இரண்டாம் பாகம். எட்டுப் பாடங்களும், 30 செய்யுட் பகுதிகளும் இதில் அடங்கி யுள்ளன. டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் வழங்கிய அணிந்துரையுடன் கூடியது. viii. 637/1918/III.

P31,9

**எக்ஞஸ்வாமி, எஸ்., கும்பகோணம்**

**876.** i. **கதா வாசகம்**: முதற் பதிப்பு; ii. எஸ். எக்ஞஸ்வாமி, கும்பகோணம்; கார்டியன் பிரஸ், சென்னை; iii. மார்ச், 1918; iv. உ.ப. 144; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0; vii. உயர்நிலைப் பள்ளி மாணாக்கர்களுக்குரிய கதா வாசகம். செய்யுட்களும் இதில் அடங்கியுள்ளன. இந்நூலின்கண் லலிதா, மூன்று சகோதரர்கள், ஷராப்கான் என்ற தலைப்பை யுடைய மூன்று கதைகள் காணப்படுகின்றன. viii. 468/1918/II.

P31,9

**877.** i. **எஸ்.எஸ்.எல்.சி. தமிழ்ப் பாடப் புத்தகம்—மெட்ரிகுலே ஷன் தேர்வு, 1917**: முதற் பதிப்பு; ii. ரிஜிஸ்ட்ரார், சென்னைப் பல்கலைக் கழகம்; எஸ்.பி.சி.கே. பிரஸ், சென்னை; iii. 1916;

iv. உ.ப. 79 ; v. 21×14 செ.மீ.; vi. 0-12-0 ; vii. 1917-ம் ஆண்டின் மெட்ரிகுலேஷன் தேர்வுக்கென்று எழுதப்பட்ட பாடப் புத்தகம். செய்யுள், உரைநடைப் பாடங்களின் தொகுப்பு. உரைநடைப் பகுதியில் ஆரிய சரித்திரம், ஆத்திச்சூடி, நீதிக் கதைகள், பெண்மதி மாலை என்னும் நூல்களின் பகுதிகள் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 786/1916/II.

P31,9

878. **எஸ். எஸ். எல். சி. 1918-ம் ஆண்டு தேர்வுப் புத்தகம்—குரூப், ஏ—தமிழ்ப்பாடப் புத்தகம் :** *முதற் பதிப்பு* ; ii. கல்வித் துறை நெறியாளர், சென்னை ; ii. எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1917 ; iv. செ. மூ. ப. 52 ; v. 22×14 செ. மீ ; vi. 0-6-0 ; vii. 1918-ம் ஆண்டு பள்ளி இறுதி வகுப்பு மாணவர்களுக்கான தமிழ்ப் பாடப் புத்தகம். கல்வி இலாகாவால் வெளியிடப்பட்டது. செய்யுட் பாடங்களின் திரட்டு இந்நூல். பாடங்களுக்குக் குறிப்புரை தரப் பட்டுள்ளது. இறுதியில் அரும்பத அகராதி பொருள் விளக்கத் துடன் அமைந்துள்ளது. viii. 336/1917/III.

P31,9

879. i. **எஸ். எஸ். எல். சி. தமிழ்ப் பாடப் புத்தகம்—மெட்ரிக்கு லேஷன் தேர்வு :** *முதற் பதிப்பு* : ii. எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1918 ; iv. செ. மூ. உ. ப. 128 ; v. 21×14 செ. மீ. ; vi. 1-0-0 ; vii. 1919-ம் ஆண்டு பள்ளியிறுதித் தேர்வுக்கும், மெட்ரிகுலேஷன் தேர்வுக்கும் உரிய தமிழ்ப் பாடப் புத்தகமாகச் சென்னைப் பல்கலைக் கழகத் தாரால் வெளியிடப்பட்டது. இதன்கண் ஏழு செய்யுட் பகுதி களும், ஆறு உரைநடைப் பகுதிகளும் அடங்கியுள்ளன. செய்யுட் பாடங்களுக்குக் குறிப்புரையும் அரும்பதப் பொருளகராதியும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 570/1918/III.

P31,9

880. i. **எஸ். எஸ். எல். சி. தேர்வு, 1919—தமிழ்ப் பாடப் புத்தகம் :** *முதற் பதிப்பு* : ii. எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1918 ; iv. செ. மூ. உ. ப. 46 ; v. 22×14 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப்பட்ட பள்ளியிறுதி வகுப்புத் தேர்வுக் கான 1919-ம் ஆண்டுத் தமிழ்ச் செய்யுட் பகுதியாகும் இந் நூல். நூலினிறுதியில் குறிப்புரையும், அரும்பதவகராதியும் அமைந்துள்ளன. viii. 571/1918/III.

P31,9

881. i. **எஸ். எஸ். எல். சி. பொதுத் தேர்வு, 1919—குறிப்புப் புத்தகம் :** *முதற் பதிப்பு* ; ii. எஸ். கிருஷ்ணமாசாரி, சென்னை கமர்ஷியல் பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1918 ; iv. செ. மூ. உ. ப. 104 ; v. 23×14 செ. மீ. ; vi. 0-10-0,

vii. 1919-ம் ஆண்டு, பள்ளியிறுதியாண்டுத் தேர்விற்குரிய தமிழ்ச் செய்யுட் பகுதியின் விளக்கவுரை. இதன்கண், திருமாலை, இளையான்குடிமாற நாயனார் புராணம், பழியஞ்சின திருவிளையாடல் முதலியவற்றின் சுருக்கங்கள் உள. viii. 834/1918/III.

P31,9

882. i. எஸ். எஸ். எல். சி. ஆண்டு மெட்ரிகுலேஷன் தமிழ்ப் பாடப் புத்தகம், 1920 ; முதற் பதிப்பு ; ii. எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1919 ; iv. செ. மூ. உ. ப. 132 ; v. 21×15 செ. மீ. ; vi. 0–12–0 ; vii. 1920-ம் ஆண்டு, சென்னைப் பல்கலைக் கழகத்தின் எஸ். எஸ். எல். சி. வகுப்பிற்கும், மெட்ரிகுலேஷன் வகுப்பிற்குரிய தமிழ்ப்பாட நூல். செய்யுட் பகுதிகளுக்குக் குறிப்புரை தரப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. சென்னை, கோமளீஸ்வரன்பேட்டை சீனிவாசப் பிள்ளை இயற்றிய காஞ்சீபுரம் பச்சையப்ப முதலியார் சரித்திரமும், இராமனாதபுரம் இராமசுவாமிப் பிள்ளை இயற்றிய சிவஞான யோகிகள் வரலாறும் உரைநடைப் பகுதியில் அமைந்த சிறந்த வரலாற்றுப் பாடங்களாம். viii. 705/1919/III.

P31,9

883. i. எஸ். எஸ். எல். சி. தேர்வு, 1920-க்கான தமிழ்ப் பாட புத்தகம்— குரூப் 'எ'; முதற் பதிப்பு ; ii. கல்வித் துறை நெறியாளர், சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஜூலை, 1919 ; iv. செ. மூ. உ. ப. 48 ; v. 21×14 செ. மீ. ; vi. 0–6–0 ; vii. இது 1920-ம் ஆண்டு பள்ளியிறுதி வகுப்பிற்கான எஸ். எஸ். எல். சி. தமிழ்ப்பாட நூல். நற்றிணை, கம்பராமாயணம், திருக்குற்றாலத் தல புராணம் திருவருட்பா, மீனாட்சிசுந்தரம் பிள்ளை, வேதநாயகம் பிள்ளையின் நீதி நூல் ஆகியவை இதில் அடங்கியுள்ளன. viii. 710/1919/III.

P31,9

884. i. எஸ். எஸ். எல். சி., 1921, தமிழ்ப் பாடப் புத்தகம் குரூப் 'எ' & 'பி': முதற் பதிப்பு : ii. வ. சிவப்பிரகாசம் பிள்ளை, திருச்சிராப்பள்ளி; கேதரின் பிரிண்டிங் பிரஸ், திருச்சிராப்பள்ளி ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. செ. மூ. எ. 33+40 ; v. 23×15 செ. மீ. ; vi. 0–2–0 ; vii. இது, 1921-ம் ஆண்டு, எஸ். எஸ். எல். சி. பொதுத் தேர்வுக்கான தமிழ்ச்செய்யுட் பகுதி. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் கிழியறுத்த திருவிளையாடலும், கம்பராமாயணத்தில், விபீடணன் அடைக்கலப் படலமும் தரப்பட்டுள்ளன. viii. 529/1920/III.

P31

885. i. எஸ். எஸ். எல். சி. 1921 : குரூப் 'எ'. தமிழ் பாடப் புத்தகம் : முதற் பதிப்பு ; ii. பி. என். சிதம்பர முதலியார் அண்டு கோ., மதுரை ; ஷண்முகா விலாச பிரஸ், மதுரை ; iii. ஆகஸ்ட், 1920 ; iv. செ. மூ.உ.ப. 19 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. 1921-ம் ஆண்டு எஸ். எஸ். எல். சி. பொதுத் தோவுக்கான தமிழ்ச் செய்யுள் பாட நூல் ; 'கிழி யறுத்த திருவிளையாடல்' என்ற கதையின் மூலமும் உரையும் கொண்டது. அரும்பத உரை, குறிப்புரை ஆகியன உண்டு. இவ்வுரையினை எழுதியவர், முத்துசாமிக் கவுண்டரும், பி. சிதம்பர புன்னைவனநாத முதலியாரும் ஆவர். viii. 568/1920/III.

P31,9

886. i. எஸ். எஸ். எல். சி. 1921 —குரூப் 'சி' தமிழ்ப் பாடப் புத்தகம் : முதற் பதிப்பு ; ii. பி. என். சிதம்பர முதலியார் அண்டு கோ., மதுரை ; சண்முக விலாசம் பிரஸ், மதுரை ; iii. செப்டம்பர், 1920 ; iv. செ. மூ. எ. 40 ; v. 22×14 செ. மீ. ; vi. 0–6–0 ; vii. 1921-ம் ஆண்டு எஸ். எஸ். எல். சி. பொதுத் தேர்வுக்கான தமிழ்ச் செய்யுள் நூல். இதில், கம்ப ராமாயணத்தின் யுத்தகாண்டத்தில் உள்ள விபீடணன் அடைக்கலப் படலத்திலிருந்து தொகுத்த 40 செய்யுட்கள் உரை யுடன் அமைந்துள்ளன. கம்பர் வரலாற்றுடன் கூடியது. இவ் வுரை நூலை எழுதியவர், பி. மூத்தசாமிக் கவுண்டராவார். viii. 962/1920/III.

P31,9

887. i. எஸ். எஸ். எல். சி. 1921 : குரூப் 'ஏ' தமிழ்ப் பாடப் புத்தகம் : முதற் பாகம் ; ii. எஸ். கிருஷ்ணமாசாரி, சென்னை ; கமர்ஷியல் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1920 ; iv. செ. மூ. உ. ப. 33 ; v. 22×15 செ. மீ. ; vi. 0–4–0 ; vii. 1921-ம் ஆண்டு எஸ். எஸ். எல். சி. பொதுத் தேர்வுக் கான தமிழ்ச் செய்யுட் பாட நூல். விளக்கக் குறிப்புக்களுடன் கூடியது. திருவால வாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் கிழியறுத்த திருவிளையாடல் பகுதிக்குரிய உரை உள்ளது. இந்த உரை நூலை ஆக்கியவர் சே. கிருஷ்ணமாசாரியாரும், வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியாரும் ஆவார். viii. 976/1920/III.

P31,9

888. i. எஸ். எஸ். எல். சி. குரூப் 'ஏ. & சி. ' மெட்ரிகுலேஷன் தமிழ்ப் பாடப் புத்தகம்—1921 : முதற் பதிப்பு ; ii. ரெஜிஸ்ட் ரார், சென்னைப் பல்கலைக் கழகம் ; ஆர்டிசன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1920 ; iv. உ.ப. 78 ; v. 22×14 செ.மீ,

vi. 0-14-0; vii. 1921-ம் ஆண்டு பள்ளியிறுதி வகுப்புத் தேர்வுக் குரிய தமிழ்ச் செய்யுள், உரைநடைப் பாடப் புத்தகமாகும். குறிப்புரையும், அரும்பத விளக்க அகராதியும் இதன்கண் அடங்கியுள்ளன ; viii. 479/1920/IV.

P31,9

889. i. எஸ். எஸ். எல். சி. குரூப் 'ஏ' : மெட்ரிகுலேஷன் தமிழ்ப் பாடப் புத்தகம்— 1921: முதற் பதிப்பு ; ii. ரெஜிஸ்ட்ரார், சென்னைப் பல்கலைக் கழகம் , ஆர்டிசன் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1920 ; iv. செ. மூ. ப. 32 ; v. 23×14 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. . . . . . . ,viii. 480/1920/IV.

P31,9

**கம்பர்**

890. i. கம்பராமாயண பாலகாண்டமும், விஸ்வநாத நாடகமும் ; ii. இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை ; எக்செல்சியர் பிரஸ், மதுரை ; iii. 1919 ; iv. செ. மூ. உ. ப. 67 ; v. 21×14 செ. மீ. ; vi. 0-8-0 ; vii. கம்பராமாயண பால காண்டம், விளக்க உரையுடன் கூடியது. இது, டி. எஸ். எல். சி. பாடப் புத்தகத்திற்கான உரை நூல். 'விசுவநாதன்' என்னும் உரைநடை நூலுக்குரிய குறிப்புக்களும் இதன்கண் உள. viii. 293/1920/I.

P31,9

**இருஷ்ணமாசாரியார், வி.**

891. i. இயற்கை விளக்க வாசகம் முதல் புஸ்தகம் : திருத்திய பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கம்பெனி, சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1919 ; iv. உ.ப. 40; v. 19×13 செ.மீ. ; vi. 0-3-0 ; vii. ஆரம்பப் பள்ளிச் சிறுர் களுக்கு ஏற்ற தமிழ் நூல். பாடபோதனைக்குரிய குறிப்புக்களுடன் கூடியது. பட விளக்கங்களுடன் அமைந்தது. viii. 852/1919/II.

P31,9

892. i. இயற்கை விளக்க வாசகம்- இரண்டாம் புத்தகம் : முதற் பதிப்பு ; ii. மாக்மில்லன் அண்டு கோ., சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. அக்டோபர் 1919 ; iv.உ. ப. 64; v. 18×13 செ. மீ. ; vi. 0-5-0 ; vii. இரண்டாம் வகுப்பிற் குரிய தமிழ், இயற்கை விளக்கப் பாடப்புத்தகம். படவிளக்கத் துடன் அமைந்துள்ளது. ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தியார் அரசவை படமொன்று இதன் கண் உண்டு. தாவரங்கள், பறவைகள், விலங்குகள் பற்றிய பாடங்கள் இதன்கண் உள்ளன. viii. 584/1919/IV.

P31,9

893. i. இயற்கை விளக்க வாசகம் : மூன்றும் புஸ்தகம் ; ii. மாக் மில்லன் அண்டு கம்பெனி, சென்னை ; எஸ். பி. சி. கே. பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1919 ; iv. செ. மூ. உ. ப. 71 ; v. 18×13 செ. மீ.; vi. 0–5–0 ; vii. பள்ளி மாணவர்களுக் கான இயற்கை விளக்கப் பாடப் புத்தகம். இது மூன்றும் புத்தகமாகும். பட விளக்கங்களுடன் கூடியது. கதைபோல, விஞ்ஞானப் பாடம் எளிமையாக எழுதப்பட்டிருக்கிறது. பிராணிகளைப் பற்றிய பாடங்களே இதன்கண் மிகுதியாக உள்ளன. ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் உருவப் படமும் வாழ்த்தும் நூலின் தொடக்கத்தில் உள்ளன. viii. 585/1919/IV.

P31,9

**சாகுல் அமீது லெப்பை, எம். ஏ.**

894. i. முகமதிய பாலர் பாடம் : முதற் பதிப்பு ; ii. எம். ஏ. சாகுல் அமீது லெப்பை அண்டு சன்ஸ், திருவல்லிக்கேணி, சென்னை ; சாகுல் அமீதியா பிரஸ், சென்னை ; iii. ஏப்ரல், 1916 ; iv. உ.ப. 30 ; v. 18×13 செ.மீ.; vi. 0–1–6 ; vii. முதல் வகுப்பிற்கான முகம்மதிய பாலர் பாடப் புத்தகம். இது ஒரு தமிழ்ப் பாடப் புத்தகமாகும். படங்களுடன் கூடியது. viii. 1035/1916/III.

P31,9

**சிதம்பர புன்னைவனநாத முதலியார் (தொ.து.)**

895. i. செய்யுட் பாடக் கோவை : முதற் பதிப்பு ; ii. பி. என். சிதம்பர புன்னைவனநாத முதலியார் அண்டு கோ., மதுரை ; ஷம்ஷியா பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1919 ; iv. செ.மூ.எ. 507 ; v. 18×13 செ.மீ.; vi. 0–8–0 ; vii. இடைநிலைப் பள்ளி மாணவர்களுக்கான தமிழ்ச் செய்யுட் பாட நூல். 'லட்சுமிராம் கோவை' என்னும் தொடர் வெளியீட்டில் இது ஐந்தாவது மணியாகும். பாடல்களில் கடின சந்தி களைந்து பதப்பிரிவுடன் தெளிவாகப் பதிப்பிக்கப் பெற்றது. ஒவ்வொரு செய்யுளின் கருத்தும் தலைப்பில் சுருக்கமாகக் குறிக்கப்பட்டுள்ளது. viii. 826/1919/III.

P31,9

**சுப்ரமணிய சர்மா, நெ. ரா., பசுமலை.**

896. i. புதிய வாசக புஸ்தகம் : முதற் பதிப்பு ; ii. நெ. ரா. சுப்ரமணிய சர்மா, மதுரை ; மதுரைத் தமிழ்ச் சங்க முத்திர சாலை, மதுரை ; iii. 1916 ; iv. செ. மூ. உ. ப. 100 ; v. 21×14 செ.மீ.; vi. 0–9–0 ; vii. உயர்நிலைப் பள்ளி மாண வர்களுக்கு உரிய தமிழ்ப் பாடப் புத்தகம். சென்னைப் பச்சை யப்பன் கல்லூரித் தமிழ் அறிஞர் டி. செல்வகேசவராய முதலி யார், அருப்புக்கோட்டை துணைப் பள்ளி ஆய்வாளர், வி. முத்து

கொடுக்கப்பட்டிருக்கிறது. ஞானவெட்டி 1500-க்குச் சுருக்கமும் உள்ளது. viii. 989/1916/IV.

LC: 4: 6

நந்தீஸ்வரர்

1112. i. நந்தீஸ்வரர் நிகண்டு—300: முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. டிசம்பர், 1918; iv. உ. ப. 304+33; v. 22×14 செ. மீ.; vi. 0-12-0; vii. நந்தீஸ்வரர் அருளிச் செய்த மருத்துவ விளக்கம் கொண்ட ஒரு நிகண்டாகும் இது. இந்நூல், முந்நூறு பாடல்களைக் கொண்டதாதலின், நந்தீஸ்வரர் நிகண்டு முந்நூறு என்னும் பெயரினை யெய்துவதாயிற்று. இந்நூற் பாடல்கள் அந்தாதியாக அமைந்துள. முற்பகுதியில், சித்து, உயிர், பாசபந்தம் முதலிய தத்துவச் செய்திகளும் விளக்கப்பட்டுள்ளன. ஈற்றில் நந்தீஸ்வரர் கருக்கடை முப்பது என்னும் சிறு நூலும் உள்ளது. viii. 857/1918/IV.

LC: 4: 6

பிடிநாக்கீசர்

i., பிடிநாக்கீசர் வைத்திய சூத்திரம்—14 (தொ. எ. 1122 பார்க்க); ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 14; v........; vi.. ...; vii. உடல் வலிவுபெறும் விவரங்களும், காயசித்தி, யோகசித்தி முதலியனவும் விளக்கப் பட்டுள்ளன. மதுரை, பாத்திரக்கடை வியாபாரம், ந. ராம. கணபதியாப் பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய எட்டுப் பிரதி யின்படி இந்த நூல் அச்சிடப்பட்டது. viii. 60/1916/II.

LC: 4: 6

பிரமமுனி

1113. i. பிரமமுனி கருக்கடை சூத்திரம்—380: முதற் பதிப்பு; ii. இ. ராம. குருசாமிக் கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாச அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1915; iv. செ.மூ.எ. 1+385; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0; vii. இந்திய மூலிகைகளிலிருந்து மருந்துகளைத் தயாரிக்கும் விதத்தை

விளக்குவது. நோய் நாடி, நோய் முதல் நாடி, மருந்து கொடுக்க வேண்டும் முறைகளையும் இந்நூல் விவரிக்கிறது. viii. 57/1916/II,

LC: 4: 6

புலஸ்தியர்

1114. i. வைத்திய சூஸ்திரமும் வாத சூஸ்திரம்—300: முதற் பதிப்பு; ii. வித்வான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; இ. ராம. குருசாமிக் கோனார், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸ், மதுரை; iii. டிசம்பர், 1918; iv. செ.மூ.எ. 53+300; v. 22×14 செ.மீ.; vi. 1-0-0; vii. புலஸ்தியர் திருவாய் மலர்ந்தருளிய வைத்திய சூத்திரமும், இரசவாதஞ் செய்தல் பற்றிய முந்நூறு பாடல்களைக் கொண்ட புலஸ்தியர் வாத சூஸ் திரம் 300-ம் இந்நூலின்கண் அடங்கியுள்ளன. இரண்டு நூல் களிலும், பாடல்கள் அந்தாதித் தொகையாக அமைந்துள்ளன. சிலவகை மருந்துகள் தயார் செய்வது பற்றியும் குறிப்பிடப் பட்டுள்ளது. viii. 856/1918/IV.

LC: 4: 6

புலிப்பாணி முனிவர்

1115. i. புலிப்பாணி முனிவர் வைத்தியம்—500: அரும்பதவுரை யுடன்: முதற் பதிப்பு; ii....; iii. 1915; iv. செ.மூ.உ.எ. 500; v. 22×14 செ.மீ.; vi. 0-12-0; vii. உடல் நோயின் அறி குறிகளும், இந்திய மூலிகைகளிலிருந்து மருந்து வகைகளைத் தயாரிக்கும் வகையும் விளக்கப்பட்டிருக்கின்றன. இதில் விளக்கப் பட்டுள்ள மருந்துகளின் அட்டவணை, நூலிறுதியில் தரப்பட் டிருக்கிறது. பரிபாஷை, மருந்து, முதலியவைகளின் அரும் பதவுரைப் பாடல் எண் குறிப்புகளுடன் தரப்பட்டிருக்கிறது. புலிப்பாணி முனிவர் அருளிய நாடி சாஸ்திரம் என்னும் உரை நடை நூலும் நூலிறுதியில் உளது. இவை திருச்சி, மேட்டுச் சிந்தாமணி, வைத்தியம் கோவிந்தசாமி நாயுடு அவர்களிட மிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி அச்சிடப்பட்டன. viii. 56/1916/II.

LC. 4: 6

மச்ச முனிவர்

1116. i. சரக்குவைப்பு திருமந்திரம்—800: முதற் பதிப்பு; ii. வித்துவான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. ஜூலை, 1920; iv. செ.மூ.எ. 803; v. 21×14 செ.மீ.; vi. 1–0–0; vii. சில நாட்டு மருந்து வகைகள் தயாரிக்கும் வகை இதில் விளக்கப் பட்டுள்ளன. 800 பாடல்கள் உடையதாதலின், இது 'திருமந்திரம் எண்ணூறு' என்னும் பெயரினை எய்துவதாயிற்று. பாடல்கள் அந்தாதியாக அமைந்துள. viii. 273/1920/III.

LC: 4: 6

யாக்கோபு

1117. i. சுண்ணம்—30: முதற் பதிப்பு; ii. குப்புசாமி நாயுடு & இ. ரா. குருசாமிக் கோன், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1917; iv. செ.மூ.எ. 302; v. 22×14 செ.மீ.; vi. 0–12–0; vii. இந்நூலில், பல வகையான மருந்துத் தூள்கள் தயாரிக்கும் வகை விளக்கப்பட் டுள்ளது. வைத்திய சிந்தாமணியென்னும் நூலும் இவ் வாசிரியரால் பாடப்பட்டதே. தமிழ் வைத்திய நூல்களோடு வட மொழி நூல்களையும் இவர் நன்கு ஆய்ந்தவர் என்று தெரியவருகிறது. நபிமார்களுக்கு, இந்நூலில், வணக்கம் தெரிவித்துள்ளார். viii. 687/1918/I.

LC: 4: 6

1118. i. யாக்கோபு அருளிச் செய்த வைத்திய சூஸ்திரம்–150-ம், அதன் சுருக்கம்–50-ம்: முதற் பதிப்பு; ii. குப்புசாமி நாயுடு & இ. ரா. குருசாமிக் கோன், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1917; iv. செ.மூ.எ. 150+57; v. 22×14 செ.மீ.; vi. 0–10–0; vii. இதில் பலவகையான மருந்துகள் தயாரிக்கும் முறை சொல்லப்பட்டுள் ளது. இத்துடன் யாக்கோபு அருளிச்செய்ய சூத்திரச் சுருக்கம் 57 என்ற நூலும் இணைக்கப்பட்டுள்ளது. இவ்வாசிரியர், வைத்தியம் பற்றிப் பன்னிரண்டு நூல்கள் செய்துள்ளார் என்று இந்நூலிறுதியில் உள்ள விளம்பரத்திலிருந்து தெரிய வருகிறது. viii. 686/1918/I.

LC: 4: 6

1119. i. லோக செந்தூரம்—300 : முதற் பதிப்பு ; ii. வித்துவான் த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸ், மதுரை ; iii. மார்ச், 1918 ; iv. செ.மூ.எ. 302 ; v. 21×14 செ.மீ.; vi. 0–12–0; vii. பல உலோகங்களைக் கொண்டு லோக செந்தூரங்களைத் தயாரிக்கும் முறை இதில், 300 பாடல்களால் விளக்கப்பட்டுள்ளது. மதுரை, வித்துவான், மு. குழந்தைவேலுப் பிள்ளை அவர்கள் கேட்டுக்கொண்டபடி, மதுரை, வித்துவான், திரு. த. குப்புசாமி நாயுடு அவர்களால் பரிசோதிக்கப்பெற்றது. இவ்வாசிரியர், லோக செந்தூரம் 1,000 என்று முதலில் பாடியதாகவும், பின்னர் அதனைச் சுருக்கி, லோக செந்தூரம் 700 என்று ஒரு நூல் செய்ததாகவும், பின்னர் அதையும் சுருக்கி, லோக செந்தூரம் 300 என்ற இந்நூலைச் செய்ததாகவும், நூலின் தொடக்கத்தில் கூறப் பட்டிருக்கிறது. viii. 931/1918/I.

LC : 4 : 6

1120. i. வைத்திய சிந்தாமணி—750 : முதற் பதிப்பு ; ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் பிரஸ், மதுரை ; iii. பிப்ரவரி, 1918 ; iv. செ.மூ.எ. 751 ; v. 22×14 செ.மீ.; vi. 1–8–0; vii. பற்பல வகையான நாட்டு வைத்திய மருந்துகள் தயாரிக்கும் முறை விளக்கப்பட்டுள்ளது. சித்த வைத்தியர்களுக்கு, இஃதோர் சிறந்த வழிகாட்டியாகப் பயன்படும். 'பண்டிதத்தைப் பல நூலாராய்ந்து பார்த்து அறிந்து சிந்தையினால் பாடினேனே' என்பதனால், இவர் பல மருத்துவ நூல்களை ஆராய்ந்து இந்நூலை இயற்றியமை தெளிவாம். அகத்தியர், தன்வந்தரி, போகர், யூகிமுனி, சட்டைமுனி, புலத்தியர் முதலியோருக்கும் வணக்கம் பாடுதலின் (5), இவர், இப் பெரியார்கள் இயற்றிய நூல்களையும் நன்கு ஆராய்ந்தார் என்பது போதரும். viii. 688/1918/I.

LC : 4 : 6

**யூகிமுனி**

i. யூகிமுனி மதிவெண்பா—100 (தொ.எ. 1121 பார்க்க) ; ii. வி. ஆர். சுந்தரம் & ஷண்முக முதலியார், மங்கலம், சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 100 ; v...... ; vi...... ; vii. இது பெரும்பான்மையும், வெண்பாவினால் ஆன வைத்திய நூல். இடையிடையே ஒரு சில விருத்தப்பாக்களும் உள. பொருள்களுக்கு ஏற்ற தலைப்புகள் அங்கங்கே உள. இவை ஒன்றாகத் திரட்டப்பட்ட விஷய அட்டவணை, இதன் இறுதியில் உள்ளது. அம்பா விலாச புத்தகச்சாலையார் வெளியிட்ட வைத்திய நூல்களின் விவரமும் நூலிறுதியில் உளது. viii. 179/1916/I.

LC : 4 : 6

i. யூகிமுனி வாத வைத்திய விளக்கம்—200 (தொ. எ. 1121 பார்க்க) ; ii...... ; iii. 1915 ; iv. செ.மூ.எ. 200 ; v...... ; vi...... ; vii வாத மருத்துவத்தை, அனுபவ முறையில் விளக்கும் நூல். வாத மருத்துவ விளக்கம் பற்றிய அட்டவணை முதலில் தரப்பட்டுள்ளது. இவை நூலினுள், அங்கங்கே, தலைப்புக்களாகத் தரப்பட்டுள்ளன வாகும். viii. 179/1916/I.

LC : 4 : 6

1121. i. யூகிமுனி வாதாங்க தீக்ஷ விதி–300 (பார்க்க வாத வைத்திய விளக்கம் 200 ; மதி வெண்பா 100) ; ii. வி.ஆர். சுந்தரம் & சண்முக முதலியார், மங்கலம் ; சச்சிதானந்த அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. செ.மூ.எ.300; v. 18×11 செ மீ.; vi. 1-0-0; vii. ரசவாதத்தையும், மருத்துவத்தையும், மற்றச் சித்தர்கள் போலல்லாது யூகிமா முனிவர், மறைப்பின்றி, யாவரும், எளிதில் உணருமாறு, மிகத் தெளிவாய், அனுபவத்திற்கு மாறுபடாது உயிர்கட் கிரங்கிக் கூறியிருக்கின்றார். வாதாங்க தீக்ஷ விதியின் அட்டவணை முதற்கண் தரப்பட்டிருக்கிறது. viii. 179/1916/I.

LC : 4 : 6

**விளையாட்டுச் சித்தர்**

i. கடேந்திர நாதரென்ற விளையாட்டுச் சித்தர் பாடல் (தொ. எ. 1122 பார்க்க); ii. வித்துவான், த. குப்புசாமி நாயுடு, மதுரை ; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 17+1; v...... ; vi...... ; vii. வாதக்குரு விவரங்களையும், சுண்ணம் முடிக்கும் விவ ங்களையும், அதன் சூட்சங்களையும் விவரிப்பது. மதுரை, வடக்கு லயன் தெரு, இரண வைத்தியம் பெரியசாமிப் பண்டிதரிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந்த சாஸ்திரம் அச்சிடலானது. viii. 60/1916/II.

LC : 4 : 6

1122. i. வைத்திய வாத யோக ஞான சாஸ்திர திரட்டு : ஏழாம் பாகம் (சட்டை முனிவர் ஞான விளக்கம் முதலாக, இராம தேவர் சூஸ்திரம் ஈருக) முதற் பதிப்பு ; ii. வித்துவான், த. குப்புசாமி நாயுடு, மதுரை; & இ. ராம. குருசாமிக் கோனர், மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1916; iv. செ.மூ.ப. 282; v. 21×14 செ.மீ. vi. 1–8–0; vii. வைத்திய வாதயோக ஞான சாஸ்திரத் திரட்டில், சட்டை முனிவர் ஞான விளக்கம் (59), தீட்சை கற்பம் (9) சூதகற்பம் (7), சமாதி (12), பரிபூரணம் (12), வேதாந்த சூஸ்

திரம் (8), நிகண்டு சூத்திரம் (53), ஆதியந்த ஞானம் (2), குருசாஸ்திரம் (20), சட்டை முனி சூஸ்திரம் (6), வாத சூஸ் திரம் (25), தண்டகம் (83), வாலைரச கற்பம் (16), இராம தேவர் (109), பரை ஞான கேசரி (101), ஈஸ்வரன் வாக்கியு சூஸ்திரம் (63), ஈஸ்வரி வாக்கியம் (11), சிவ பெருமான் மெய் ஞான நாடி (30), அல்லமாப் பிரபு நாடி சாஸ்திரம் (12), அகப்பேய்ச் சித்தர் பூரண ஞானம் (15), அகப்பேய்ச் சித்தர் பாடல் (90), விளையாட்டுச் சித்தர் ஞான சூத்திரம் (18), விளை யாட்டுச் சித்தர் பாடல் (32), விளையாட்டுச் சித்தர் பாடல் (17), பிடிநாக்கீசர் வைத்திய சூஸ்திரம் (14), காசிப முனிவர் ஞானம் (20), பதஞ்சலியார் சூஸ்திரம் (16), சட்டை முனி வாதசூஸ்திரம் (200); கணபதியோசம் (10), சுப்பிரமணியர் நாடி (32), இராம தேவர் சூஸ்திரம் (10), முதலியன மதுரை, பாத்திரக் கடை வியாபாரம் ராம. கணபதியாப் பிள்ளை அவர்களிடமிருந்து வாங்கிய எட்டுப்பிரதியின்படி அச்சிடப்பட்டது. viii. 60/1916/II.

LC : 4 : 6

1123. i. வைத்திய வாத யோக ஞான சாஸ்திர திரட்டு: பாகம்–8 ; ii. வித்துவான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. 1914; iv. செ.மூ.ப. 260; v. 22×14 செ.மீ ; vi. 1–8–0; vii. வைத்தியம், வாதம், யோகம் சம்பந்தமான 25 நூல்கள் அடங்கிய தொகுதி இங்ஙனம் தொகுக்கப்பட்டு வெளிவரும் பதிப்பில், இது எட்டா வது தொகுப்பு. இதில் உரோம ரிஷி, சட்டை முனி, ஜனகர், கலைக் கோட்டு மகரிஷி, திருமூலர், அழுகணிச் சித்தர், மச்சேந் திர நாதர் என்ற நொண்டிச் சித்தர், சுந்தரானந்தர், கொங் கணர் என்பார் அருளிய சாத்திரங்கள் அமைந்துள. இவ்வரி சையில், பன்னிரண்டு நூல்களை வெளியிட்டிருப்பதாகப் பதிப்பா சிரியர், தம் முகவுரையில் குறிப்பிட்டுள்ளார். viii. 181/ 1916/IV.

LC : 4 : 6

1124. i. வைத்திய வாதயோக ஞான சாஸ்திர திரட்டு : பாகம் 9; முதற் பதிப்பு ; ii. வித்துவான் குப்புசாமி நாயுடு, மதுரை, ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸ், மதுரை; iii. ஜூன், 1917, iv. செ.மூ.ப. 264; v. 21×14 செ.மீ.; vi. 1–4–0; vii. பல நோய் களுக்கான மருந்து செய்யும் வகை பற்றியும், மற்றும் யோக நிலையடையும் வழி பற்றியும் இதில் விளக்கப்பட்டுள்ளன. இதில் கருவூரார் சிவஞான போதம் தொடங்கி, திருமூலர் குருநூல் முப்பு சூஸ்திரம் வரை 23 நூல்கள் உள்ளன. இவை, வைத்தியம், வாதம், யோகம், ஞானம் பற்றி அமைந்தன வாம். viii. 46/1917/III.

LC : 4 : 6

## 615-942 விஷ வைத்தியம்

உரோம ரிஷி

i. நாகராரூடம் (தொ. எ. 1125 பார்க்க); ii வித்துவான் த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸ், மதுரை; iii. செப்டெம்பர், 1917; iv. செ.மூ.எ. 114+ உ.ப. 4; (107—110); v......; vi......; vii.இதில் நஞ்சுக்கடிக்கு ஏற்ற மருந்து வகைகளும் மந்திர சக்கரங்களும் விளக்கப்பட்டுள்ளன. viii. 30/1917/IV

L : 4 :6

i. கெருடாரூட பத்து : முதற் பதிப்பு; (தொ.எ. 1126 பார்க்க ii...; iii. செப்டம்பர், 1917 ; iv. செ.மூ.எ. 12; v....; vi....; vii. நஞ்சுக்கடிக்கு ஏற்ற பல மருந்துகள், மந்திரங்கள் ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. சக்கரங்களின் படமும் உண்டு. கெருடனுடைய அருளை வேண்டிப் பாடப்பெற்ற பாடல்கள் இவை. viii. 31/1917/IV.

L : 4 : 6

கௌசிக முனிவர்

1124-A. i. சர்ப்ப சாஸ்திரம் (சித்திராரூடம், மந்திராரூடம்) : முதற் பதிப்பு; ii. த. குப்புசாமி நாயுடு; மதுரை; ஸ்ரீராமச் சந்திர விலாசம் பிரஸ், மதுரை; iii. 1916; iv. செ.மூ.எ. 100; v. 22×14 செ.மீ.; vi. 0-4-0; vii. பாம்பு தீண்டியதன் அறிகுறி, விளைவு, அதற்கு சிகிச்சை, ஆகியவற்றைப் பற்றி விரிவாக இந்நூலில் காண லாம். மதுரை தாலூகா, கோச்சடை, உள்கடை, ப. திருமலை முத்துப் பிள்ளையின் குமாரர், கருப்பையா பிள்ளையிடம் பெற்ற வட்டுப் பிரதியின்படி பதிப்பிக்கப்பெற்றது. 'சர்பாரூட சாஸ் திரம்', என்றும் இதற்குப் பெயர். மந்திர சக்கரங்களும் தரப்பட்டுள்ளன. viii. 31/1917/II.

L : 4 : 6

i. சித்திராரூடம் (தொ.எ. 1124-A பார்க்க); ii......; iii. 1916; iv செ.மூ.எ. 310; v......; vi......; vii. பாம்பின் வகை, குணம், அது கடித்தால் விளையும் விளைவுகள், மருத்துவம் ஆகியவை குறித்து எழுதப்பெற்ற பாடல்கள் உள்ளன. மற்றும், பல நோய்களுக்கான மருத்துவ வகை பற்றியும் இதில் உண்டு. viii. 31/1917/ II.

L : 4 : 6

i. மந்திராரூடம் (தொ. எ. 1124-A பார்க்க) ii......; iii. 1916; iv. செ.மூ.எ. 33 (55 முதல் 87 வரை); v......; vi......, vii. இப்பகுதியில், பாம்புக்கடி, தேள்கடி, மற்றும் இவை போன்றவைகளுக்கு மருந்து செய்யும் வகைகள் விளக்கப்பட்டுள்ளன. மந்திர சக்கரம் என்ற தலைப்பில் பல படங்கள் உள்ளன. சில தேவதைகளுக்குரிய தியான மந்திரங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. தியானத்தால் நோய் நீக்கும் உபாயத்தைத் தெரிவிப்பது. viii. 31/1917/II.

L : 4 : 6

i. சத்தியாரூடம்—100: முதற் பதிப்பு; (தொ. எ. 1126 பார்க்க); iii. செப்டம்பர், 1917; iv. செ.மூ.எ. 109; v..... ; vi......; vii நஞ்சு கடிக்கான பற்பல மருந்துகள் தயாரித்துப் பயன்படுத்துவது பற்றி இதில் சொல்லப்பட்டுள்ளன. மாத்திரை, லேகியம், குழம்பு, சூரணம், குளிகை, ஆகியவை தயாரிக்கும் வழி விளக்கப்பட்டுள்ளது. 'உமாமகேஸ்வரி அகஸ்திய முனிவருக்குத் திருவாய் மலர்ந்தருளிய சத்தியாரூடம்' என்று குறிக்கப்பட்டிருக்கிறது. viii. 31/1917/IV.

L : 4 : 6

**1125.** i. சிவாரூடம்—118: முதற் பதிப்பு; (தேவியாரூடம் 140; நாகராரூடம் 100) ii. த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் பிரஸ், மதுரை; iii. 1917; iv. செ.மூ.எ. 118; v. 22×14 செ.மீ.; vi. 0-8-0; vii. சில நஞ்சுக்கடிக்கான மருத்துவ முறை, மந்திரம் முதலியவை விளக்கப்பட்டுள்ளன. மந்திர சக்கரங்களின் படங்களும் இடம் பெற்றுள்ளன. "உமாமகேஸ்வரிக்குச் சிவபிரான் திருவாய் மலர்ந்தருளியது" என்று குறிக்கப்பட்டிருக்கிறது. viii. 39/1917/IV.

L : 4 : 6

**தன்வந்திரி பகவான்**

i. கெருட பஞ்சாட்சர ஆரூடம் (தொ. எ. 1126 பார்க்க); முதற் பதிப்பு; ii......; iii செப்டம்பர், 1917; iv. உ.ப. 28 (25—52); v......; vi......; vii. இதில் நஞ்சுக் கடிக்கான மந்திர சக்கரம் விளக்கப்பட்டுள்ளது. திருநீலகண்ட தியானமும், மந்திர சக்கரத்துடன் விளக்கப்பட்டுள்ளது. இவ்விரண்டும் பல்வேறு பயன் கருதிச் செய்யப்படுவனவாம். viii. 31/1917/IV.

L : 4 : 6

1126. i. கெருடாரூடம்—100 (கெருட பஞ்சாட்சர ஆரூடம், கெருட ஆரூடபத்து, சத்தியாரூடம்): முதற் பதிப்பு; ii......; iii. செப்டம்பர், 1917; iv. உ.ப. 24; v. 22×14 செ.மீ.; vi. 0–8–0; vii. பாம்பு கடித்தால் செய்யவேண்டிய மருத்துவ முறைகள் இதில் விளக்கப்பட்டுள்ளன. மந்திர சக்கரங்களின் படங்கள் இடம்பெற்றுள்ளன. வாடிப்பட்டி வைத்தியம் முத்துவேலுப் பிள்ளையவர்களிடமிருந்து வாங்கிய ஏட்டுப் பிரதியின்படி இந் நூல் அச்சிடப்பெற்றது. viii. 31/1917/IV.

L : 4 : 6

1127. தேவியாரூடமென்கிற சக்தி ஆரூடம்: திருத்திய இரண்டாம் பதிப்பு; ii. கொ. செல்வரங்கம் கம்பெனி, சென்னை; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை; iii. ஏப்ரல், 1918; iv. செ.மூ.எ. 102; v. 21×14 செ. மீ.; vi. 0–1–0; vii. தேள், பாம்பு போன்றவை கடித்தால், நஞ்சைப் போக்குவதற்கான மருந்து வகைகளும், மற்ற நோய்களைப் போக்கும் மருந்துகளை (நாட்டு மருந்து) தயாரிக்கும் முறைப் பற்றியும் இந்நூலில் விவரமாகக் கூறப்பட்டிருக்கிறது. பாம்புகளில் பலவகைகளையும், அவைகளின் பெயர் வகைகளையும் இந்நூலில் காணலாம். இந்நூல், நூறு விருத்தப் பாக்களால் ஆகியது. இஃது, உமாதேவியார், அகஸ்திய முனிவருக்குத் திருவாய் மலர்ந்தருளியதாகக் கூறப்பட்டுள்ளது. viii. 109/1918/II.

L : 4 : 6

பதஞ்சலி முனிவர்

i. தேவியாரூடம்—140 (தொ. எ. 1125 பார்க்க); ii, வித்துவான், த. குப்புசாமி நாயுடு, மதுரை; ஸ்ரீராமச்சந்திர விலாசம் அச்சியந்திரசாலை, மதுரை; iii. செப்டம்பர், 1917; iv. உ. ப. 24 (64–87) + செ.மூ.எ. 144; v......; vi......; vii. பல மருந்து பற்றிய கருத்துக்கள் விளக்கப் பட்டுள்ளன. மந்திர சக்கரங்களும் தரப்பட்டுள்ளன. viii. 30/1917/IV.

L : 4 : 6

## 618·2 பிரசவ வைத்தியம்

சதானந்த சுவாமிகள்

1128. i. சந்தானந்த ரத்தினம்: முதற் பதிப்பு; ii. டி. கே. ராமபத்ர சர்மா, தேவகோட்டை; எஸ்டேட் பிரஸ், தேவகோட்டை; iii. செப்டம்பர், 1917; iv. உ.ப. 137; v. 16×12 செ.மீ.; vi. 0–14–0; vii. இந்நூல், மலையாள மூல நூலிலிருந்து தமிழாக்கம் செய்யப்பெற்றது. ராமபத்ர சர்மா என்பவரால்

மொழி பெயர்க்கப்பட்டது. இல்லற வாழ்க்கை நடத்தும் நெறி, குறிப்பாக உடல் சம்பந்தமான அறிவுரைகள் அடங்கியுள்ளன. கிரந்த எழுத்தில் ஒரு சில பகுதிகளை எடுத்துக்கொடுத்து, அவற்றிற்குப் பொருளும் எழுதியுள்ளார். viii. 964/1917/IV.

L9F3

1129. தாய்மார்க்குரிய போதனை: முதற் பதிப்பு; ii. எம்.என்.எஸ். பிரஸ், சென்னை; iii. டிசம்பர், 1920; iv. உ.ப. 31; v. 18×13 செ.மீ.; vi. இலவசம்; vii. குழந்தை பராமரிப்பு பற்றியும், மகப்பேறு பற்றியும் விளக்கும் அறிவுரைகளைக் கொண்டது இப்புத்தகம். viii. 970/1920/IV.

L9F3

## 629·25 மோட்டார் இஞ்சினியரிங்

நடேச ஐயர், கோ., தஞ்சாவூர்

1130. ஆயில் என்ஜின்: முதற் பதிப்பு; ii. கோ. நடேச ஐயர், தஞ்சாவூர்; கல்யாணசுந்தரம் பவர் பிரஸ், தஞ்சாவூர், iii. அக்டோபர், 1916; iv. உ.ப. 192; v. 16×12 செ.மீ.; vi. 1-8-0; vii. பல்வேறு வகையான ஆயில் இன்ஜின் களைப் பற்றியும், அவைகளை இயக்குகின்ற முறைகளைப்பற்றியும், சேர்த்து இணைக்கின்ற விதங்களைப்பற்றியும் பட விளக்கங்களுடன் ஆசிரியர் இந்நூலில் விவரித்துள்ளார். என்ஜின்களைப்பற்றிய பல நுட்பங்களும் நன்கு விளங்குமாறு, பல படங்கள் சேர்க்கப் பட்டிருக்கின்றன. viii. 885/1916/IV.

D5133,964

ராமசாமி ஐயர், ஏ.

1131. i. ஆயில், கேஸ், அண்டு பெட்ரோல் என்ஜின்: முதற் பதிப்பு; ii. கௌதமன் அண்டு கோ., திருவிடைமருதூர்; பிர்ம வித்யா பிரஸ், திருமீயச்சூர்; iii. மே, 1919; iv. உ.ப. 138; v. 19×13 செ.மீ.; vi. 3-0-0; vii. இந் நூலில், என்ஜினில் பயன்படுத்தப்படும் எண்ணெயின் பண்பு கள், அவைகளைக் கண்டுபிடிக்கும் கருவிகள், வழிகள், மற்றும் அதனைச் சார்ந்த செய்திகள், படத்துடன் விளக்கப் பட்டுள்ளன. viii. 839/1919/II.

D5133,964

## 630 விவசாயம்

**கிருஷ்ணராவ் நிம்பல்கார்**

1132. i. தென் இந்தியா விவசாய நூல்; ii. ஜி. ராமோஜி ராவ், சென்னை; பீ. ஆர். ராம ஐயர் அண்டு சன்ஸ், அச்சுக் கூடம், சென்னை; iii. டிசம்பர், 1916; iv. உ. ப. 206; v. 19×13 செ.மீ.; vi. 1-4-0; vii. இந்நூலாசிரியர், தென்னிந்திய விவசாயத்தினைப்பற்றிப் பல சீர்திருத்தக் கருத்துக்களை இந்நூலில் எழுதியுள்ளார். ஆசிரியர், தமது சொந்த அனுபவத்தில், கண்ட செய்திகளை இதன்கண் விளக்குகிறார். உழவர்களுக்கு மிகவும் பயன்படும் புத்தகம். viii. 347/1917/I.

J

1133. i. சாஸ்த்ரீய உரம்: முதற் பதிப்பு; ii. பாரி அண்டு கோ., சென்னை; ஆனந்தா பிரஸ், சென்னை; ஜூலை, 1920; iv. உ. ப. 114; v. 25×17 செ.மீ.; vi. இலவசம்; vii. அந்தந்த நிலத்திற்கேற்ற முக்கிய பயிர் வகைகளுக்கேற்ப உரமிடும் முறைகள் இதில் விளக்கப்பட்டுள்ளன. viii. 527/1920/III.

J

**சின்னசாமி, கோம்பை**

1134. i. ஏல விவசாய நூல்: முதற் பதிப்பு; ii. சின்னச் சாமி, கோம்பை நகரம்; மகாலெக்ஷ்மி விலாசம் பிரஸ், மதுரை; iii. ஏப்ரல், 1919; iv. உ. ப. 78; v. 14×11 செ. மீ.; vi, இலவசம்; vii. ஏலம் பயிரிடுவதற்குரிய வழிமுறைகள் இதன்கண் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. viii. 1919/II.

J

**ஜெகதீச சந்திரபோஸ், ஸர்.**

1135. i. ஜீவ வாக்கு: முதற் பதிப்பு; ii. சுதேசமித்திரன் ஆபீஸ், சென்னை; சுதேசமித்திரன் பவர் அச்சுக்கூடம், சென்னை; iii. ஜனவரி, 1918; iv. உ. ப. 16; v. 22×14 செ. மீ.; vi.........vii. காளி கட்டம் எனப்படும் கல்கத்தாவில் தம்முடைய அறிவியல் நிலையத்தைத் திறக்கும்போது, ஜகதீச சந்திரபோஸ் ஆற்றிய உரையின் சுருக்கம் இது. தமிழாக்கம் செய்யப்பெற்றது. இதனை மொழிபெயர்த்தவர் திரு. சுப்பிரமணிய பாரதியாராவார். திரு. எ. ரங்கசாமி ஐயங்கார் இதற்கு முகவுரை எழுதியுள்ளார். viii. 735/1918/I.

J

## 638·1 தேனீ வளர்ப்பு

**கோபாலகிருஷ்ண ஐயர், ம., மதுரை**

1136. i. தேனும், தேனீயும், நற்பவளமும் ; ii. இ. மா். கோபாலகிருஷ்ணக் கோன், மதுரை ; மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை, மதுரை ; iii. 1916 ; iv. உ.ப. 79 ; v. 19×13 செ.மீ. ; vi. 0–10–0 ; vii. சென்னை சர்வகலா சாலை, இன்டர்மீடியட் வகுப்பிற்குரியப் பாடப் புத்தகம் 'அரும் பொருட்டிரட்டு' என்னும் பெரு நூலினின்றும் தெரிந்தெடுக்கப்பட்டுள்ள இரு கட்டுரைகள் கொண்ட நூல். நூலுள் பயின்றுவரும் அரும் பொருள்களுக்கு, நூலிறுதி யில் விளக்கம் தந்துள்ளார். ஆசிரியர், தமது முகவுரை யில், தமது அரும் பொருட்டிரட்டினைக் குறித்து விளக்கியுள் ளார். தமக்கு உதவியோருக்கு நன்றி தெரிவித்துள்ளார். viii. 373/1916/III.

KZ

## 641·5 குடும்பக்கலை

**பொன்னேல், ஒய்.ஜி.**

1137. i. குடும்ப நிர்வாக சாஸ்திரம் : திருத்திய நான்காம் பதிப்பு ; ii. ஒய். ஜி. பொன்னெல், சென்னை; கபாலீ பிரஸ், சென்னை ; iii. ஆகஸ்ட், 1917 ; iv. உ.ப. 240; v. 19×13 செ.மீ. ; vi. 0–12–0 ; vii. இந்நூல், கீழ் உயர்தரப் பள்ளிப் பெண்கள், குடும்பச் செயல்களை நடத்தும் இல்லாள், பிணியாளரையும் குழந்தைகளையும் பேணும் தாதியர் முதலிய பெண்களுக்கென எழுதப் பெற்றது. சரீரம், வீடு, சுகாதாரம், உணவு, நோய்கள், குழந்தை வளர்த்தல், சிக்கனம், முதலிய தலைப்புகளின்கீழ் விளக்கப் பட்டுள்ளது. படங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. viii. 676/1917/III.

M31

1138. i. சைவ பாக சாஸ்திரம் ; ii. சிவநேசன் அண்டு கம்பெனி ; அமெரிக்கன் டயமண்ட் அச்சுக்கூடம், சென்னை ; iii. 1919 ; உ.ப. 160 ; v. 22×14 செ.மீ. ; vi. 0 12—0 ; vii. சைவ உணவு வகைகளைத் தயாரிக்கும் முறை மிகவும் விளக்கமாக இதன்கண் கூறப்பட்டுள்ளது. பல நூற்களினின் றும் தொகுத்து எழுதி அமைக்கப்பட்டது. திரிகுண வஸ்துக் களின் குணானுபவங்கள் என்னும் பகுதியில், டலவகை உணவுப் பொருள்களைப் பற்றிய பண்புகள் விவரிக்கப்பட்டிருக் கின்றன. இந்நூலில் விவரிக்கப்பட்ட உணவு வகைகளைக் குறித்த அட்டவணை ஒன்றும், நூலிறுதியில் அகராதி அடைவில் உள்ளது. viii. 205/1920/I.

M31

## 646·4 தையற் கலை

**கோவிந்தசாமி முதலியார், டி.எம்.**

1139. i. தையற்காரனும், வெட்டுவோனும்—வால்யூம் I; திருத்திய மூன்றும் பதிப்பு; ii. எஸ். துரைசாமிமுதலியார், சென்னை; ஆட்சிட் அச்சுக்கூடம், சென்னை; iii. மே, 1918; iv. உ.ப. 29; v. 18×12 செ.மீ.; vi. 0-4-0; vii. தையற்கலையினைப் பற்றிய முழு விவரங்களும், பட விளக்கத்துடன் கூறப்பட்டுள்ளது. உடுப்புகளுக்குத் துணிகளை வெட்டுவதற்குரிய வழிமுறைகளை இந்நூலினகத்துக் காண லாம். விளக்கப் படங்களுடன் கூடியது. நூலிறுதியில், இனிய செந்தமிழ் நாவல்கள் என்னும் தலைப்பில் சில தமிழ் நாவல்களைப் பற்றிய சிறு குறிப்புக்களும் உள. viii. 797/1918/II.

M8

# 700—நுண்கலைகள்

## 728 கட்டடக் கலை

**கோபால ஐயர், ஆர்.**

1140. i. ஜலாசய நிர்மாண லக்ஷண சாஸ்திரம்: முதற் பதிப்பு; ii. ஆர். கோபால ஐயர், தஞ்சாவூர்; கல்யாண சுந்தரம் பவர் அச்சுக்கூடம், தஞ்சை; iii. ஆகஸ்ட், 1920; iv. உ.ப. 49; v. 17×13 செ.மீ.; vi. 0-8-0; vii. கிணறு வெட்டுவது பற்றிய எல்லா விவரங்களையும் இந்நூல் விளக்கிக் கூறுகிறது. இந்நூலாசிரியர், 'லலிதா நவரத்தின' மென்னும் மனையடி சாத்திர நூலொன்றையும் இயற்றியுள்ளார் எனத் தெரிகிறது. viii. 447/1920/III.

NA3

**வீராசாமி முதலியார், ஜோதிஷம்**

1141. i. சர்வார்த்த சிற்ப சிந்தாமணி: முதற் பதிப்பு; ii. செல்லப்ப முதலியார், கோலப்பஞ்சேரி; ஜீவகாருண்ய விலாச அச்சியந்திரசாலை, சென்னை; iii. 1915; iv. உ.ப. 342; v. 20×13 செ.மீ.; vi. 2-0-0; vii. இந்து சோதிடமும், மனையடி சாத்திரமும் விளக்கப்பட்டிருக்கின்றன. இது கட்டடம் அமைப்பதற்குத் துணை புரியும் சிற்ப நூல். சோடச மனைப் பொருத்தங்கள் விளக்கப்பட்டுள்ளன. தேவாலயச் சிற்பங்கள் செய்யும் வகைகளையும் விவரிக்கப்பட்டுள்ளது. 'விஷய அகராதி' நூல் முதலில் கொடுக்கப்பட்டிருக்கிறது. viii. 215/1916/II.

NA3

**1142.** i. சர்வார்த்த சிற்ப சிந்தாமணி : திருத்திய மூன்றும் பதிப்பு ; ii. செல்லப்ப முதலியார், கோலப்பஞ்சேரி ; வாணி விலாச அச்சியந்திரசாலை, சென்னை ; iii. மார்ச், 1919 ; iv. உ. ப. 342 ; v. 21×13 செ.மீ. ; vi. 2–0–0 ; vii. இந்நூலில், பல பழைய நூல்களிலிருந்து எடுக்கப்பட்ட சோதிடக் குறிப்புகள், ராசிபலன், நட்சத்திரம், நாள் ஆகியவை பற்றியும் கூறப்பட்டுள்ளன. மனைப்பொருத்தம் நோக்கி வீடு அமைத்தலும், அதன் பகுதிகள் ஒவ்வொன்றும் அமைக்க வேண்டிய வகையும் பற்றிக் கூறுகிறது. 'விஸ்வ கர்மாவாகிய மயன் என்பவர் திருவாய் மலர்ந்தருளிய சர்வார்த்த சிற்ப சிந்தாமணி' என்று இவ்வாசிரியர் இதற்குப் பெயர் சூட்டுகிறார். சிற்ப சாத்திரம் மயன் வழிப் பிறந்தது என்னும் ஏதுப்பற்றி இவ்வாறு கூறுகிறார். இதில் கூறப்படும் சோடசமனைப் பொருத்தம் மிக விரிந்த பகுதியாகும். தவிர, பூசல்லியம், தேவாலயச் சிற்பம் பற்றிய செய்திகளும் விவரிக்கப்பட்டுள்ளன. viii. 163/1919/II.

**NA3**

## 741·29 சித்திரக் கலை

**சுப்பிரமணிய ஐயர், ஏ., சைதாப்பேட்டை**

**1143.** i. கரும்பலகைச் சித்திரம் : ஐந்தாவது திருத்திய பதிப்பு ; ii. சி. ராமசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. செப்டம்பர், 1919 ; iv. உ.ப. 55 ; v. 25×19 செ.மீ. ; vi. 1–0–0 ; vii. பள்ளி மாணவர்கள் சித்திரம் வரைவதனால் ஏற்படும் நன்மைகளை வலியுறுத்தியும், சித்திரம் வரையும் முறைகளை விளக்கியும் இந்நூல் கூறுகிறது. மாதிரிப் படங்கள் நிறைய உண்டு. இயற்கைப் பொருள்களைப் பற்றிய படங்களோடு பூகோளம் பற்றிய படங்களும் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 1172/1917/III.

**NP**

**1144.** i. வஸ்து சித்திர லேகனம் : முதற் பதிப்பு ; சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; காக்ஸ்டன் பிரஸ், சென்னை ; iii. ஜனவரி, 1917 ; iv. உ.ப. 159 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—12—0 ; vii. கணிதத்திற்குத் தேவையான உபகரணங்களை வரையும் முறையை எளிதில் கற்க இந்நூலில் ஆசிரியர், முறைகளை விளக்கியுள்ளார். பொருள்களைப் பார்த்து வரையும் முறையை அறிந்தவர், பின்னர், கதைகளையும், பிராணி பறவைகளையும், பூகோள, பிரகிருதி, இரசாயன, தாவர சாத்திரப் பாட விளக்கங்களையும் செவ்வையாக வரையும் வன்மை பெறுவர். சாத்திரப் பயிற்சிகளுக்கு விளக்கமாக அமையும் படங்களை வரைந்து கொள்வதற்கு,

இப்பயிற்சி, முதற்படியாக அமையும். மாதிரிச் சித்திர விளக்கப் படங்களும் இடம்பெற்றுள்ளன. viii. 460/1917/I.

NP

## 745·5 கைத் தொழில்கள்

சுப்பிரமணிய ஐயர், ஏ., சைதாப்பேட்டை.

1145. i. காகித மாடல்கள் செய்தல்: முதற் பதிப்பு; ii. சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை; காக்ஸ்டன் பிரஸ், சென்னை; iii. பிப்ரவரி, 1917; iv. உ.ப. 31; v. 18×13 செ.மீ.; vi. 0—2—6; vii. இந்நூலில் சதுரம், முக்கோணம், சிலிண்டர் போன்ற வடிவங்களைச் செய்யும் விதத்தைப்பற்றி விளக்கப்பட்டிருக்கிறது. இவை கணிதம் முதலியன கற்பதற்குக் கருவியாம்; அதோடு, மாணவர்க்குச் சித்திரப் பயிற்சியும் கைவேலைப் பயிற்சியும் ஏற்படும். ஒவ்வொரு மாடல்கள் செய்வதற்கும் உருவம் வரைதல், கத்தரித்தல், மடித்தல், ஒட்டுதல் என வரும் நான்கு வகைத் தொழில் முறைகளும் விவரிக்கப்பட்டுள்ளன; viii.874/1917/I.

N

# 780 இசைக்கலை

## 781 இசை பற்றிய கோட்பாடுகள்

அப்பாதுரைப் பண்டிதர், வி. & முனுசாமி நாயுடு, ஏ.

1146. i. சங்கீத ரஞ்சனி, முதற்பாகம்: முதற் பதிப்பு; ii. டௌடன் கம்பெனியார், சென்னை; பீர்லெஸ் பிரஸ், சென்னை; iii. அக்டோபர், 1916; iv. செ.மூ.ப. 221; v. 25×17 செ.மீ.; vi. 3—0—0; vii. ஆர்மோனியம் என்ற இசைக் கருவியைப் பழகுவதற்கான இசை நுணுக்க விளக்கங்களும், இந்துஸ்தானி இசை விளக்கங்களும், முறைகளும் இந்நூலில் அடங்கியுள்ளன. இது முதல் பாகமாகும். ஆர்மோனிய இசை கற்போர்க்குப் பயன்படும் நூல்; viii. 364/1916/IV.

NR

ஆபிரகாம் பண்டிதர், மு.

1147. i. இந்திய சங்கீதத்தில் வழங்கி வரும் சுருதிகளைப்பற்றி; ii. லாலி எலக்டிரிக் பிரிண்டிங் பிரஸ், தஞ்சாவூர்; iii. 1918; iv. உ.ப. 8; v. 26×20 செ.மீ.; vi. .......... ; vii. இதில், 1918-ஆம் ஆண்டு, அகில இந்திய சங்கீத சபையில், இந்திய இசையில் வழங்கிவரும் சுருதிகளைப்பற்றி வாசித்தவைகளைத் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது; viii. 277/1918/II.

NR44

1148. i. கருணாமிர்த சாகரம்: முதற்புத்தகம்: முதற் பதிப்பு; ii. மு. ஆபிரகாம் பண்டிதர், தஞ்சாவூர்; லாலி எலக்டிரிக் அச்சுக்கூடம், தஞ்சை; iii. ஆகஸ்ட், 1917; iv. உ.ப. 1,208; v. 29×22 செ.மீ.; vi. 20-0-0; vii. முத் தமிழில் ஒன்றான இசைத் தமிழ் பற்றி விரிவாக இதில் கூறப்பட்டுள்ளது. கர்நாடக இசை முதற்கொண்டு எல்லா இசை வகைகளும் இதில் விளக்கப்பட்டுள்ளன. சங்கீத சாத்திரத்தின் அடிப்படையாய் வழங்கும் சுருதிகளைப் பற்றிய பல ஐயங்களை நீக்கி, தமிழ் மக்கள் வழங்கி வந்த இசைத் தமிழின் பல மேற்கோள்களையும், இக்காலத்தில் வழங்கிவரும் அனு போகங்களையும், திட்டமான அளவையும் விளக்கிக் காட்டி யுள்ளார். சுருதிகளைப்பற்றிச் சொல்லும் இம்முதற் புத்தகத் திற்குக் 'கருணானந்தர் பொற்கடகம்' என்று பெயர் வழங்கும். இது நான்கு பெரும் பகுதிகளைக் கொண்டது: 1. இந்திய சங்கீத சரித்திரச் சுருக்கம், 2. இருபத்திரண்டு சுருதிகள், 3. தென்னிந்தியாவில் வழங்கிவரும் இசைத்தமிழ்ச் சுருதிகள், 4. கர்நாடக சங்கீதம் என்றழைக்கப்படும் இசைத் தமிழில் வழங்கிவரும் சுருதிகளின் கணக்கு ஆகியவை விவரிக்கப் பட்டுள்ளன; viii. 993/1917/III.

NR44

1149. i. பரோடா ஆல் இந்தியா மியூசிக் கான்பரன்சில் நடந்தவை பற்றி கிளிமெண்ட்ஸ் துரை எழுதிய இரண்டாவது கடிதத்திற்கு மறுப்பு; ii. மு. ஆபிரகாம் பண்டிதர், தஞ்சை; லாலி எலக்டிரிக் பிரின்டிங் பிரஸ், தஞ்சை; iii. டிசம்பர், 1916; iv. உ.ப. 80; v. 25×22 செ.மீ.; vi. 0-8-0; vii. பரோடாவில் நடந்த அகில இந்திய சங்கீத மாநாட்டின் அங்கத் தினர்களுக்கும், சங்கீதப் பற்றுள்ள மற்றவர்க்கும், தஞ்சை மு. ஆபிரகாம் பண்டிதர் அவர்களுக்கும், 8-8-1916 கிளமெண்ட்ஸ் அவர்கள் எழுதிய இரண்டாவது கடிதமும் அதன் மறுப்பும் இதில் அடங்கியுள்ளன; viii. 100/1917/I.

NR44

**கிருஷ்ணசாமி ஐயர், சி. எஸ்.**

1150. i. வெங்கடேசுவர தாள வர்ணங்கள்: முதற் பதிப்பு; ii. சி. எஸ். கிருஷ்ணசாமி ஐயர், சென்னை; ஸ்காட்டிஷ் அச்சியந் திரசாலை, சென்னை; iii. ஏப்ரல், 1917; iv. உ.ப. 55; v. 22×14 செ.மீ.; vi. 0—12—0; vii. இது, வெங்கடேசக் கடவுளைக் குறித்துப் பாடப்பெற்ற இசைநூல். மேள ராகங்களின் சக்கரம், ஆதிதாள வர்ணங்கள் ஒன்பது, அடதாள வர்ணங்கள் ஒன்பது ஆகியவை இந்நூலில் இடம்பெற்றுள்ளன. பட்டணம் சுப்ரமணிய ஐயர் பாடிய சாகித்ய ரத்தினங்களைச் சுரப்படுத்தி வெளியிட்டிருக்கும் சி. எஸ். கிருஷ்ணசாமி ஐயர், அவருடைய மாணவராவர். சமஸ்கிருதம், பிராகிருதம், தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிச் சொற்களை உச்சரிப்பதற்குத் தக்க

தமிழ் எழுத்துக்கள் ஒப்புமை காட்டப்பட்டிருக்கின்றன. ஸ்தாயி காலப்பிரமாணம் முதலிய வேறு சிலவற்றைப் பற்றிய குறிப்புக்களும் உள ; viii. 13/1917/III.

NR44

**நாராயண தாசர், தேவேந்திரபுரம் & அருணாசலம் பிள்ளை, மொ.து.**

1151. i. சங்கீதஸ்வர பூஷணி, முதற் பதிப்பு : ii. தி. சுப்பிரமணிய முதலியார், பரங்கிமலை ; வாணிவிலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1918 ; iv. செ.மூ.ப. 88 ; v. 22×14 செ.மீ. ; vi. 0—12—0 ; vii. சங்கீத வித்தையைக் கற்றுக் கொள்பவர்களுக்கான, எளிய முறையில் அமைந்த நூல். இந்துஸ்தானி சங்கீத சுரங்களைப்பற்றி இதில் விளக்கப்பட்டுள்ளது. பட விளக்கங்களுடன் கூடியது. சாதாரணமாய் உபயோகப்படுகின்ற தாளங்களின் பட்டியல் ஒன்றும் இதன்கண் உண்டு. ஆரோகணம், அவரோகணம் முதலிய பல செய்திகளும் விளக்கப்பட்டுள்ளன ; viii. 641/1918/IV.

NR44

1152. i. சங்கீதஸ்வர பூஷணி: முதற் பதிப்பு ; ii. . . . . . ; iii. . . . . . ; iv. . . . . . ; v. . . . . . ; vi. . . . . . ; vii. . . . . . ; viii. 980/1920/I.

NR44

**மரகதவல்லி அம்மாள்**

1153. i. கர்ணாமிர்த சாகரத் திரட்டு: முதற் பதிப்பு; ii. எம். ஆபிரகாம் பண்டிதர், தஞ்சை ; லாலி பிரிண்டிங் பிரஸ், தஞ்சை ; iii. ஆகஸ்ட், 1916; iv. செ.மூ.ப. 15 ; v. 25×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. சங்கீத விதிகளோடு கூடிய புதிய பாடல் திரட்டாகும். இதனை இயற்றியவர், தஞ்சை மு. ஆபிரகாம் பண்டிதரின் குமாரத்தி மரகதவல்லியம்மாளாவார். புதிய ராகங்களில் புதிய வர்ணமெட்டுக்களாகப் பாடப்பெற்றது. 1916 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 19 ஆம் நாள், தஞ்சை சங்கீத வித்யா மகாஜன சங்கத்தில், திவான் சாகிப் வி. மாதவராவ் என்பவர் தலைமையில், இப்பாடல்கள் பாடி, அரங்கேற்றம் செய்யப்பெற்றன ; viii. 792/1916/III.

NR44

**ஸ்ரீநிவாச ஐயர், திருநெல்வேலி**

1154. i. ஸங்கீத முதற்புத்தகம்: முதற் பதிப்பு ; ii. ஸ்ரீநிவாச ஐயர், திருநெல்வேலி ; சிவுரகஸ்ய முத்ராலயம், சென்னை ; iii. 1916 ; iv. செ.மூ.ப. 52 ; v. 19×13 செ.மீ. ; vi. 0—6—0 ; vii. 'ஆர்மோனியத்தை' எளிதில் கற்பிக்கும் வகையில் அமைந்த புத்தகம். "ஆர்மோனியத்தைச் சுலபமாய்க் கற்பிக்கும் உபாத்தியாயராகிய சங்கீத் முதற் புத்தகம்" என்பது இந்நூலின் முழுப்பெயர். 'கர்நாடக சங்கீத முறையைப் பயில்வோருக்கு ஏற்ற கருவியாக உள்ளது' இச்சிறுநூல் ; viii. 172/1917/I.

NR44

**ஸ்ரீநிவாச ஐயங்கார், சி. ஆர். (தொ.து.)**

**1155.** **i.** தென் இந்திய சங்கீதம்: தியாகராஜர் கிருதிகள், பாகம்–4, முதற் பதிப்பு ; **ii.** சி. ஆர். ஸ்ரீநிவாச ஐயங்கார், எர் வாடி ; இந்தியா பிரின்டிங் ஒர்க்ஸ், சென்னை ; **iii.** பிப்ரவரி, 1917 ; **iv.** செ.மூ உ.ப. 216 ; **v.** 24×19 செ.மீ. ; **vi.** 0—12—0 ; **vii.** தியாகராஜரின் கீர்த்தனங்களும், அவைகளின் பொருளும் இதில் தரப்பட்டுள்ளன. பாடல்களுக்குரிய சுரவிளக்க குறிப்புகளும் உள்ளன. 37 முதல் 48 வரை 12 கீர்த்தனங்கள் இந்தப் பகுதியில் உள. கீர்த்தனை வெளியீட்டில் இது நான்காவது பகுதியாகும்; **viii.** 883/1917/I.

**NR44**

**ஸ்ரீநிவாச ஐயங்கார், கே. வி.**

**1156.** **i.** சங்கீத ரஸார்ணவம்: முதற் பதிப்பு ; **ii.** எம். ஆதி அண்டு கம்பெனி, சென்னை ; சந்திரா அச்சுக்கூடம், மதராஸ் ; **iii.** டிசம்பர், 1918 ; **iv.** செ.மூ.ப. 337 ; **v.** 18×13 செ.மீ. ; **vi.** 2—8—0 ; **vii.** இந்நூலில், பழமையான அனேக கீர்த்தனைகள், ஜாவளிகள் முதலியனவும், அனேக இராகங்கட்கு இலக்கணமும், பண்டைய இசையைப் பற்றிய முழு விவரமும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இதில் சேர்க்கப்பட்ட பாடல்களின் விவரமும், அவற்றைப் பாடினோர் பெயருடன் நூல் முதலில் அட்டவணையாகத் தரப்பட்டிருக்கிறது. இப்பாடல்கள் எல்லாம் ராக, தாளக் குறிப்புகளுடன் சுரப்படுத்தியும் காட்டப்பட்டிருக்கின்றன. இசை பயில்வாருக்கு ஏற்ற ஒரு புத்தகம்; **viii.** 48/1919/I.

**NR44**

**ஸ்ரீநிவாச ஐயங்கார், வி.**

**1157.** **i.** ஸங்கீதானுபவ ஸார ஸங்கிரஹம், முதற்பாகம், திருத்திய நான்காம் பதிப்பு ; **ii.** வி. ஸ்ரீநிவாச ஐயங்கார், ஸ்ரீவைகுண்டம்; ஸ்ரீகான வித்யா பிரஸ், ஸ்ரீவைகுண்டம் ; **iii.** ஜூலை 1919 ; **iv.** செ.மூ.உ.ப. 154 ; **v.** 22×15 செ.மீ. ; **vi.** 1—12—0 ; இது இசைக்கலை பற்றிய நூல். குறிப்பாக ஆர்மோனியம், வீணை முதலிய இசைக் கருவிகளில் பயிற்சி பெறும் முறை, குறிப்பு மற்றும் அவசியமான ராக, தாளக் குறிப்புக்கள் முதலியன இதில் அடங்கியுள்ளன. பட விளக்கங்களைக் கொண்டது. சங்கீத வித்வான் சீனிவாச ஐயங்கார் அவர்களின் நிழற்படமொன்று முதற்பக்கத்தில் அமைந்துள்ளது. சங்கீதப் பொருள்கள் சிலவற்றை ஆசிரியர் தமது முகவுரைகளில் விளக்கியுள்ளார். 35 கீர்த்தனங்கள் சுரப்படுத்தித் தரப்பட்டுள்ளன; **viii.** 415/1919/III.

**NR44**

## 784·0954 வாய்ப்பாட்டுக் கீர்த்தனம்

**அச்சுதானந்த சுவாமிகள், சம்பத்கிரி**

1158. i. அத்வைத கீர்த்தனானந்த லகரி: முதற் பதிப்பு; ii. கா. ந. குப்புசாமி ரெட்டி, திருவண்ணாமலை; கலைக்கியான முத்திராக்ஷர சாலை, சென்னை; iii. அக்டோபர், 1920; iv. செ.மூ.ப. 54; v. 18×13 செ.மீ.; vi. 0—6—0; vii. அத்வைத வேதாந்தத்தை விளக்கும் கீர்த்தனைகளைக் கொண்டதாகும் இந்நூல். திரு. அச்சுதாநந்த சுவாமிகளின் திரு உருவப் படத்துடன் கூடியது. திரு. சற்குரு சரணாலயன் என்பார் பாடிய குரு வணக்கப்பாடலும் முதற்கண் தரப்பெற்றிருக்கிறது. viii. 390/1920/IV.

NR44

**அண்ணாமலை முதலி, ஏ. வி.**

1159. i. முத்துக்குமாரசாமி தோத்திர கீதங்கள்: முதற் பதிப்பு; ii. ஏ. வி. அண்ணாமலை முதலி, வண்டிபாளையம்; iii. ஆகஸ்ட், 1920; iv. செ.மூ.ப. 9; v. 23×15 செ.மீ.; vi. இலவசம்; vii. இதில் கூடலூரைச் சார்ந்த முருகேச நகர் முத்துக்குமாரசுவாமி தோத்திரக் கீர்த்தனைகள் அடங்கியுள்ளன. viii. 887/1920/III.

NR44

**அப்துல்லா சாயபு, எப். எம்.**

1160. i. பக்திரசக் கீர்த்தனம்: முதற் பதிப்பு; ii. ஈ. எம். அசன்கான் சாகிப், ஈரோடு; ஷண்முகவிலாச அச்சுக்கூடம், சேலம்; iii. ஜூலை, 1920; iv. செ.மூ.ப. 19; v 18×11 செ.மீ.; vi. 0—3—0; vii. இஸ்லாமியப் பெரியாரான முகமது நபியினைப் போற்றி எழுதப்பெற்ற துதிப் பாடல்கள் (கீர்த்தனைகள்) இதில் உள்ளன. viii. 347/1920/III.

NR44

**அப்பாவு நாயுடு**

1161. i. தாந்தோணி வெங்கட்ரமண சுவாமி பஜனைக் கீர்த்தனம்: முதற் பதிப்பு; ii. அப்பாவு நாயுடு, கரூர்; விவேகபானு பிரஸ், கரூர்; iii. ஜூலை, 1917; iv. செ.மூ.ப. 13; v. 23×15 செ.மீ.; vi. . . . . . . . . . . . .; vii. கருவூரின் அருகில் உள்ள தாந்தோணியில் விளங்கும் வெங்கட்ரமண சுவாமியைக் குறித்துப் பாடப்பெற்ற பஜனைக் கீர்த்தனம் இதில் காணப் பெறுகிறது. காங்கயம் அஷ்டாவதானம் வி. சேஷாசலம் நாயுடு இதற்குச் சாற்றுக்கவி பாடியுள்ளார். viii. 346/1917/III.

NR44

**அருணாசலய்யர், கா., பேரமல்லூர்**

1162. i. சண்முக நவநீதம்: முதற் பதிப்பு ; ii. அ. கோவிந்தராஜு பிள்ளை, வேலூர் ; கிருஷ்ண விலாச அச்சுக்கூடம், ராயவேலூர்; iii. மே, 1917 ; iv. செ.மூ.ப. 16 ; v. 14×12 செ.மீ. ; vi. இலவசம் ; vii. சுப்ரமணியக் கடவுளைக் குறித்துப் பாடப் பெற்ற பக்திப் பாடல்கள் இதில் உள்ளன. இதில் உள்ள பாடல்கள், பஜனைக்கு உகந்த கீர்த்தனைகள் ஆகும். viii. 444/1917/II.

NR44

**அலங்காரம் அய்யங்கார் ஸ்வாமி**

1163. i. நம்மாழ்வார் திருநாமங்கள் ; ii. திருவேங்கடம்மாள், நாங்குனேரி ; ஸ்ரீகான வித்யா பிரஸ், ஸ்ரீவைகுண்டம் ; iii. மார்ச், 1918 ; iv. செ.மூ.ப. 55 ; v. 19×18 செ.மீ. ; vi. 0—10—0 ; vii. திருக்குருகூரில் கோயில்கொண்டுள்ள நம்மாழ்வார் மீது பாடப்பெற்ற பல பக்திப்பாடல்களைக் கொண்டுள்ளது இந்நூல். கீர்த்தனைப்பாடல்களாலானது. சூடிக் கொடுத்த நாச்சியார் திருநாமங்கள் என்ற தலைப்பில் ஒரு வெண்பா, ஒரு கட்டளைக் கலித்துறை, இரு கீர்த்தனங்கள், ஒரு விருத்தம் ஆகியனவும் உண்டு. ஸ்ரீவில்லிபுத்தூரிலிருக்கும் நல்லான் சக்கரவர்த்தி திருவேங்கடாச்சாரியார் திருவாய் மலர்ந்தருளிய நம்மாழ்வார், மார்கழித் திருநாள் பற்றிய கண்ணிகள் இந்நூலின் ஈற்றிலுள்ளன. viii. 84/1918/II.

NR44

1164. i. அற்புதானந்த பார்வதீ ஹிந்துஸ்தான் பஜனைக் கீர்த்தனை ; முதற் பதிப்பு ; ii. ஜீ. எம். மீனாட்சிசுந்தர முதலியார், மதுரை ; சூரியோதயம் பிரஸ், மதுரை ; iii. செப்டெம்பர், 1917 ; iv. செ.மூ.ப. 48 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—2—0 ; vii. இது சுப்ரமணியக்கடவுள்பேரில், நூதன இந்துஸ்தான் பார்சி இசையில் அடங்கிய கீர்த்தனைகளும், சில திருப்புகழ்ப் பாட்டுகளும், தனி இந்துஸ்தான் பாட்டுகளும் அடங்கியது. viii. 347/1917/IV.

NR44

**இராமசாமிக் கவிராயர், கே.**

1165. i. பக்திரச ஜீதாமிர்த சங்கீர்த்தனங்கள், ii. கல்யாணசுந்தரம் பிள்ளை, மதுரை ; கிருஷ்ண விலாசம் பிரஸ், திருமங்கலம் ; iii. டிசம்பர், 1916 ; iv. செ.மூ.எ. 73 ; v. 16×12 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. சுப்ரமணியரைக் குறித்துப் பாடப் பெற்ற பக்திப் பாடல்கள் இவை. நூதன சிருங்கலி சந்தவர்ண மெட்டுகளில் பாடல்கள் அடங்கியுள்ளன. திருச்செந்தூர், பழனி முதலிய பல தலத்துப் பெருமான்களைக் குறித்தும் பாடியுள்ளார். viii. 62/1917/I.

NR44

**இராமசாமி தாசர், சாத்தனூர்**

1166. i. மெய்ப்பொருள் நாயனார் சரித்திரக் கீர்த்தனை: முதற் பதிப்பு ; ii. எஸ். முத்துக்குமர உடையார், குடந்தை ; ஸ்ரீகிருஷ்ண விலாச அச்சியந்திரசாலை, கும்பகோணம் ; iii. ஜூலை, 1918 ; iv. செ.மூ.ப. 49 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—7—0 ; vii. மெய்ப்பொருள் நாயனார் சரித்திரம் மிகத் தெள்ளிய கீர்த்தனை நடையில் ஆக்கப்பட்டுள்ளது. சென்னை, தங்கசாலை, பண்டரி பஜனை, பாகவதர், ஸ்ரீமான் வேணுகோபால் தாசர் சிறப்புப் பாயிரம் தந்துள்ளார். திருவண்ணாமலைத் தாலுகா வேட்டவலம ஜமீன்தார் சக்கரையா பண்டாரியார் அவர்கள் விருப்பப்படி இந்நூல், இராமசாமி தாசரால் இயற்றப்பட்டதாகத் தெரிகிறது. viii. 429/1918/III.

NR44

**இராமசிங்கம், வீ. பி. எம்., முத்துலாபுரம்**

1167. i. சிவசுப்ரமணியக் கடவுள் மீது நாதன இந்துஸ்தான் பஜனைக் கீர்த்தனை: முதற் பதிப்பு; ii. எஸ். பொன்னையா பிள்ளை, மதுரை ; ஷண்முக விலாச அச்சியந்திரசாலை, மதுரை ; iii. அக்டோபர், 1916 ; iv. செ.மூ.ப. 40 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—2—0 ; vii. சுப்பிரமணிய சுவாமிகள் பேரில் அமைந்த பஜனைக் கீர்த்தனைகளைக் கொண்டது இப்புத்தகம். பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. viii. 436/1916/IV.

NR44

**இராம பாகவதர், குன்றக்குடி**

1168. i. குன்றக்குடி ஸ்ரீஷண்முகநாதனது ஸ்தூபிப் பிரதிஷ்டை, முதலியன ; ii. வைசியமித்திரன் பிராஞ்ச் பிரஸ், காரைக்குடி ; iii. 1919 ; iv. செ.மூ.ப. 8 ; v. 15×11 செ.மீ. ; vi. .......... ; vii. குன்றக்குடி என்னும் மயூரகிரியில் எழுந்தருளியிருக்கும் சண்முகநாதனது ஸ்தூபிப் பிரதிட்டைக் கீர்த்தனமும், திருப்பத்தூர் நூதன வெள்ளி ரிஷபவாகனக் கீர்த்தனமும், திருப்பத்தூர் நூதன தெப்போற்சவக் கீர்த்தனமும் இதன்கண் அடங்கியுள்ளன. காரைக்குடியிலிருக்கும் மழவை சாமிநாதய்யர் தந்துள்ள சாற்றுக் கவியுடன் கூடியது. viii. 189/1920/I.

NR44

**இராஜூ முதலியார், எஸ். ஆர்.**

1169. i. சுப்ரமணியக் கடவுள் கீர்த்தனம்: முதற் பதிப்பு ; ii, ஆறுமுக முதலியார், சென்னை ; முராஹரி அச்சுக்கூடம் சென்னை ; iii. 1919 ; iv. செ.மூ.ப. 23 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—2—0 ; vii. இதில், திருத்தணிகையில் விளங்கும் சுப்ரமணியக் கடவுளைக் குறித்த பக்திப் பாடல்கள்

அடங்கியுள்ளன. இவை திருப்புகழ்க் காவடிச்சிந்து வர்ண மெட்டில் அமைந்துள்ளன. ஆரணி தமிழ்ப் பண்டிதர் எம். சுந்தர முதலியார், ஜோதிடம் மா. முனிசாமிப் பிள்ளை, களம்பூர் தலைமை ஆசிரியர் ச. பழனிவேற் பிள்ளை ஆகியோர் இயற்றிய சாற்றுக் கவிகள் இதில் அடங்கியுள்ளன ; viii. 723/1920/I.

NR44

**கணிக்கண்ண ராமாநுஜதாசர், ரா. மு., கூனூர்**

1170. i. ஹரியாநந்த கீர்த்தனைகள்: முதற் பதிப்பு ; ii. ரா. மு. கணிக்கண்ண ராமாநுஜ தாசர், கூனூர் ; நியூ ஆல்பியன் அச்சுக்கூடம், கூனூர் ; iii. நவம்பர், 1919 ; iv. செ.மூ.ப. 36 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—4—0 ; vii திருமாலைப் புகழ்ந்து கீர்த்தனைகளாகப் பாடப்பட்டுள்ள பாடல்களுக்கு இராக தாளக் குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன ; viii. 1052/1919/IV.

NR44

**கதிர்வேல் பிள்ளை, கே. வி., கும்பகோணம்**

1171. i. ராமநாம பஜனை கீர்த்தனை திருப்புகழ்ச் சிந்து: முதற் பதிப்பு ; ii. பெ. ஆறுமுக முதலியார் ; மூஹரி அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1917 ; iv. செ.மூ.ப. 24 ; v. 22×14 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. இராமன் மீதான திருப்புகழ்ச் சிந்துப் பாடல்கள் இதில் தரப்பட்டுள்ளன. காவடிச்சிந்து, திருப்புகழ்ப் பாடல்களின் வர்ண மெட்டுக்களில் அமைந்த பாடல்களைக் கொண்டது. பஜனை செய்வோர்க்குப் பயன்படத்தக்க புத்தகம் ; viii. 773/1918/I.

NR44

**கந்தசாமி உபாத்தியாயர் வரகவி, பெருநகர்**

1172. i. வள்ளிநாயகி கலியாணம்: முதற் பதிப்பு ; ii. வரகவி கந்தசாமி உபாத்தியாயர், பெருநகர், விஸ்வகுலோத்தாரண அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1916 ; iv. செ.மூ.ப. 40; v. 17×11 ; vi. 0—2—0 ; vii. ஆறுமுகனுக்கும் வள்ளியம்மைக்கும் நடந்த திருமணக் கதையை விளக்குவது. இசைக் கீர்த்தனைகளினால் ஆகியது. நாடகப் பாங்கில் அமைந்தது. கதைத் தொடர்பான தலைப்புக்கள், அங்கங்கே, வேண்டிய இடங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. viii. 523/1916/II.

NR44

**கருணையானந்த சுவாமிகள்**

1173. i. புலிவலம் தெண்டாயுதபாணிக் கடவுள்மீது திருப்பாவணி (இரண்டாம் பாகம்): முதற் பதிப்பு ; ii. தி.மு. ராமதனுக்கோடியா பிள்ளை, புலிவலம், பிரம்ம வித்யா அச்சுக்

கூடம், திருமீயச்சூர், iii. ஜூன், 1918; v. செ.மூ.ப. 16; v. 18×13 செ. மீ.; vi. 0—1—6; vii. இது புலிவலம் ஸ்ரீஷண்முக விலாச மடாலயத்தில் திருவுருக் கொண்டெழுந்தருளிய தெண்டாயுதபாணிக் கடவுள்மீது பாடப்பெற்ற திருப்பாவணியின் இரண்டாம் பாகம். இந்நூல், கீர்த்தனைகளாலாகியது. 21 கீர்த்தனைகள் உள. ஒவ்வொரு பாடலுக்கும் உரிய இராக தாளக் குறிப்புக்கள் அவ்வவற்றின் தொடக்கத்தில் குறிக்கப்பட்டிருக்கின்றன. viii. 110/1918/III.

NR44

கருப்பையா சேர்வை, ஏ., கீழத்துலுக்கன்குளம்

1174. i. நவரசக் கீர்த்தனங்கள், முதற் பதிப்பு; ii. ஏ. கருப்பையா சேர்வை, கீழத்துலுக்கன்குளம்; சச்சிதானந்தா அச்சியந்திரசாலை, விருதுப்பட்டி; iii. ஜனவரி, 1920; iv. செ.மூ.ப. 10; v. 19×13 செ.மீ. vi. 0—1—0; vii. கோட்டூர் குருசுவாமியின் பேரில் பாடப்பெற்ற நவரசக் கீர்த்தனங்கள், இராக, தாளக் குறிப்புகளுடன் இதில் அடங்கியுள்ளன; viii. 482/1920/I.

NR44

கலியாணசுந்தரம் பிள்ளை, மதுரை

1175. i. சிவ சுப்ரமண்யக் கடவுள்மீது இந்துஸ்தான் பஜனை: முதற் பாகம்; திருத்திய பதிப்பு; ii. இ. மா. கோபால கிருஷ்ணக் கோன், மதுரை; சன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1918; iv. செ.மூ.ப. 40; v. 22×14 செ. மீ.; vi. 0—2—0; vii. சிவசுப்ரமணியக் கடவுள் மீது பாடப்பெற்ற முக்கியமான திருப்புகழ்ப் பாடல்களும், பார்சி இந்துஸ்தான் வர்ண மெட்டுக்களுமடங்கிய பஜனைக் கீர்த்தனையின் முதல் பாகம் இது. பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன; viii. 615/1918/III.

NR44

கிருஷ்ணதாசர், வே.

1176. i. நாகவல்லி அம்மையின்மீது பஞ்சரத்நக் கீர்த்தனம்: முதற் பதிப்பு; ii. சா. சி. பார்த்தசாரதி பிள்ளை; அமெரிக்கன் டயமண்ட் பிரஸ், சென்னை; iii. ஆகஸ்ட், 1918; iv. செ.மூ.எ. 5; v. 13×11 செ.மீ.; vi. இலவசம்; vii. சுங்குவார் தோட்டத்தில் புற்றிடங்கொண்டெழுந்தருளிய நாகவல்லியம்மையின்மீது பாடப்பெற்ற ஐந்து கீர்த்தனங்களைக் கொண்டது இப்புத்தகம். ரத்தினங்களைப் போன்ற ஐந்து ரத்தினங்களைப் கொண்டதாகலின், இது பஞ்சரத்தினக் கீர்த்தனம் எனப் பெயர் பெற்றது; viii. 712/1918/III.

NR44

**கிருஷ்ணபாகவதர்**

1177. i திருப்பரங்குன்றம் சிவசுப்ரமண்யர் ஸ்வர ஸாகித்ய பஜனைக் கீர்த்தனை மாலை : முதற் பதிப்பு ; ii. எஸ். வையப்ப ரெட்டியார், கோவில்பட்டி ; அஷ்டலட்சுமி விலாசம் பிரஸ், மதுரை ; iii. ஜூலை, 1919 ; iv. செ.மூ.ப. 32 ; v. 16×13 செ.மீ. vi. 0—4—0 ; vii. திருப்பரங்குன்றத்தில் விளங்கும் சிவசுப்ரமண்யரைக் குறித்துப் பாடப்பெற்ற கீர்த்தனைகள் இதில் அடங்கியுள்ளன; viii. 259/1919/III.

**NR44**

1178. i. பஜனைக் கீர்த்தனை, முதற் பதிப்பு : ii. எஸ். வையப்ப ரெட்டியார், கோவில்பட்டி ; அஷ்டலட்சுமி விலாசம் பிரஸ், மதுரை ; iii. 1919 ; iv. செ.மூ.ப. 59 ; v. 16×12 செ.மீ. ; vi. 0—4—6 ; vii. சிவசுப்ரமணியக் கடவுளைக் குறித்துப் பாடப்பெற்ற கீர்த்தனைகள் அடங்கியுள்ளன, இசை நுணுக்கங்களும் இடையிடையே காணப்படுகின்றன. viii. 526/1920/I.

**NR44**

**குமரவேல் சுவாமிகள், ஆர். எம்., குருஞ்சேரி**

1179. i. திருநாளைப் போவாரெனும் நந்தனார் சரித்திரக் கீர்த்தனை ; ii. எஸ். பாலசுப்ரமணிய ஐயர், உதய நத்தம் ; கமலா பிரஸ், மாயவரம் ; iii. டிசம்பர், 1917 ; iv. செ.மூ.ப. 23 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—2—0 ; vii. அறுபத்து மூவரில் ஒருவரான திருநாளைப் போவாரென்னும் நந்தனாரின் வரலாறு கீர்த்தனைப் பாடல்கள் வடிவில் தரப்பட்டுள்ளது. பாரீஸ் இந்துஸ்தான் மெட்டுப் பாடல்களும் உள. இது கோபாலகிருஷ்ண பாரதியின் கீர்த்தனை நூலின் வேறாகப் பிற்காலத்து எழுந்த நூல. உதையநத்தம் எஸ். பாலசுப்ரமணிய ஐயர், கும்பகோணம், டீ. வி. சதாசிவப் பண்டாரத்தார், ஆணிக்காரன்சத்திரம், எஸ். என். கிருஷ்ணசுவாமி நாயக்கர் ஆகியோர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர். viii. 951/1917/IV.

**NR44**

**குழந்தை வேலப்ப கவுண்டர்**

1180. i. திருவாட்சி கதிரோபனப் பெருமாள் தோத்திர மஞ்சரி; ii. சென்ட்ரல் அச்சுக்கூடம், ஈரோடு ; iii. 1917 ; iv. செ.மூ.ப. 22 ; v. 21×14 செ.மீ. ; vi....... ; vii. திருவாட்சிநகர் மேவும் திருமால் புகழ்களைக் கூறும் கீர்த்தனை நூல். கீர்த்தனைப் பாடல்கள் ஒவ்வொன்றிற்குமுரிய இராக, தாளக் குறிப்புகள் பாடல்களின் முதலில் உள. அஷ்டாவதானம் வே. சேஷாசலக் கவிராயர் முதலிய பலர் இதற்குச் சாற்றுக் கவிகள் பாடியுள்ளனர்; viii. 799/1917/III.

**NR44**

**கெங்காதர ரெட்டியார், காவனூர்**

1181. i. அரிபஜனைக் கீர்த்தனை ; ii. சன் ஆப் இந்தியா அச்சுக் கூடம், சென்னை ; iii. 1916 ; iv. செ.மூ.ப. 16 ; v. 14×11 செ.மீ. ; vi. 0—1—0 ; vii. பஜனைகளில் பாடுதற்கேற்றபடி அமைக்கப்பட்ட சிறு கீர்த்தனைத் தொகுதி. கீர்த்தனங் களுக்கு இராக, தாளக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன. viii. 227/1916/IV.

NR44

**கோபாலகிருஷ்ண ஐயர், பாரதி., ஆனதாண்டவபுரம்.**

1182. i. நந்தனார் சரித்திரக் கீர்த்தனை: திருத்திய பதிப்பு ; ii. த. ராமசாமி நாயுடு அண்டு சன்ஸ், சென்னை ; ஸ்ரீ லட்சுமி நாராயண விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. டிசம்பர், 1917 ; iv. செ.மூ.ப. 160 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—3—0; vii. இசைப் பாடல்களும், உரைநடையும் கலந்து அமைந்த நடையை உடையது. நந்தனார் வரலாற்றுச் சுருக்கம் உரை நடையில், நூன்முகப்பில் தரப்பட்டுள்ளது. பட விளக்கங்களுடன் கூடியது. நூலிறுதியில் சிதம்பரக் கும்மியும் (40) கொடுக்கப் பட்டிருக்கிறது ; viii. 87/1918/IV.

NR44

1183. i. நந்தனார் சரித்திரக் கீர்த்தனை, சிதம்பரக்கும்மி: திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. பி. நாராயணசாமிப் பிள்ளை அண்டு பிரதர்ஸ், சென்னை ; நற்றமிழ் விலாச அச்சியந்திர சாலை; சென்னை ; iii. ஜூலை, 1919 ; iv. செ.மூ.உ.ப. 151 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—8—0 ; vii.... ........ ; viii. 720/1919/ IV.

NR44

1184. i. நந்தனார் சரித்திரக் கீர்த்தனை: முதற் பதிப்பு ; ii. டி. கோபால் நாயகர், சென்னை ; கோல்டன் அச்சியந்திர சாலை, சென்னை ; iii. மார்ச், 1920 ; iv. செ.மூ.ப. 168 ; v. 20×14 செ.மீ. ; vi. 0—12—0 ; vii. பல படங்களும், சிதம்பர நாற்பத்து முக்கோணச் சக்கரப் படமும் இதில் சேர்க்கப் பட்டிருக்கின்றன. இதனோடு, இவ்வாசிரியர் பாடிய சிதம்பரக் கும்மியும் உள்ளது. அதோடு நடராஜப் பத்து, பஞ்சாட்சரப் பதிகம், ஜோதிமயம் என்னும் தோத்திரச் சிறு நூல்களும் இதன் இறுதியில் உள; viii. 1038/1920/I.

NR44

1185. நந்தனார் சரித்திரக் கீர்த்தனை: திருத்திய மூன்றும் பதிப்பு ; ii. கொ. செல்வரங்கம் கம்பெனி, சென்னை ; மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை ; iii. ஜூன், 1920 ; iv. செ.மூ.உ.ப. 160 ; v. 21×14 செ.மீ. ; vi. 0—10—0 ; vii...... .... ; viii. 670/1920/II.

NR44

**கோவிந்ததாஸ், திருசையநகர்**

1186. i. அறிஅறன் இராமாயண பக்திரச கீர்த்தனை: முதற் பதிப்பு ; ii. கு. ஆ. கிருஷ்ணசாமி முதலியார் ; இராஜ ராஜேஸ்வரி பிரஸ், கும்பகோணம் ; iii. செப்டெம்பர், 1916 ; iv. செ.மூ.ப. 32 ; v. 16×13 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. சைவ, வைணவக் கடவுளர்களின்மீது பாடப்பெற்ற கீர்த்தனைகளைக் கொண்டது இந்நூல். பாடல்களுக்கு இராக, தாளக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றன ; viii. 562/1916/IV.

**NR44**

**கோவிந்ததாஸ், திருசிரபுரம்**

1187. இராமாயண பக்திரசக் கீர்த்தனைகள்: முதற் பதிப்பு ; ii. சடகோபதாசர், மதுரை & கலியாணசுந்தரம் பிள்ளை, மதுரை ; முரஹரி அச்சுக்கூடம், சென்னை ; iii. நவம்பர், 1916 ; iv. செ.மூ.ப. 80 ; v. 16×13 செ.மீ. ; vi. 0—5—0 ; vii. இராமபிரானைப் புகழ்ந்து பாடப்பெற்ற கீர்த்தனைகளின் தொகுப்பாகும் இந்நூல். நூதனப் பார்சி சிங்கார வர்ண மெட்டுக்களும் இதில் உள. இதில் வரும் கீதங்களின் வர்ண மெட்டுக்களைத் தெரிந்தவர் பலர் அந்நாளில் இருந்தனர். கும்பகோணம் கே. வி. கதிர்வேல் பிள்ளை, மதுரை வித்வான் சடகோப தாசர் என்போர் இதற்குச் சாற்றுக்கவி பாடியுள்ளனர். பாடல்கள் ஒவ்வொன்றிற்கும் வர்ணமெட்டும், இராக, தாளக் குறிப்புகளும் தரப்பட்டிருக்கின்றன ; viii. 781/1916/VI.

**NR44**

**சங்கரலிங்க நாடார், பா. ச. வே., தூத்துக்குடி**

1188. i. கம்ப காமாக்ஷியம்பாள்மீது பக்திரசக் கீர்த்தனை : முதற் பதிப்பு ; ii. அருணோதய அச்சியந்திரசாலை, தூத்துக்குடி ; iii. நவம்பர், 1920 ; iv. உ.ப. 16 ; v. 20×12 செ.மீ. ; vi. 0—4—0 ; vii. கீள ஈசாலில் குடிகொண்டெழுந்தருளியுள்ள கம்ப காமாட்சியம்மாள்மீது பக்தியுடன் பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டதாகும் இந்நூல் ; viii. 850/1920/IV.

**NR44**

**சங்கரலிங்க நாடார், ச. சு.**

1189. i. தியானமஞ்சரி, முதற் பதிப்பு ; ii. ச. சு. சங்கரலிங்க நாடார், சென்னை ; கார்டியன் அச்சுக்கூடம், சென்னை ; iii. மார்ச், 1919 ; iv. செ.மூ.ப. 16 ; v. 22×14 செ.மீ. ; vi. இலவசம் ; vii. இதில் திருவொற்றியூர் வடிவுடையம்மன், கண்ணன், முருகன், காமாக்ஷியம்மன் ஆகியோர் பேரில், பாடப்பெற்ற துதிப்பாடல்கள் அடங்கியுள்ளன. முத்துச்சாமி

உடையார் அவர்கள் தந்த புகழ்ச்சிப் பாவுடன் கூடியது ; viii. 306/1919/II.

NR44

¶1190. i. சங்கீதத் திரட்டு, மூன்றும் பதிப்பு ; ii. கா. கந்தையா பிள்ளை, யாழ்ப்பாணம் ; மினர்வா பிரஸ், சென்னை ; iii. ஜூன், 1919 ; iv. செ.மூ.ப. 108 ; v. 21×14 செ.மீ. ; vi. ...... ; vii. கிராமபோன் உபயோகிப்பவர்கள் கேட்கும் பாட்டுக்களைப் புரிந்து அனுபவிக்கும் நோக்குடன் பல பாட்டுக்கள் இதில் தரப்பட்டுள்ளன. பாட்டுக்களைப் பாடியோர் பெயரும் சுட்டி, அந்தந்தப் பாடல் களுக்குரிய இராக, தாளக் குறிப்புக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. பாடல் முதற் குறிப்பு அட்டவணையும், பாடியவர் பெயர் அட்டவணை யும் நூல் முதலில் தரப்பட்டிருக்கின்றன ; viii. 1131/1919/III.

NR44

**சம்பந்த முதலியார், ப.**

1191. i. கீதாமஞ்சரி: முதற் பதிப்பு ; ii. ப. சம்பந்த முதலியார், சென்னை ; பியர்லெஸ் பிரஸ், சென்னை ; iii. டிசம்பர், 1917 ; iv. செ.மூ.எ. 124 ; v. 22×14 செ.மீ. ; vi. 0—8-0 ; vii. இதில் நாடகங்களுக்கேற்ற பல பாடல்கள் இராக, தாளக் குறிப்புக்களோடு உள்ளன. இவை, ஆசிரியர் எழுதிய நாடகங் களில் இடம்பெற்றவை. இதில் உள்ள 124 கீர்த்தனங்களும், எந்தெந்த நாடகத்தில், யார் யார் வாய்மொழியாக வருகின்றன என்பது குறித்து ஓர் அட்டவணையும் நூல் இறுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது ; viii. 886/1917/IV.

NR44

**சரவணப் பிள்ளை சாமி, சேலம்**

1192. i. கண்ணப்ப சுவாமிகள் சரித்திரக் கீர்த்தனம்: திருத்திய இரண்டாம் பதிப்பு ; ii. சுந்தர நடராஜ ஐயர், சேலம் ; சச்சிதானந்தம் பிரஸ், சென்னை ; iii. அக்டோபர், 1917 ; iv. செ. மூ. ப. 28 ; v. 22×14 செ.மீ. ; vi. 0-5-0 ; vii. சிவனடியார்களில் ஒருவரான கண்ணப்பரைக் குறித்துப் பாடப்பெற்ற கீர்த்தனைப் பாடல்கள் இதில் உள்ளன. இதற்குச் சென்னையைச் சேர்ந்த, சூளை சோமசுந்தர நாயக்கரவர்கள் உட்பட இன்னும் சிலர் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். 1891-ல் நூலாசிரியராலேயே முதற் பதிப்பு அச்சிடப் பெற்றது. நூலாசிரியரின் வரலாறு முதலில் தரப்பட்டிருக்கிறது ; viii. 845/1917/IV.

NR44

**சற்குரு சுவாமிகள், திருவண்ணாமலை**

1193. i. சற்குரு திருநாம சங்கீர்த்தனங்கள், முதற் பதிப்பு ; ii. கோபால்சாமிப் பிள்ளை, திருவண்ணாமலை ; ஸ்ரீவரலட்சுமி விலாசம் பிரஸ், நெல்லிக்குப்பம் ; iii. ஜூன், 1920 ; iv. செ.மூ.எ. 12;

v. 14×11 செ.மீ.; vi. இலவசம்; vii. இதில், திருவண்ணா மலையில் விளங்கும் சிவனைப்பற்றிய துதிப்பாடல்கள் அடங்கி யுள்ளன; viii. 165/1920/III.

NR44

**சாமிதாசன், வே. சி., தூத்துக்குடி**

1194. i. இன்பரசக் கீர்த்தனப் பதங்கள்; ii.. வே. சி. சாமிதாசன், தூத்துக்குடி; iii. சச்சிதாநந்த அச்சியந்திரசாலை, விருதுப்பட்டி; iv. 1916; v. செ.மூ.எ. 14; v. 21×14 செ.மீ.; vi. 0—1—0; vii. திருச்செந்தூர் சுப்ரமணியக் கடவுளைத் துதிக்கும் தோத்திரப் பாமாலை, காவடிச்சிந்து, சதார கள்ளப் பாட்டுத் தெம்மாங்கு, நொண்டிச்சிந்து, கும்மி, பாஸ்கரன் டிராமா, வர்ணமெட்டுகளில் பாடல்கள் இதில் அமைந்துள. பாடல் களுக்கு இராக, தாளக் குறிப்புக்களும் தரப்பட்டிருக்கின்றன; viii. 716/1916/I.

NR44

1195. i. இன்பரசக் கீர்த்தனைப்பதம்: இரண்டாம் பாகம், முதற் பதிப்பு; ii. வே. சி. சாமிநாத ஐயர், தூத்துக்குடி; வேலாயுதம் பிரின்டிங் பிரஸ், தூத்துக்குடி; iii. 1918; iv. செ.மூ.எ. 10; v. 20×13 செ.மீ.; vi. 0—1—0; vii. இதில், திருச்செந்தூர் சுப்ரமணிய சுவாமி பேரில் பாடப்பெற்ற கீர்த்தனைப் பாடல்கள் அடங்கியுள்ளன. "பாண்டித் தமிழ் நாடெங்கும் புகழ்பெற்ற டிராமாக் கம்பெனியார்கள் யாவரும் பாடி வருகிற புதிய நூதன வர்ணமெட்டுக்கள் இந்நூலில் உள்ளன"; viii. 542/1918/I.

NR44

**சிவகாமியம்மாள், எச்.**

1196. i. தமயந்தி சுயம்வரம்: திருத்திய இரண்டாம் பதிப்பு; எச். சிவகாமியம்மாள், சென்னை; மெர்க்குரி பிரஸ், சென்னை; iii. ஜூன், 1920; iv. செ.மூ.ப. 32; v. 21×14 செ.மீ.; vi. 0—7—0; vii. தமயந்தி சுயம்வரம் இனிய இசைப்பாடல் களால் இயற்றப்பட்டுள்ளது; viii. 72/1920/III.

NR44

**சிவசிதம்பர ஓதுவார்மூர்த்தி**

1197. i. நடராஜ கீர்த்தனை: முதற் பதிப்பு; ii. ரா. ம. குமார சுவாமி பிள்ளை; நூருல் இஸ்லாம் பிரஸ், திருநெல்வேலி; iii. 1916; iv. செ.மூ.ப. 20; v. 22×14 செ.மீ.; vi. 0—1—0; vii. சிவனை நடராஜனாகப் பாவித்து, அவன் புகழ் பாடும் துதிமாலை; viii. 58/1916/III.

NR44

